கே.சி.எஸ். அருணா சலம் எனும் கவிஞர்
கேளிர்க்குக் கேளிர்; பகைவர்க்குப் பகைவர்.
மாந்தர் உலகினில் அன்று. நல்ல
கருத்துல கினில்விளை யாடும் மன்னர்!
தோழனே, என்றொரு சொல்தொல் லுலகில்
சிறந்தது உண்டு! சிவபெரு மானே
தொன்மையில் வாழ்ந்த மனிதனைத் தோழமை
யாகக் கொண்டனன். ஆயினும் பழங்கதை!
இன்றோ கடவுள் எங்கும் தோழனாய்
இல்லை! மாறாத் தொல்லை தருகிறான்.
நேரடி யாக அன்று, அன்று!
தொல்லை யிரும்பிறவி சூழும் தளையை
நீக்கும் நம்சிவன் துயர்தரு வானோ?
என்று கேட்காதீர்! அவன் துயர் தந்ததை
யாமறிந் தோமிலை. ஆனால் அவன்றன்
பெயரில் உலாவும் படைபரி வாரம்
விளைத்திடும்தொல்லை தாங்குதற் கில்லை!
எல்லைக ளற்றஎம் சிவன்பெயர் கூறி
அடிக்கொரு சாதி அமைத்தனர் அந்தோ!
எந்தை இறைவனைக் காணவும் காசு
கேட்கிறார்; குருக்களும் கேட்கிறார் தட்சணை!
மடாதி பதிக்கோ பாதகா ணிக்கை!
இவைபோ தாவென ஏராள மான
காணி பூமிகள்! இந்தக் கொடுமையால்
"கடவுள் தோழன்" என்றசொல் பொய்த்துப்
போனது! தோழமை என்ற சொல்லில்
புதிய தெம்பினை ஊட்டினான் வியன்மிகு
ஞாலத் துதித்த லெனின் என் பானே!
நெஞ்சொடு நெஞ்சும் தோளொடு தோளும்
தோய்ந்த தோழமை வாய்ந்திடச் செய்து

*புரட்சியைக் கண்டு புதியதோர் உலகம்*
*சமைத்தனன்! அத்தகு தோழமை உலகில்*
*தோய்ந்த நெஞ்சினர் கேண்மை மிகுந்த*
*கே.சி.எஸ். அருணா சலம்வள் ளுவனை*
*நண்ப னாக்கி நடமாடச் செய்வார்*
*தோழமை என்பது வாழ்வின் சமமே!*

முடிப்பு:

*கேளிர் எனத்திகழ் நண்பர் கே.சி.எஸ்.*
*அருணா சலம்இங் குணர்ந்து காட்டிய*
*உழுவ லன்புடை உற்ற நண்பன்*
*வள்ளுவன் தன்னைக் கண்டோம்! வள்ளுவன்*
*நட்பது இனிய நட்பே! உற்றுழி*
*உதவும் நட்பு! முகமலர்ந் தேய்க்கும்*
*நட்பது வன்று; அகமலர்ந் துவக்கும்*
*நிலைத்த நட்பாம் வள்ளுவன் நட்பே!*
*காதலிற் சிறந்தது கவினுறு நட்பே*
*வள்ளுவன் என்ற நண்பனைப் பெற்று*
*நாட்டினில் சிறப்பினை எய்துவோ மாக.*

## 4. கவிஞர் ஆத்மநாதன்

அறிமுகம்:

*ஆத்ம நாதன் அறிவுடை நம்பி*
*இன்புறு நல்ல கவிஞர்வள் ளுவரைத்*
*தாயாய்க் கொண்டு தமிழ்க்கவி பாடுவார்!*
*ஊனுடை உடலில் உணர்வது நிறைந்த*
*உயிரையும் ஒருங்கே வளர்ப்பவள் தாயே!*
*நந்தம் வள்ளுவன் ஆன்மா விற்கும்*
*அழகிய வடிவம் தரும்தாய் என்றே*

*வடித்துக் காட்டும் ஆத்ம நாதனின்*
*நயப்புறு கவிதைச் சுவைநலம் பருகுவோம்!*

முடிப்பு:

*எம்மருந் தாய்எனை ஈன்றவள் ளுவத்தாய்*
*பசப்புறு உடலின் புணர்ச்சியால் ஈன்றாள்*
*இல்லை! அவள் அறிவறிந்து பெற்ற*
*மகன்யான்! ஈன்று புறந்தரல் ஒன்றே*
*கடனெனச் சொன்னார். வள்ளுவத் தாயோ*
*ஈன்று புறந்தந் தெம்மைப் பேணி*
*வளர்த்துப் பெருமை பலப்பல சேர்த்து*
*அழிவிலா இன்பத்தில் ஆழ்த்தும்தா யானாள்!*

## 5. கவிஞர் குடியரசு

அறிமுகம்:

*முதுல கத்தினில் முடியர சொழிந்து*
*குடியர சோங்கி வளரும் நாளிது!*
*இங்கே குடியர சேவரு கின்றார்.*
*குடியர சதனில் எல்லோரும் ஓர்குலம்;*
*ஆங்குயர் வில்லை; தாழ்வு மில்லை!*
*ஆனால், இந்தக் குடியர சிங்கே*
*உலகு புகழும் உயர்வள் ளுவனை*
*உத்தமச் சேவக னாக்க வருகிறார்!*

முடிப்பு:

*வள்ளுவன் தன்னைச் சேவக னாகக்*
*கொண்டால் வாய்ப்பேச் சதற்கிட மில்லை!*
*குறிப்பிற் குறிப்பறி வள்ளுவன் அன்றோ?*
*கோபமும் தாபமும் அவனிடம் இல்லை!*
*ஏவா மற்பணி இயற்றுநற் சேவகன்*

*மூவா மருந்தாய் முழுதுற நின்றான்*
*கண்படு சோம்பல் கவலையில் வீழ்ச்சி*
*உற்றபோ தெல்லாம் உறுதுணை யாகி*
*நிற்றநற் சேவகன் எத்தனை பணிகள்*
*நந்தமக் காற்றி நலிந்தனன். ஆனால்*
*புகழ்மிகக் கொண்டான். பொருளெதும் கேட்டே*
*தொல்லைப் படுத்தினன் அல்லன் அவனை*
*நல்லதோர் பாட்டால் நாட்டினர் கவிஞர்*
*குடியர சே, அவர் கொற்றம்வாழ்ந் திடுக!*

## 6. கவிஞர் புலமைப்பித்தன்

அறிமுகம்:

*பித்தன் எனும்பெயர் பிறவா யாக்கைப்*
*பெரியோ னுக்கும் உண்டுல கிற்குப்*
*பித்தன் ஒருவனே யுண்டுஅவன் சிவனே!*
*பித்தன் எனிலோ தன்னல நாட்டம்*
*இன்றியே உலகம் பிழைத்து வாழ்ந்திட*
*உழைப்பவன் என்பதே உறுபொருள்! இன்றோ,*
*பெட்புறப் பிறர் நலம் எதுவும் பேணாது*
*தன்னலம் பேணித் தருக்கி வீழ்ந்து*
*மூளை பிறழ்ந்து நோய்ப்பட் டோரை*
*பித்த னென்று பேசு கின்றனர்.*
*இதுபெரும் பிழை! இதோ வருகிறார் புலமைப்*
*பித்தன் இவரின் புலமைபொன் னினுக்கும்*
*பொருளி னுக்கும் அன்றே! அறிவுப்*
*புலமைக் கேயாம். ஆதலின் இவரும்*
*புலமைப் பித்த ரானார். புலமைப்*
*பித்தனால் வான்புகழ் வள்ளுவன் தன்னை*
*அணுகா தந்தோ காதலி யென்றே*

கண்சாடை காட்டுவ தேனோ அறியோம்!
புலமைப் பித்தனுக்குக் காதற் பித்தேன்?
காத்து இருந்து கேட்போம் புகழுறு
வள்ளுவன் றன்னைக் காதலி யாக்கி
விளையாடு கின்ற விந்தையைத் தானே!

முடிப்பு:

வள்ளுவன் தன்னைக் காதலி யாக்கிய
வளமிகு கவிதை கேட்டோம். அடடா!
வள்ளுவன் வழங்கிய காதல் இன்பம்
விண்ணும் மண்ணும் கடந்தபே ரின்பம்!
வள்ளு வனைநாம் எப்படி யேனும்
பார்க்கலாம் பலர்புகழ் ஞாயிறே போலப்
பலர்புகழ் அறிவின் ஞாயிறாம் வள்ளுவன்!
வள்ளுவப் பேரொளி வையக மெங்கணும்
பரவுக! இடர்கள் நீங்குக! எங்கும்
இன்பம் தழைத்துஇவ் வுலகம் வாழியவே!

# 3. தேவகோட்டை குறள்விழாக் கவியரங்கம்

தேவகோட்டை திருக்குறட் கழகம்
9–8–69இல் நிகழ்த்திய
குறள் விழாக் கவியரங்கத் தலைமைக் கவிதை

*கோட்டை பலநாம் கொண்டிலோம் எனினும்*
*தெளிவுறத் தமிழைத் தெரிந்திட தேவ*
*கோட்டையை நமது கோட்டையாய்க் கொண்டோம்*
*இந்தக் கோட்டையில் எந்த மேடை*
*ஆயினும் அந்த மேடையில்ந மக்கும்*
*ஓரிட முண்டு! இவ்வா றுறவினைப்*
*பெருக்கி எம்மை வளர்த்திடும் பெருமையோர்,*
*குறட்கழ கத்தினர்! கொள்களம் நன்றி!*
*பட்டி மன்றமே கேட்டுச் சளைத்துப்*
*புளித்துப் போன துன்பம் ஓர்புறம்*
*தொடர்ந்து பிடிக்கும் வேட்கை ஓர்புறம்*
*இவற்றிடை எண்ணி எண்ணிப் போராடி*
*தேர்ந்தொரு வழியைத் தெரிந்தனர்! இவரைக்*
*கவிஞ ராக்கிக் காணுவோம் என்றே*
*கவியரங் கேற்றக் கருதினர் போலும்!*
*கவிதை உலகம் நமக்குப் புதியது*
*தேர்ந்து கவிசொலும் தேசிக னல்லன்;*
*ஆனந் தத்தமிழ் அழகுறப் பாடும்*
*அமிர்த லிங்கனும் அல்லன்; இன்பக்*
*கவிபொழி கண்ண தாசனு மல்லன்*
*வடிதமிழ்க் கவிமுடி யரசனு மல்லன்*
*பழகு தமிழ்க்கவி நாமே! யாரும்*
*எமைநோ காதீர், ஏற்றிவைத் தவரை*

நோமின்! யாமிவண் நுவலும் கருத்துச்
சுவையது மாறினும் அவையீர் நுமது
கனிந்தபே ரன்பு மாறா தென்பதே
உண்மை! நமதுளம் கனிந்தவாழ்த் துக்கள்!

உலகெலாம் போற்றும் உயர்புகழ் வள்ளுவர்
உளங்கள் அனைத்தும் ஒருங்கே இணைய
இசைந்த நெறியினை இன்பத் தமிழில்
குவலயம் தனக்குக் குறள்நூ லாக்கினர்
பெருமை பெற்றனர்; பெரும்புகழ் சேர்த்தனர்
வண்மைத் தமிழில் வள்ளுவர் தருகுறள்
வாழும் மாந்தர்க்கு இனிய மருந்தாம்.
சிதறிக் கிடக்கும் சிந்தை யனைத்தையும்
ஒருங்கு சேர்த்தினி தொன்றிட உளத்தில்
ஒருமைப் பாட்டிற் குரியவித் திட்டே
இனிய உலகையும் இன்ப உலகையும்
காட்டும் திருக்குறள் வாழிய வாழிய!
நாடறி புலவர் நந்தமிழ் வள்ளுவர்
நாடெலாம் பார்த்து நாடியும் பார்த்துக்
குறைகள் நீங்க நிறைகள் ஓங்க
வழியும் காட்டி வாழ்கஎன் றாரே!
நிலத்தினைத் திருத்தி விளைத்திடும் தொழிலை
வேளாண் மையென விளம்பிட லாகும்.
உயிர்த்திறன் தெரிந்து உயர்நலம் நல்கி
நாடொறும் வளர்ப்பதே வள்ளுவம் ஆகும்
வள்ளுவம் வானினைப் பாடுவ தன்று
மண்ணினைச் செழிக்கப் பாடுவ தாகும்
வள்ளுவம் கடவுளைப் பாடுவ தன்று
மானுடம் வளம்பெறப் பாடுவ தாகும்.
வள்ளுவம் கோட்டைக் குரியகோ மகனைப்

பாடுவ தன்று பழகிடும் சராசரி
மனிதனைப் பாடும்; மனிதனைப் பேணும்.
ஈரா யிரம்ஆண் டுகளின் முன்னர்
உலகம் இப்படி இருந்தது இல்லை
நெடுந்தொலை வாகப் பிரிந்து கிடந்தது!
பழகும் பண்பு இன்மையால் அந்நாள்
ஒருல காக இல்லை; உறவிலை.
முத்தும்முத் தமிழும் கொழித்தநம் தமிழக
வரைப்பில்மு வேந்தர்செய் வம்பும் கணக்கில
பேதைமை நிறைந்து பெருகிய அந்நாள்
பேதங் களைந்து பெருமையைச் சேர்த்த
வள்ளுவர்க் கீடுவை யகத்தினில் யாரே?
சண்டையும் போடலாம், சதியும் செய்யலாம்
கொலையும் புரியலாம் என்றெலாம் கூறும்
நூல்களும் உண்டு இவற்றினை நோக்கின்
ஒன்றாக நல்லது கொல்லாமை என்று
ஒருகுரல் கொடுத்தே ஓதிய குறளுக்கு
ஈடொரு நூலெங் கெழுந்தது? கூறீர்!
பாரிடை வாழ்க்கை பரந்து பட்டது
உயிரின நாயகன் உடலெனு ஆடையை
உடுத்தி உலக மென்னும் அரங்கில்
வாழ்க்கை நாடகம் மன்பதை என்னும்
பார்வை யாளர்முன் ஆடுகின் றனனே!
அவை, களிப் பெய்த ஆடுவோ ருண்டு
அவை, முகஞ் சுருங்க ஆடுவோ ருண்டு
அவை, அஞ் சிடவே ஆடுவோ ருண்டு
அவை, நைந் தழவும் ஆடுவோ ருண்டு
ஆனால் ஆசான் வள்ளுவன் குறளில்
அவைமகிழ் வெய்தவும் ஆடுவோன் மகிழவும்
அனைத்துப் பொருட்கும் ஆதியாய் நிற்கும்

அகர முதல்வன் அகம் மகிழ்ந் திடவும்
ஆடுந் திறனை மனிதன் அடைந்திட
ஆக்கி ஆக்கி அணிசெய அளித்தான்!
வள்ளுவன்,
அடித்து வளர்க்கும் ஆசா னல்லன்
அணைத்துக் கோழை யாக்குவோ னல்லன்
துறைதொறும் துறைதொறும் மனிதனைத் தூண்டி
உயிரிற் கலந்து உடலிற் கலந்து
வளர்த்திடு கின்ற பேரா சிரியன்!
அறிவுத் துறையில் அருமை வள்ளுவன்
பேரா சிரியனாய்ப் பிறங்கிடு கின்றான்
குறையினைக் காட்டிக் குணம்தரும் பரிவில்
அன்னையாய்த் திகழ்வான்; அரும்பிணி அகற்றும்
பீடுசால் வாழ்வைப் பெற்றுத் தருவதில்
மருத்துவன் அவனே! மானுடச் சாதி
மாட்சிமை எய்தும் இலட்சிய வாழ்வினை
ஏற்றிடச் செய்வதில் இணையிலாத் தலைவன்!
இங்ஙனம் பலர் புகழ் ஞாயிறே போல
இயங்கிடும் வள்ளுவப் பெருமகன் ஏற்றம்
வாயெலாம் இனிக்க பாடினோம்! பாடிப்
பரவிப் பரவச முற்ற வேளையில்
வள்ளுவன் நம்மெதிர் வந்து தோன்றினன்.
கண்ணீர் மல்க கமலத் திருமுகம்
வாடித் துயர வடிவமாய் நின்றான்!
ஐயா, எனஅவன் அடியினில் வீழ்ந்து
வணங்கி நின்று "மாட்சியிற் பெரியோய்,
துன்பம் சுடச்சுட ஒளிபெறும் வாழ்க்கை
என்றே ஓதிய இணையிலாப் புலவ,
உமக்குமோ துன்பம் உற்றது? சுடச்சுட
ஒளிதரும் துன்ப மதற்குநீ துளங்கல்

ஏன்?"என வினவினோம். வான்புகழ் வள்ளுவன்
ஆற்றா மையுடன் "அருந்தமிழ் மகனே,
'யாதும் ஊரே, யாவரும் கேளிர்'"
என்றுரை செய்த இனியஎம் ஆசான்
மொழியையே யாமும் வழிமொழிந் துள்ளோம்.
"பிறப் பொக்கும் எல்லா உயிர்க்கும்"
என் றோதினோம்.

நிலவினைத் தொடும் நீள் மாளிகை யாயினும்
மண்திணி குடிசை யதனில் ஆயினும்
பிறந்த மக்கள் அனைவரும் தமது
பேரினைக் கொண்டு வந்தது மில்லை
பிறப்பில் சாதிகள் தாங்கி வரவிலை.
'பட்டா' வுடனோ 'பாங்கு'க் கணக்கொடோ
பிறந்தது மில்லை செயற்கையிற் பிறந்தவே
தானுறு துன்பம் தாங்கலாம் ஆனால்
சுற்றிச் சூழ்ந்து கிடக்கும்சுற் றத்தைச்
சுடும்துன் பத்தைத் தாங்கக் கூடுமோ?
'துன்பம் துடைத்து ஊன்றுதூ ணாக
இலங்கிட லன்றோ இணையிலா வாழ்க்கை!
என்றும் குறளில் எடுத்தினி துரைத்தோம்
நிச்சலும் கொல்லும் நிரப்பினில் மானுடம்
கிடந்திணைத் தழியும் கேட்டினைக் கண்டே
"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யா" னெனக் கும்பி
கொதிக்கக் குமுறிக் கூறினோம்! மண்ணில்
நிகழ்ந்தது என்ன? மாற்றம் நிகழ்ந்ததா?
ஈரா யிரம்ஆண் டுகளின் பின்னர்
எனக்கீ ராயிரம் ஆண்டு விழா, ஏன்?
நாளும் நாளும் நாயினும் நலிந்திடும்

எந்தமிழ் நாட்டு மக்களைக் காணின்
கலங்கா திருக்க என்மனம் கல்லோ?
சந்தடி மிக்க சாதிகள் கடந்த
புத்தம் புதிய உலகினைக் காண
விரும்பினேன் அதனால் அருங்குறள் நூலில்
நந்தமிழ் நாட்டுப் பெயரையும் மறைத்தேன்
தாய்மொழிப் புகழையும் சாற்றினே னில்லை.
இத்தகு பொதுமை ஏய்ந்தநம் குறளைக்
கையினிற் கொண்டும் கரவுநெஞ் சுடனே
வேற்றுமை காட்டி வேதனை பெருக்கல்
நெறியோ? முறையோ? நிகழ்த்துக. அன்றியும்
'ஆகுல நீர பிற' வென் றறைந்ததை
ஓர்மின், ஓர்மின்! விழவொலி போதும்!
விதித்த நெறியினை மதித்துநீர் ஏற்பீர்
ஒருகுல மாவீர் உற்றநோய் தீர்ப்பீர்
உயிர்க்குறு துணையாய் உதவிகள் புரிவீர்
வீடும் வீதியும் தூய்மை செய்தல்போல்
"மனத்துக் கண்மா சில்லா வாழ்க்கை
வாழும் நெறியினை வகைதெரிந் தேற்பீர்!"
என்றான் வள்ளுவன் ஈண்டுவந் திருக்கும்
வண்டமிழ்ப் புலவீர்! தேவ மாநகர்
சாந்தா லாகி கோட்டை யன்று.
தேவ கோட்டை! தெள்ளு தமிழின்
சுவையினைக் கண்டு தூய்தமிழ்க் கோட்டை!
தேவும் காட்டுவர் தேவையும் நிறைப்பர்
பொருளின் தேவையை அன்று உயிருக்கு
உறுதி பயக்கும் ஒளிச்சுவை சேர்ப்பர்
இவர்முன் பாடுவீர் எழிற்றமிழ்க் கவிகாள்
வள்ளுவன் அடிச்சுவ டொட்டிப் பாடுக
குப்பைகூ ளங்களைக் கோபுர மாக்கேல்!

*குனிந்து கிடக்கும் மனிதனைக் கோபுரம்*
*ஆக்கிடப் பாடுக; அழகுறப் பாடுக!*
*காரி யங்களைப் பாடிட வேண்டா*
*கார ணங்களைக் காட்டிப் பாடுக!*
*நோய்விரித் துறையேல்! நோய்க்குறு மருந்தினை*
*இதுவெனக் காட்டி எழிலுறப் பாடுக!*
*வறட்சியால் வாடிக் கருகிய மனங்கள்*
*கவிதை மழையால் களிப்புற் றோங்கவே*
*பாடுக புலவீர், நீடுக உலகே!*

கவிஞர்கள் அறிமுகமும் முடிப்பும்

## 1. கவிஞர் சொ. சொ. மீ. சுந்தரம்

அறிமுகம்:

*வள்ளுவன் கண்ட மாண்புறு கடவுள்*
*பேரும் ஊரும் கடந்து பிறங்கிடும்*
*எனினும் அதற்கென இயல்வடி வுண்டு.*
*அவரவர் முடிபாய் அமைவதவ் வடிவம்!*
*வள்ளுவன் கண்ட கடவுள் வகைவகை*
*அப்பமோ டவல்பொரி ஆர்ந்தது மில்லை.*
*எழுத்துகட் கெல்லாம் அகரமே முதலாம்.*
*ஆருயிர்க் கெல்லாம் அவனே முதலாம்*
*முதலென மொழிவது 'முதலே' யன்று*
*வாழ்க்கையின் முதலென் பதுவே பொருளாம்!*
*அவன்தன் கருணையை அகர வடிவில்*
*அமைவுறக் காட்டும் அழகுதான் என்னே!*
*அகர எழுத்தினை ஆர்ந்தினி தோர்க!*
*மேலே முழுமை மேவிய வட்டமாய்த்*
*தொடங்கி வளைந்துபின் கீழே யிறங்கிச்*
*சென்று நின்றுபின் வளைந்து சிறிது*

மேலிருந் திறங்கிய வழியினை நோக்கிச்
சென்றுஅவ் வளைவினைக் கடந்து நீண்ட
நேர்கோ டதனில் நிமிர்ந்து முடிவது!
இஃதென எழுத்தா? இல்லை. பொருளாம்.
குறைவிலா நிறைவு கோதிலா அமுது
முழுநிறை முழுமுதல் தனைஉணர்த் துவதே!
வட்ட வடிவமாம் மேலோன்! மேலோன்
மேலே இருப்பவன் ஆகான் ஆகான்!
கீழிருப் பவனை மேலாக் குபவனே
மேலோ னாவான். மேதகை வள்ளுவன்
கண்ட கடவுள் மேலே யிருந்து
கீழே யிறங்கிக் கேடெனும் தாழ்வில்
தங்கிக் கிடந்து தவிக்கும் உயிர்களை—
சிறுமையைப் பெருமையாய்க் கொண்டு, களித்துக்
கிடக்கும் உயிர்களை நோக்கிக் கீழே
இறங்கி அவற்றுடன் இணைந்து நின்று
அணைத்து மேலே அழைத்துச் சென்றிட
வான்பழித் திம்மண் மீதுவந் தருளி
நேர்பெற இருநிலை நிறுத்தியே வீடு
பேறளித் திடும்அப் பெற்றியை உணர்த்தும்!
இத்தகைக் கடவுளை இணையிலா வள்ளுவன்
அகர வடிவில் அமைத்துக் காட்டினன்!
வள்ளுவன் கண்ட கடவுளைக் காட்டிட
புதிய தலைமுறைக் கவிஞர் பொங்கிடு
சொற்றமிழ்த் தேனில் சொக்கிட வைக்கும்
சுந்தரக் கவிஞர் வந்தனர்! சுவைமிகு
பாட்டினில் காட்டுவர், பாங்கொடு நமக்கே!

முடிப்பு:

*சொக்கத் தமிழில் நமையெலாம் சொக்க*
*வைத்த சுந்தரம் வள்ளுவன் பார்வையில்*
*கடவுளைக் காட்டினர்! கண்டுநாம் சுவைத்தோம்!*
*வாழிய சுந்தரம் வண்டமிழ் எனவே!*

## 2. கவிஞர் மீனவன்

அறிமுகம்:

*கடவுளை யடுத்துக் கருதத் தக்கவன்*
*தலைமகன் ஆவான். அலைகடற் கரையின்*
*மணலையும் எண்ணிக் கணக்கிடல் மானும்!*
*ஆனால் இந்த அவனியின் மக்கள்*
*தொகைகணக் கினில் தொடரும் அடங்காமல்!*
*கதிரவன் தோன்றி மறைகிறான். ஆனால்*
*கரு, வாய் மறைத்தவர் தம்மைக் காண்கிலம்!*
*பிறந்த மக்களில் பீழைக ளாகிச்*
*செத்து, மடிபவர் எத்தனை, எத்தனை?*
*ஆன்ற அறிவும் ஆள்வினைத் திறனும்*
*தேர்ந்து தெளிந்து தொழில்பல இயற்றிப்*
*பொருளினைப் பெருக்கும் துறைபல கண்டு*
*பெரும் பொரு ளீட்டிப் பீடுற வகுத்துப்*
*பலரொடும் பகிர்ந்து வாழும் பண்பினன்*
*எவனோ அவனே தலைமக னாவான்!*
*இனநலம் சார்தலும் குணநலன் காத்தலும்*
*கன்னித் தமிழை யொத்த காரிகை*
*தன்னைக் காதல் புரிந்துளங் கலந்து*
*மனையறம் நடாத்தி மண்ணகம் புகழ்ந்திடும்*
*மக்கட் பேற்றினைப் பெற்று மாண்புசால்*
*சிறப்பில் தங்கும் சீரியோன் தலைமகன்!*

*பண்டு மீனவன் பைந்தமிழ்த் தலைமகன்.*
*அத்தலை மகனின் அரும்பெயர் பூண்ட*
*பாநல மிக்க மீனவன் இங்கே*
*வள்ளுவன் கண்ட தலைமகன் மாண்பினைப்*
*பாடுவர் தேந்தமிழ் பருகிநாம் மகிழவே!*

முடிப்பு:

*மீனவன் செந்தமிழ்த் தேனினைக் குழைத்து*
*வள்ளுவன் கண்ட தலைமகன் மாண்பினைத்*
*தெள்ளத் தெளியப் பாடினர்! நம்மில்யார்*
*அத்தகு தலைமக னாவதற் குரியோர்?*
*காலம் கரைத்துக் கோலமங் கையரின்*
*கரந்தொட் டேகருப் பாதையை இயக்கி*
*இந்த உலகினுக் கிடர்சூ ழாதீர்!*
*காரியம் ஆற்றுமின்; கவலையைப் போக்குமின்,*
*தாரணி போற்றும் தலைமகன் ஆகுமின்!*

## 3. கவிஞர் அரு. சோமசுந்தரம்

அறிமுகம்:

*பிறவா யாக்கைப் பெரியோன் தானும்*
*பெய்வளை உமையாள் கேள்வனாம். அவன்தான்*
*பிறவா யாக்கையோன் மட்டு மல்லன்*
*ஒப்பிலா மங்கை ஒருத்தியை என்றும்*
*பிரியா யாக்கையைப் பெற்றவ னன்றோ?*
*"குவளைக் கண்ணி 'கூறன் காண்க!*
*அவளும் தானும் உடனே காண்க!"*
*என்றே மணிவா சகமிதை இயம்பும்.*
*இன்ப நெறியிது இன்றமிழ் நெறியாம்.*
*தலைமகன் எனில்தலை மகளுமுண் டலவா?*

*வள்ளுவன் வகுக்கும் தலைமகள் சாயலை*
*நல்லதோர் கற்பின் நலத்தினைப் பீடு*
*நடையினைக் கணவர்க் களித்திடும் நங்கையை*
*மங்கல மாகிய மனையின் மாட்சியை*
*வளத்தினைப் போற்றி காத்திடும் பெட்டியை*
*அயர்வினை யகற்றும் அருமருந் ததனை*
*சோர்வினை நீக்கும் சுடரொளிப் பொற்பை*
*இன்பம் தரும்இணர் எழில்பூங் கொடியை*
*வையகம் செழிக்க வந்தமா மழையை*
*எழில்தலை மகளை இணையிலாப் பெருமையை*
*சிரித்த முகத்தினர்; செந்தமிழ் நாவினர்;*
*தறுகண் ஆண்மைத் தகைநலத் தலைவன்*
*கண்டு காமுறும் பெண்மை நலத்தினர்*
*நெடுங்களம் நின்ற தடாதகைப் பிராட்டியைச்*
*சொக்க வைத்துத் தூமணம் கொண்ட*
*சோமசுந் தரப்பேர் பெற்றஇச் சுந்தரம்*
*சொற்றமிழ்ப் பாட்டால் காட்டியே நெஞ்சம்*
*கொள்ள வருகிறார்: கொழிதமிழ் எழுத்தே!*
*அள்ளிப் பருகுவம் அவர்தமிழ் அமுதே!*

முடிப்பு:

*பேருல கந்தனில் பிறந்த வள்ளுவன்*
*வாசுகித் தலைவி மாசில்நங் கையுடன்*
*வாழ்ந்து கண்ட நல்லின் பங்களைத்*
*தலைமகள் தன்மையாய்த் தரணிக்குத் தந்தனன்*
*எல்லோரும் வள்ளுவ ராகிட இயலுமோ?*
*வாய்த்தவ ரெல்லாம் வாசுகி யாவரோ?*
*ஏங்கி இளைத்திட லால்பய னில்லை!*
*எய்திய மனைவியை இவள்தான் தலைமகள்*

*என்றே நுந்தம் இதயம் தேறி*
*மகிழுமின், மகிழுமின்! செய்வதென் பிறிதே?*

## 4. கவிஞர் சக்தி சரணன்

அறிமுகம்:

*கூடும் குடும்பத் தொழிற்சாலைதனில்*
*ஓய்வொழி வில்லா உற்பத் தியினால்*
*இருபத் தாண்டில் இரண்டு நூறு*
*கோடிக் கணக்கில் குழந்தைகள் பெருக்கம்!*
*நிக்சன் அனுப்பிய வலிமைத் தோளான்* (Armstrong)
*நிலவின் மீது நிமிர்ந்து நடந்தது*
*பெரிய சாதனை! எனினும் அருமை*
*நந்தம் நாட்டின் மக்கட் பெருக்கச்*
*சாதனைக் கீடாய்ச் சாற்றுதல் கூடுமோ?*
*பாரத பூமியில் பல்கிடும் மக்கட்*
*பெருக்கினை யன்றிப் பிறிதென்ன கண்டோம்?*
*பிறந்ததாய் நாடு பெரும்பய னுறவே*
*வாழ்ந்து வளத்தொடு புகழினைச் சேர்ப்பவர்*
*மிகமிகச் சிலரே! மீந்தவர் பலரே!*
*இருதிறப் பாலோர் இணைந்து கூடின்*
*மக்கள் தோன்றுதல் மாநிலத் தியற்கை*
*எனினும் நன்மக்கட் பேற்றினை எய்திடல்*
*மேவிய இயற்கை விளைவினால் அன்றே!*
*உடலுறு காமக் கலவியால், உலகச்*
*சுமையெனும் மாக்களே தோன்றுவர். உளமார்*
*இன்பக் காதலின் இயைந்த கலவியே*
*நன்மகப் பேற்றினை நல்குவ தாகும்.*
*உடற்பசி தணிந்து உளப்பசி மிகுந்து*
*சுடுநெருப் பாகத் தோய்நிலை மாறிக்*

குளிரும் தென்றல் குணத்தினைப் பெற்றுத்
தோன்றும் நிறைமைக் காதலில் சுடரும்
அறிவா ராய்ந்த அணிநல உணர்வொடு
ஆரத் துய்த்திடின் அன்புறு மக்கட்
பேற்றினைத் தருமெனப் பேசினேன்! மேலும்
மங்கல மனையின் பயன்நன் மக்கட்
பேறென மொழிந்தான். பெருமையார் குடும்பம்
இஃதெனும் இனிய பெயர்எப் படியோ
கூடிவாழ் வதனால் கூடுவ தில்லை!
கொழிக்கும் செல்வச் செழிப்பிலும் இல்லை;
தொடக்க வாழ்வில் சூழ்வதும் இல்லை;
சிலபல ஆண்டுகள் சென்று மனையறப்
பரிசிலாய்த் தோன்றிய நன்மகப் பேற்றினைக்
கண்டபின் அன்றோ நந்துவ தாகும்.
என்னோற் றான்கொல் இவன்தந் தையென
இசைத்திடும் வள்ளுவன் எழில்மொழி சான்று!
சென்றன சென்றன வாகுக! இனிமேல்
ஓர்ந்தும் உணர்ந்தும் வாழுமின் உலகீர்!
வள்ளுவன் கண்ட நன்மகன் வழங்கி
நாடு புகழ்பெற நல்லறஞ் செய்ம்மின்!
நாடிய அறம்பல வற்றிலும் நன்மகன்
தந்தையா வதூஉம் தாயா வதூஉம்
பேரற மாகப் பிறங்கிடும் காண்க!
இத்தகு நன்மகன் இயல்பினை சத்தியைச்
சரணம் அடைந்த சந்தக் கவிஞர்
உளத்தினை உருக்கிடும் உயர்கவி பொழியும்
சத்தி சரணன் சத்துள தமிழில்
பாடுவர் கேட்போம்; பயன்மிக வுறவே!

முடிப்பு:

*சத்தியைச் சரணம் அடைந்த சத்தி*
*சரணன் தூய சத்தியே இனிய*
*நன்மகன் தன்னை நல்கிடு மென்றே*
*பொன்கவி பொழிந்தார் நம்செவி குளிர!*
*ஒருநொடிப் பொழுதிலிங் குள்ளம் தெளிந்தீர்,*
*மனைக்குச் சென்றதும் மாலைப் பொழுதில்*
*இந்தநல் உணர்வு ஓங்கிடில் இனிதே*
*நாடும் நாமும் நனிசிறந் திடுவோம்!*

## 5. கவிஞர் மா. கண்ணப்பன்

அறிமுகம்:

*இயல்பில் எல்லாரும் பெரிய ரல்லர்.*
*பெரிதும் முயன்றே பெரியோ ராயினர்.*
*முன்னே மூத்தும் பெரியோ ரானவர்*
*கேண்மை யைக்கொளக் கிளர்ந்து செயற்படல்*
*பெரியோ ராகும் பெருநெறி யாகும்.*
*நம்மில் பெரியவர் யாருளர்? ஊரார்*
*தத்தம் மனத்தன ஆயிரம் ஆயிரம்*
*பேசி ஏசினும் பெரும் பொருள் பதவி*
*பெற்றவ ரெல்லாம் பெரியவர் இன்றே!*
*கல்தோன்றி மண்தோன் றாக்கா லத்தே*
*முன்தோன்றி மூத்த குடியினில் சதியால்*
*சாதிகள் வகுத்துத் தமிழினம் தன்னை*
*இழிந்த சாதியாய் இழுத்துத் த்ள்ளிச்*
*சதுரா டியஒரு சழக்கினைச் சாடித்*
*தமிழன் தலைநிமிர்ந் திடவே செய்த*
*தந்தை பெரியார் பெரியா ரேதான்!*
*பெரியார், பெட்புறு திட்டம் அமைத்துப்*

பேதுறு துன்பம் வருமுன் பேணி
ஆன்ற அறிவும் ஆள்வினைத் திறனும்
பெருமையும் சேர்ப்பவர் என்றனன் வள்ளுவன்.
இத்தகு பெரியோர் எங்களை வர்க்கும்
கிட்டிடக் கூடுவர்? நாடொறும் நமக்குக்
கிடைப்பவர் நம்மை உயர்த்துவோ ரல்லர்.
நம்முடைத் தோளில் நாக ரிகமாய்
ஏறிஉட் கார்ந்துகொண் டியன்றவா றாட்டித்
தம்மை உயர்த்தித் தம்காரியங்கள்
சாதித் துக்கொளும் 'கனவான்'களையே
காணுகின்றனம் உலகியற் கவிஞன்
வள்ளுவன் பெரியோர் இவரென வகுத்துக்
காட்டினன். அப்பெரி யோர்தமைக் கனிந்த
பேரன் பதனிற் பெரியகண் ணப்பன்
பேரினைக் கொண்ட இக்கண் ணப்பன்
கவினுறு கவிதையில் வடித்துத் தருகிறார்!
உண்மையிற் பெரியோன் உயர்கண் ணப்பன்!
உரத்த குரலில் ஓங்கிக் கூறலாம்.
காசினி யில்நம் கண்ணப் பனைவிடச்
சிறந்த பெரியோன் பிறந்தது மில்லை!
அன்பென ஆயிரம் ஆயிர மாகப்
பேசினும் அன்பு பிறங்கிடக் காணோம்.
முகத்தில் பரந்த பள்ளங் களைமுகப்
பவுடரைப் பூசி மூடி மறைத்தல்போல்
சுயகா ரியமெனும் பள்ளம் மறைத்திடத்
தூயஅன் பினர்போல் பூசிப் பேசுவர்.
விழிகளைத் தந்திட வேண்டா. வேதனை
விளைத்திடா திருந்தால் அதுவே போதும்!
பேசா உருவம் பேசிடச் செய்து
உளமார் காதலால் உருகிக் கனிந்து

நாடி நரம்புகள் கொண்ட உருவம்
அன்பின் உருவம தாக மாறியே
விழிகளைத் தந்தஅவ் விழுமியோன் பெயரை
நானிலம் நாடொறும் நினைந்து உயர்ந்திட
என்றே இப்பெயர் எடுத்தகண் ணப்பன்
தங்கத் தமிழில் தாலாட்டுத் தமிழில்
பெரியோன் பெருமை வரிசைகாட் டுவரே?

முடிப்பு:

கவிபா டுவதில் சிறந்தகண் ணப்பன்
கனிவுறக் காட்டிய பெரியோன் கண்டோம்!
பேருல கதனில் அவரைத் தேடிப்
பிடிப்பது எங்கே? பெரிதும் முயலுவோம்.

## 6. கவிஞர் வள்ளியப்பன்

அறிமுகம்:

திரிதரு ஞாலம் தலைகீழ்ப் படாது
நின்றே இலங்கும் நெறிக்குக் காரணம்
சீலத்திற் சிறந்த சால்பே யாகும்.
குறைநிறை ஓரா மல்குன் றனைய
மனிதர் நாளும் இனியவே புரிவர்
இவர்மா மழையினும் ஏத்துதற் குரியோர்?
இவரே தெய்வத்தில் தெய்வமு மாவார்
திண்நிலம் தாங்கும் சீரியோ ராவார்
நலமே ஆற்றிட நானிலம் வந்தவர்
ஏன்பிறந் தோம்என எண்ணுத லின்றி
வலிய வம்புகள் பலப்பல செய்வர்.
சார்ந்தவர் தம்மைச் சாகடித் தன்றோ
மகிழ்ந்திடு கின்றனர்; வாழ்ந்திடு கின்றனர்;

இத்தகைப் பேயர்? இவர்விடும் மூச்சுக்
காற்றினால் வையகம் கருகிப் போய்விடும்!
நிலமகள் நாணிக் கண்மலர் புதைப்பாள்;
வளமெலாம் குன்றி வறியவ ளாவாள்!
சாகுந் தவத்துச் சான்றாண் மையே
உலகத் தேருக் குரியஅச் சாணி!
சிலர்நல் லவராம் செல்வம் சேர்த்திட,
சிலர்நல் லவர்மே லுலக நினைப்பால்,
சிலர்நல் லவராம் அடிஉதைக் கஞ்சி
சிலர்நல் லவராம் இயலா மையினால்
இவரெலாம் நல்லவ ராவரோ? இல்லை!
நல்லன என்பதற் காகவே நாடுவோர்
நல்லவ ராம்அவர் வல்லசான் றோரே!
அவர்தம் இயல்பே நன்மைய தாகும்
வையகம் பிறந்து வாய்மையாற் சிறந்து
மேலோ ராகிய மோகன தாஸ்கரம்
சந்திர காந்தி அண்ணலாம் சான்றோர்
பூமியை உழுது புகழ்பூ ணாது, தம்
புலன்களை உழுது புண்ணி யத்தின்
புண்ணிய மாக மண்ணிடை வாழ்ந்தே
அணிபுகழ் கொண்டார்; அவரே சான்றோர்!
ஊழி பெயரினும் தாம்பெய ராத
ஒருநெறிக் கிலக்கணம் ஒப்பிலா காந்தி
அடிகளின் வாழ்வே! அவர்க்கிணை யாரே?
பாரத நாடே சீறுறு முதலாய்ப்
பாரக மெல்லாம் வாழ்ந்திடப் பறந்தே
ஓயா துழைத்தே உயர்ந்தமா மனிதர்
நேருவை நிகர்த்த சான்றோர் யாருளர்?
மாற்றார் தம்மை மாற்றும் படையாம்
ஆற்றுவார் ஆற்றல் அரும்பணி யென்றான்.

இப்படை ஏந்தி வெற்றியைப் பெற்ற
ஏந்தல்நம் அண்ணா எனில்மாற் றுரைதான்
பகர்வா ருளரோ? பழம்பெருங் காஞ்சியில்
பிறந்து கழகம் பேணி வளர்த்தார்;
ஈரோட் டேந்தலின் எழிற்பா சறையில்
தேரத் தெளிந்தார்; நேருற வளர்ந்தார்
காலம் செய்த கோலத் தாலே
பெரியார் தம்மைப் பிரிந்தனர் அறிஞர்
அண்ணா! அவரைப் பிரிந்த பெரியார்
ஆற்றொணா வெகுளி அளப்பில கொண்டார்.
அன்பில் அளித்த அண்ணாகண் ணீரைக்
'கண்ணீர்த் துளி'யென எண்ணியே கேலி
செய்தார்; வசையெலாம் தொடுத்துச் சினந்தார்;
வாழ்வெலாம் தடுத்தார். ஆயினும் தகைசால்
அறிஞர் அண்ணா பிறர்தீ மைசொலா
நலத்தது சால்பெனும் பெருநெறி நயந்தே
ஒழுகினார்! பேரா உலகிற் பெரிய
வெற்றியும் கண்டார். வியனுறு புகழுடன்
தமிழக அரசினைப் பெற்றநற் சமயம்
பெருமித மின்றிப் பெரியார் தம்மைக்
கண்டிட அவர்மனை கடிதினிற் சென்றே
வாழ்த்துதல் பெற்றே வந்தனர்! அந்தப்
பெருந்தகை மைக்கேது பிறிதொரு தகைமை?
நினைத்திடின் நெஞ்சம் நெகிழ்ந்திடும்; குளிரும்!
சால்பின் மணிமுடித் தன்மைஇஃ தன்றோ?
இத்தகு சால்பின் ஏற்றமார் நெறியே
நாட்டில் நிலைத்திடின் நாடு நலம்பெறும்.
காழ்ப்பங் கில்லை; கலகமும் இல்லை;
காவலும் இல்லை; ஏவலும்! இல்லை
சிந்தைபெற் றோரே சிந்தனை செய்ம்மின்!

*என்றே வள்ளுவன் கண்டசான் றோனை*
*வள்ளி யப்பராம் வளமார் கவிஞர்*
*சாற்றிடக் கேட்டுச் சால்பினைப் பெறுவோம்!*

முடிப்பு:

*வண்மைத் தமிழில் வள்ளுவன் தந்த*
*சால்பினை வள்ளி யப்பன் தக்கவா*
*றுரைத்திடக் கேட்டோம்! உலகிடை வாழ்ந்து*
*காட்டுதல் நந்தம் கடமையே யன்றோ?*

## 7. கவிஞர் பழனி. இளங்கம்பன்

அறிமுகம்:

*வையக வாழ்க்கை வளமுற அமையக்*
*காதல் சிறந்தது காண்! என் பர்எனின்*
*காதல்சா தித்த காரியங் களைவிட*
*நயப்புறு நட்பினால் நாட்டினில் பலப்பல*
*சாதனை நிகழ்ந்ததைச் சரித்திரம் பேசும்!*
*வாழ்வியல் வடித்துத் தந்த வள்ளுவன்*
*செயற்கு அரியயா வுளநட் பதுபோல்*
*என்றே ஓதினான்! நன்றே மனிதர்*
*மறைப்பன மறைத்து மாண்பினைக் காட்டும்*
*ஆடை யணிந்து பீடுற வாழ்தலை.*
*மானம் என்றே மதித்தனர்! நீட்டி*
*மடக்கிக் கட்ட வாய்த்தநான் குமுழம்*
*தான்கிடைத் திலதெனின் சாண்முழத் துணியைக்*
*கோவண மாகக் கொண்டுவாழ்ந் திடலாம்!*
*இவ்வகை மானம் போற்றும் இயல்பில்*
*பழகிய உடலில் உடைநெகிழ்ந் திழப்பின்*
*வினாடியொன் றுக்குள் மேவிக் கையது*

*மெய்யினைப் பொத்தும் விரைவினைப் போலே*
*தாங்கிய நண்பன் தடுமாற் றமுறும்*
*வறுமையில் வீழினும் குணநலம் இழந்து*
*குற்றம் படினும் குறைமறைத் தாங்கே*
*குணத்தினைக் காட்டுவன் கோதிலாப் பெருமை*
*செய்குவன்; அவனே சீரிய நண்பன்!*
*எமதுதோள் சுமையை ஏற்றுத் துணைசெயும்;*
*தோளில் தோய்ந்து தொட்டிடும் இன்பம்*
*துய்த்தே மகிழும்; துயரினைப் போக்கும்*
*அத்தகு தோளென வாழ்வில் அமைந்திடும்*
*மற்றொரு தோளாம் மனிதனே தோழன்!*
*இன்றுஅத் தோழனை எங்கே காண்பது?*
*மாலையில் நிகழும் பொதுமே டைகளில்*
*நாவினை வளைத்து நன்கு கேட்டிடத்*
*"தோழர் களே!"என அழைத்திடும் சொல்லினைக்*
*கேட்டதே யன்றிக் கேண்மையைக் காணோம்!*
*தொல்லுல கிற்குத் துணையாய் நிற்கும்*
*துறந்த தூயவன் வாழும் சுடர்மலை*
*பழநியம் பதியில் பழகு தமிழ்க்கவி*
*இளங்கம் பன்எனும் இனிய கவிஞர்*
*தோழனைக் காட்டத் துணிந்து வருகிறார்!*

முடிப்பு:

*இனிய தமிழில் இளங்கம் பன்உரை*
*செய்து காட்டிய சீரிய தோழமை*
*கேட்டனம்! நமது நெஞ்சம்அக கேள்வனை*
*வேட்டு நின்றது. சிவனெனும் விழுப்பொருள்*
*சுந்தரர் தமக்குத் தோழனாய் வந்தனன்.*
*அச்சிவ பெருமான் நச்சியே நம்மைத்*
*தோழனாய் ஏற்றிடத் துணிந்தா னில்லை!*

ஏனோ அறியோம்? இரக்கம் கொண்டு
தோழனாய் வந்தால் தோழமை யன்று
உழுவ லன்பும் உரிமை யுணர்வும்
நட்பின் விளைநிலம்; நடைபெறும் களமாம்!
நாடித் தேடுவ தன்றுநற் றோழமை,
நட்டுப் பெறுவதே யாகும் நட்பெனத்
தேறித் தெளிந்து தோழமை கொண்மின்!

## 8. கவிஞர் மரியதாஸ்

அறிமுகம்:

ஓங்கி உயர்ந்த மாளிகை யாயினும்
ஆங்கோர் ஒதுக்குப் புறத்தினில் குப்பைக்
குழியும் உண்டு; அது போலுயர் பேரற
நூலையே செய்த வள்ளுவன் வைத்துழி
எல்லாம் மனிதனை ஏற்றம் ஆக்கிடத்
துறைதொறும் துறைதொறும் தூய்மையேசெய்து
தேரா மாக்களை நேருறத் தெரிந்து
கயமை என்றே கடைசியில் இட்டான்!
இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்க
என்ற வள்ளுவன் இந்தக் கயவனைக்
கொன்றிடு என்றான்! குவலயந் தனிலே.
வாழ்ந்திடும் மக்களில் இனந்தெரிந் துணரல்
எளிதோ? வஞ்சனை விஞ்சிய திந்த
வியனுல கன்றோ? விந்தை மிகுந்த
கோலம் காட்டிக் கொன்றிடும் நலத்தை
மக்களே போல்வர் கயவர் என்றே
வேதனை வெடித்த உள்ளத் துடனே
பேசிடும் வள்ளுவப் பேரா சான்தனை
எவரென வியப்போம்! இமைத்திடாத் தேவ

*தேவா திகளின் பெயரினில் செறிந்த*
*கதைகள் உள்ளன. கற்பனைத் தேவர்கள்*
*மனத்தால் உயர்ந்தோர் எனப்பெயர் சூட்டிக்*
*கொண்டவர் செய்த குறைபல வுண்டு.*
*பெண்ணா சையும்பெரும் பதவி யாசையும்*
*பிடித்துக் கலகம் விளைத்துக் கொண்டதை*
*ஆழமாய் நினைத்தால், மேலாம் மனிதர்கள்*
*சிரிக்கத் தக்கன! இதனையே செந்தமிழ்*
*வள்ளுவன் "தேவர் அனையர் கயவர்*
*என்றான்! கயமைப் பண்புளோர் எவர்க்கும்*
*கேடு செய்பவர்; கீழ்மையே எண்ணுவர்.*
*கயமையைக் கண்டால் கடிது சாடுக"*
*என்றான்! இந்நெறி ஏய்ந்த கயவனை*
*மிடுக்குத் தமிழில் முழங்கி விளக்கிட*
*மதியிற் சிறந்த மரியதாஸ் வருகிறார்.*

முடிப்பு:

*நெஞ்சுதொட் டிழுக்கும் நிறைகவி மொழிந்த*
*மரியதாஸ் கயமையை மரிக்கச் செய்தார்;*
*மாண்புறு நலங்கள் தான்பல கொணர்ந்தார்!*
*இப்படிக் கவிஞர் செப்பிய எண்மறை*
*வள்ளுவன்பார்வையில் தெள்ளிதின் உணர்ந்தோம்!*
*இணையிலா வள்ளுவன் ஏற்றமார் குறளின்*
*துணையினால் வாழிய வையகம் தொடர்ந்தே!*

# 4. தந்தை பெரியார் 91ஆவது பிறந்தநாள் விழாக் கவியரங்கம்

தஞ்சாவூரில் 17–9–69இல் நிகழ்ந்த
தந்தை பெரியார் (ஈ. வெ. ரா.) அவர்களின்
91–வது பிறந்தநாள் விழாக் கவியரங்க

## முன்னிலைக் கவிதை

*பூவுல கினிற்பொற் புடைத்தமி ழகத்தில்*
*கல்தோன்றி மண்தோன் றாக்கா லத்தே*
*முன்தோன்றி மூத்த தொன்மைக் குடியினர்*
*தமிழ்க்குடி யினராம்! தரணியில் அவரே*
*புகழ்க்குடி யினராய்ப் பொலிந்தவ ராவார்!*
*முந்தைநூ றாயிரம் ஆண்டுகள் முன்பே*
*மூதறி வதனால் முத்தமிழ் கண்டதும்*
*வையகத் தினில்வாழ் வாங்கு வாழ்ந்திடும்*
*வகையும் முறையும் மாண்புறு காதலும்*
*கவினுறு கலையும் கடலது கலக்கக்*
*கலங்கள் இயக்கும் திறனும் வீரமும்*
*சீர்மிகு செப்பம் திகழ்நல் லாட்சி*
*கண்டதும், புகழினைக் கொண்டதும் தமிழினம்!*
*ஆயினும் என்ன? அவலமே உற்றது!*
*வளர்பசு மரத்தில் தழைபுல் லுருவிபோல்*
*ஒட்டி யும்உற வாடியும் தமிழ்உரம்*
*கெட்டிடச் செய்தது அயல்வழக் காமே!*
*அருமைத் தமிழ்நா டதனில் கொடிய*
*பேதம் வளர்த்தும் மொழியில் நெறியில்*
*நஞ்சினைக் கலந்தும் நலங்கெடச் செய்தது!*
*ஓராண் டிற்கோர் உயர்பாட் டளித்த*

மூலன் சொன்ன முதுமொழி நோக்கின்
ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
என்றே இயம்பிடும்! நன்றே அம்மொழி
தமிழர் மறந்தனர்! உமிழ்நீர் நாவுடன்
பேழை வயிற்றினை வளர்த்திட வந்தோர்
ஒருபிறப் பாகி உறவு கலந்து
வாழப் பிறந்த மனிதரைப் பிரித்தனர்
மனிதனை மனிதன் மோதிட வைக்கும்
மூடச் சாதிப் பகைமையை மூட்டி
விட்டனர்! தமிழச் சாதியும் வீழ்ந்தது!
கூடித் தொழில்செய் தின்புறு மானுடச்
சாதியில் சாதிச் 'சழக்குகள் தோன்றின.
குன்றிய தந்தோ, குன்றின் அனைய
புகழினம், தமிழினம் பொய்ந்நெறி யாலே!
"அறிவால் எதையும் ஆராய்ந்து பார்"என
மேலும் மூல முனிவன் விளம்பினன்.
ஆயினும் வாழும் அரியபே ரினத்தை
வகைபடச் சூழ்ந்தே அடக்கிட வல்ல
சூதினைக் கொண்டார்! தொல்லறம் மாய்ந்தது.
"இவன்தலை யில்அவன் எழுதினான்" என்றே
இயம்பினர். இந்நெறி பொய்ந்நெறி, பொய்ந்நெறி
"தீதும் நன்றும் பிறர்தர வாரா"
"அவரவர் வினைவழி அவரவர் வந்தனர்"
என்பதிந் நாட்டில் எழுந்த பழைய
நெறியே ஆயினும் இடையினில் வந்த
ஏமாற்று நெறியே நெறியது வாகி
ஏழைகள் ஏங்கித் தவித்திடச் செய்தது!
வளம்பல படைத்தோர் மக்களை வாட்டிட
அவலம் பெருகிய தாழ்கடல் போல
அருந்துயர் பெருகி அழித்தது! இந்தப்

பொல்லா நெறியினைப் புனிதமா முனிவர்
திருமூ லரவர் ஒரோவழி மறுத்தும்,
தென்னகத் திருவிளக் காய்நூற் றாண்டது
ஏழினில் தோன்றிய ஏந்தெழில் ஞாயிறாம்
அப்ப ரடிகள் சாடியும் சதுரப்
பாடுடைச் சூது செத்தபா டில்லை!
இருளே சூழ்ந்து படர்ந்து செறிந்தது!
இந்த நிலையில் ஈரோடு தந்த
ஏந்தல் ஏற்றமார் தமிழினம் தனக்கே
தலைமை தாங்கினன்! சிந்தனை ஒன்றே
உலகம் திருந்திட உற்ற வழியென—
பகலவன் ஒளியினும் பகுத்தறி வொளிமேல்
கண்மூடிப் பழக்கம் மண்மூடிப் போகச்
செய்யவேண் டும்மென வெய்யோன் போலத்
தமிழின வாழ்வே தம்வாழ் வென்றும்
தமிழினம் ஒன்றே தம்மின மென்றும்
தமிழின உயர்வே தம்உயர் வென்றும்
தமிழின மகிழ்வே தம்மகிழ் வென்றும்
வள்ளுவன் வகுத்துத் தந்த குடிசெயல்
வகையினைப் போற்றும் தகைசால் பெரியார்
மாற்றா ருக்கிடி! மருள்நெறி யினர்க்கு
மருந்து! தமிழினப் பகைக்கு மாருதம்!
தமிழினத் தந்தை! தழுவிப் பழகிடும்
இனியபண் பாடு! குனியும் தமிழனைத்
தலைநிமி ரச்செய் திடுமுது கெலும்பு!
இழிதகை நீக்கி ஏற்றம் தரும்ஓர்
இணையிலா வீரர்! கணைமொழிப் பெரியார்
வாழும் தலைமுறை தமிழகத் தின்பொற்
காலத் தலைமுறை! அவர்படை சார்ந்த
அருமைத் தலைமகன் அண்ணா — தமிழினத்

*தானைத் தலைவன் ஆண்ட தலைமுறை!*
*அண்ணா அமர ரானபின் ஆட்சிப்*
*பொறுப்பினை ஏற்றுப் பொலிந்திடு கின்றவர்*
*பெருகிய அன்பு பேணும் நெறியினை*
*உடைமையாய்க் கொண்டவர் உலகம் புகழும்*
*கலைஞர் கவினுறத் தமிழக அரசினை*
*நடாத்து கின்ற இந்நூற் றாண்டைப்*
*பெரியார் நூற்றாண் டெனில்அது பிழையிலை!*
*வாழிய பெரியார்! வளர்கஇத் தலைமுறை!*
*தன்னிக ரில்லாத் தனிப்புகழ் பெற்றே*
*தமிழினம் ஓங்கித் தழைத்துவா ழியவே!*

### கவியரங்கத் தலைவர் அமைச்சர் மாண்புமிகு முத்துசாமி அவர்கள்

*பண்டைத் தமிழ்நா டாண்ட அரசர்*
*பைந்தமிழ்ப் புலவராய் இருந்தனர். பாவலர்*
*தம்மொடுங் கூடித் தனிமகிழ் வெய்தினர்!*
*கவியும் யாத்தனர்! புவியும் காத்தனர்!*
*இடையில் இழந்தது இந்நா டந்தப்*
*பெருமையை பிறப்பால் மட்டுமல் லாது*
*நெஞ்சத் தாலும் நிமிர்ந்தெழு தமிழராய்*
*அரசுஏற் றிருக்கும் ஒருதலை முறையைப்*
*பெற்று மகிழும் பேற்றினை யடைந்தோம்!*
*உள்துறை யாட்சி அமைச்சர் ஒளிப்புகழ்*
*நல்திற முத்து சாமி நாளெல்லாம்*
*பட்டிமண் டபத்தில் பாங்கறிந் தேறுவார்*
*கவியரங் கத்தினில் கவிதை மலர்களால்*
*அன்னை தமிழினை அருச்சிக் கின்றனர்*
*அவர்கவி யரங்கத் தலைவரா யமர்ந்தது*
*பொருத்தம் அவர்தமிழ் போலவா ழியவே!*

## 1. கவிஞர் ஆனந்தம்

*ஆனந்தம் எதுவென் றறியார் பலரே!*
*பலர், பல விதமாய்ப் பகர்ந்திடு கின்றனர்.*
*ஆனால் இவரோ ஆனந் தம்!அவர்*
*ஆனந் தத்தைநாம் அனுப வித்திடப்*
*பெருந்தமிழ்க் கவியால் "பிறவித் தலைவரை"ப்*
*பற்றிப் பாடுவர் பாங்கறிந் தினிதே!*
*சிலர்தாம் முயன்று தலைவரும் ஆவார்;*
*சிலரிடம் தலைமை திணிக்கப் பட்டிடும்;*
*அவர்பிரித் தாளுவர்; பேதுற் றஞ்சுவர்;*
*தொண்டும் துணிவும் துளியு மிலாரிவர்!*
*பெரியார் பிறவித் தலைவ ரேகொல்?*
*அஞ்சா நெஞ்சினர்; எஞ்சுத லின்றி*
*எடுத்தது முடிப்பர்; இடும்பை இயல்பென*
*இடுக்கண் அழியார்; எறிகோல் பாம்பென*
*எதிர்இடர் சீறிக் கடிந்திடும் இயல்பினர்*
*சீரார் தலைமை ஏற்பர் அவர்தம்*
*புகழ்ஆ னந்தம்; புகல்வர் ஆனந்தம்!*

## 2. கவிஞர் முடியரசன்

*முடியர சர்பலர் ஆண்டனர் முன்னாள்*
*பாரிடை இன்று யார்முடி யரசர்?*
*யாரையும் காணோம் ஓரிரு வர்தாம்*
*இருந்த போதும் ஒதுக்கிடம் ஏகினர்.*
*குடியர சோங்கிடும் யுகத்தினில் இங்கே*
*முடியர சென்றே முதறி வாளர்*
*போற்றிட இங்கே போந்தனர் ஒருவர்*
*என்ன புதுமை! என்ன வியப்பு!*
*முடியர சாள்வது புவியுல கந்த*

முடியர சன்றிவர்! கவியுல காளும்
முடியர சாம்இவர்; மூத்த தமிழ்க்கவி
முடியர சாம்!இவர் இயல்பினுக் கேற்ப
"அஞ்சா நெஞ்"சினை அணிபெறப் பாடும்
பொருளெனக் கொண்டதில் புதுமையொன் றில்லை!
பெரியோர் பேசா நாளொன் றில்லை
பேரவை யதற்குச் சுவையினை யூட்டிப்
பேசியறியா தவர்பெரி யார்!அவர்
திரும ணத்தினைக் "கிரிமினல்" என்பார்;
கூடி யிருப்போர் நெஞ்சம் குலுங்கிட
நீமுட் டாளென நிமிர்ந்து பேசுவார்;
"தமிழுக் கும்அமு தென்றுபேர், அந்தத்
தமிழ்எங் கள்உயி ருக்குநேர்" என்றே
நாடெலாம் புகழும். நந்தம் பெரியார்
"காட்டு மிராண்டி மொழி"யெனக் கூறுவார்!
சரியோ, தவறோ தன்உணர் வதனில்
பட்டதைக் கூறுவார்; பட்டதைச் செய்வார்!
இத்தகு "அஞ்சா நெஞ்சினர்" இணையிலா
அருமைத் தலைவரை அணிபெறப் பாடுவர்
புகழ்முடி யரசர் பூந்தமி ழாலே!

## 3. கவிஞர் தமிழண்ணல்

அமுதத் தமிழின் இனிமையோ டண்ணற்
பண்பும் இணைந்த பக்குவ மிக்கோன்
தமிழண் ணல்வர லாறு படைக்கும்
வண்மைத் தமிழ்கொழி வளமார் கவிஞன்
"வரலாற்று நாயகன்" பெரியார் என்றினங்
காட்டிக் கவியால் நமையெலாம் அழைத்துச்
சென்றிட வந்தார், தெளிவுறு வோமே!

## 4. கவிஞர் குடியரசு

*குடியர செனினில் கூடி நடாத்தும்*
*அரசது வாகும். முடியர சில்போர்*
*உண்டு குடியர சினில்அஃ தில்லை.*
*ஆனால் இந்தக் குடியர சோ, இந்*
*நாட்டின் ஏழைக் குடியர சேயோ?*
*எல்லாருக்கும்,*
*வாக்கும் உண்டு; வயிறும் உண்டு.*
*பலர்வயி றின்னும் நிரம்பிட வில்லை*
*உழைப்பவர் வயிற்றினை அடித்துக் கொழுக்கும்*
*சிலருடைப் பெட்டி நிரம்பு கின்றது;*
*சில்லறைக் காசும் புழங்கு கின்றது!*
*இவ்விழி நிலையில் நம்குடி யரசு*
*நாடெலாம் அறிந்த கேலிக் கூத்தாம்!*
*இந்தக் கூற்று எமதுகூற் றன்று*
*பாரெலாம் வாழப் பரிந்தே யுழைத்தே*
*நேருவின் கூற்றாம்! நேருறு கவிஞர்*
*குடியர சும்அக் குடியர சாமோ?*
*"போராட் டப்புயல்" பற்றிப் புகலுவார்.*
*தமிழினத் திற்குப் பெரியார் தென்றல்;*
*அவ்வின வாழ்வை பறிக்கும் அயலினம்*
*கண்டு நடுங்கிடும் கடும்புயல் பெரியார்!*
*ஓயாப் பெரும்போர்! உடைத்தலும் எரித்தலும்*
*அவர்தம் போர்முறை! ஏடெடுத் தெழுதலும்*
*அவர்தம் போர்முறை! ஆண்டிற் கிழமே*
*ஆயினும் போரில் பாய்புலி யாவார்!*
*புலியும் சிலநாள் படுத்துறங் கிடும்இவ்*
*வெண்புலி யோவெனில் மருத்துவ மனையிலும்*
*படுத்துறங் காது! மிடுக்குடன் அதனைக்*
*குடியர சுக்கவி குறித்திட வந்தார்.*

## 5. கவிஞர் புதுவை சிவம்

நம்பெரி யார்க்கும் நமக்கும் இனிய
உறவுண் டாயினும் முரணும் உண்டு.
குறைவிலா நிறைவாய்க் கோதிலா அமுதாய்
இனியநற் பண்பு திணிஉறை விடமாய்
உள்ளது எதுவோ அதுசிவம் என்பது
நமது கருத்து! ஆயினும் ஐயர்
பெரியார் அதனை யேற்றிட மாட்டார்!
இங்கொரு புதுவை சிவம்வரு கின்றார்
சிவமெனும் பெயரைச் செவிமடுத் திட்டால்
பெரியார் சும்மா பேசா திருப்பரோ?
நமக்கொரு துணையாய்ச் சிவமெனும் பெயர்கொண்
டிங்குவந் துற்ற எழிற்றமிழ்க் கவிஞ!
சிவம்எந் நாட்டார்க் கும்பொது என்றார்
பொன்னு லகம்புகழ் மணிவா சகனார்.
அதனைப் புதுவைக் குரிய தாக்கினீர்!
சிவமும் சீரல் லாதன வற்றைச்
சீராக் குவதே! அதுபோல் பெரியார்
எதையும் அழிப்பவ ரல்லர்! தீயன
அழித்து நல்லன ஆக்கிச் சீரினைப்
பெருக்கும் சிவமே நம்சிவ மாகும்!
ஒருவகை யிற்சிவத் தின்தொழி லோடு
பெரியார் தொழிலும் ஒத்திடல் கூடுமோ?
புதுவை சிவமலர் புதுவைத் தமிழில்
சீருற வே"சீர் திருத்தச் சிற்பி"யைக்
காட்டிப் பாடுவார் கவினுற இங்கே!

## 6. கவிஞர் ச. பாலசுந்தரம்

பால சுந்தரம் பாவில் வல்லவர்;
சந்தமுத் தமிழின் சதுரப் பாட்டினால்
புவியெலாம் புகழ்த்திரு கொண்டு பொலிந்திடும்

*சுந்தரம்! சொற்றமிழ்ச் சுடர்தரு கவிஞன்*
*நமக்கிங் கியைந்த நலமிகு கவிஞன்*
*பழமையின் பயனும் புதுமையின் பொலிவும்*
*போற்றும் பொதுநெறி நம்நெறி யாகும்!*
*பகுத்தறி வென்பது பண்பட் டோங்கிய*
*சமய நெறிக்குப் பகையா காது*
*பெரியார் பழுத்த "பகுத்தறிவுப் பழம்"*
*அவர்பகுத் தறிவை அழகுறக் காட்டுவார்.*

## 7. புலவர் பழம் நீ

*பாரினில் பழம்ஒரு புரட்சியின் சின்னம்.*
*அரும்பு மலராய் மலர்கா யாகிக்*
*கனியா கின்றது. காட்சிஇஃ தியற்கை*
*ஒன்றோ டொன்றொவ் வாஉறு பருவம்*
*கழித்தே உரிய பயனும் நலனும்*
*பெற்றுச் சிறந்திடும் நற்சுவைக் கனிதான்!*
*அஃதொரு புரட்சியின் சின்னமா யமைந்தது!*
*"பழம்நீ" என்றே பண்டொரு நாளில்*
*மைந்தன் முருகனை வான்சிவன் மொழிந்தான்!*
*இப்பழ மோதேன் சுவைத்தமிழ் சொட்டும்*
*தெள்ளு தமிழ்க் கவிப் பழம்!புத் தறிவிற்*
*பிறந்த "புரட்சியின் சின்ன"மாய்ப் பெரியார்*
*பிறங்கிடும் பான்மையைப் போற்றிப் பேசிட*
*வந்தனர், வண்டமிழ் அமுதம் பொழியவே.*

முடிப்பு:

*கவியரங் கத்தைச் செவியுறக் கேட்டுப்*
*பெரியார் நெறியினைப் பேணித் தமிழினம்*
*ஒன்றென வாழத் துடித்திடும் அவையீர்*
*நன்றென வாழ்த்துவம், வாழ்கநற் றமிழே!*

# 5. இராமநாதபுரம் பொங்கல்விழாக் கவியரங்கம்

இராமநாதபுரம் 11–1–1986
பொங்கல் கவியரங்கம்
தலைமைக் கவிதை

பொருள்: "பொங்கல் சிறக்கவே!"

*ஞாலத் துயர்ந்த நற்றமிழ் நிலத்தை*
*ஆண்ட அரசர் பற்பலர்! அவருள்*
*சேது காவலர் செந்தமிழ்ப் புரவலர்;*
*அருள்நெறி வளர்க்கும் பெருந்தகை யாளர்!*
*எனவிளங் கியவர்கள் இராம நாதபுரம்*
*மன்னர்கள்! அவர்கள்தம் மாட்சிமை பெரிது!*
*இமைப்பொழு தும்எம் நெஞ்சினில் நீங்கா*
*எமையாள் கின்ற ஈசன் ஊர்என*
*உவந்து குடிகொண்(டு) எழுந்தருள் செய்யும்*
*உத்தர கோச மங்கை யெனும்பதி*
*உளதாம் பெருமை உடைய(து) இந் நிலமே!*
*மூடத் தனத்தின் முடைநாற் றத்தினைப்*
*போக்கவும், நம்மதம் புதுமைபெற் றிடவும்*
*தாமே உயர்ந்தவர் எனும் தருக் குடைய*
*மேலைநாட் டவரெலாம் வியக்கவும் இந்திய*
*ஆன்மிக வளத்தை அள்ளி வழங்கிய*
*விவேகா னந்தரை வியனுல(கு) அறியச்*
*செய்த உத்தம அரசும் நம் அரசே!*
*இந்தப் புண்ணிய பூமியில் *ராஜீவ்*
*வாலியா ஆட்சிப் பொறுப்பினை வகிப்பது*

* இராமநாதபுர மாவட்ட ஆட்சியர்.

*போற்றற் குரியது! புண்ணிய வாய்ப்பிது!*
*இராம நாத புரம்மா வட்டத்தில்*
*மாத்தமிழ் வளர்ப்போம்! மன்பதை காப்போம்!*
*ஆலை யும்தொழிற் சாலையும் அமைப்போம்!*
*மதமாச் சரியங் களைக்களைந் திடுவோம்*
*மதமாற் றம்எனும் சிறுபிள் ளைத்தனம்*
*கூடா தென்று நாடெலாம் கூறுவோம்!*
*எம்மத மும்சம் மதமாம் என்றே*
*சமாஅ தான சகவாழ்வு வாழ்வோம்!*
*உறவினை வளர்ப்போம்! அமைதியைக் காப்போம்!*
*வளமார் வாழ்வை நிலமிசைச் சமைப்போம்!*
*இவையே, நமது இனியகோட் பாடுகள்!*
*அர்ப்பணிப்(பு) உணர்வுடன் அனைவரும் உழைப்போம்!*
*இந்தப் பொங்கல் இனியநன் னாளில்*
*நன்றுஇந் நோன்பினை நாமெலாம் ஏற்போம்!*
*பானையிற் பொங்கல் மங்கையர் படைப்பர்!*
*பைந்தமிழ்ப் பொங்கல் பாவலர் படைப்பர்!*
*உடல்வளம் பெற்றிட உதவிடும் பொங்கல்!*
*உணர்வு வளம்பெற உதவும்நற் கவிதை!*
*எனநினைந் திங்கே கவியரங்(கு) அமைத்தனர்,*
*சான்றோர்! அவர்க்குத் தமிழ்க்கவி புனைந்து*
*இனிய பொங்கல் வாழ்த்தினைப் படைப்போம்!*
*கவியரங் கேற இவண்வரு கவிஞர்காள்*
*தருக, நுங் கவிதை! பொங்கல் சிறக்கவே.*

புலவர் அ. மாயழகு – அறிமுகம்
பொங்கல் சிறக்கவே – அன்பினால்!

*உடம்பிலே உயிர் உளதா? இலதா?*
*எனஅறிந் திடநன் மருத்துவர் கையின்*
*நாடியை நாடிப் பிடித்துப்பார்த் திடுவர்*

*மன்பதைக்(கு) உற்ற நோயெலாம் தீர்க்க*
*வந்த வள்ளுவ னோ, உயிர் உடம்பில்*
*இருப்பதற்(கு) அறிகுறி இனியஅன் பென்றான்!*
*"அன்பின் வழியது உயிர்நிலை" என்ற*
*குறளமு துண்போம்! குறைநிறை பாராது*
*அன்புசெய் திடுவோம்! வேற்றுமை கடந்து*
*அன்புசெய் திடுவோம்! அனைவரும் வாரீர்!*
*விரிவன எல்லாம் வாழும்; வளரும்!*
*சுருங்கு வனஎலாம் அழியும்; ஆதலால்*
*யாண்டும் விரிந்த அன்பினைக் காட்டுக!*
*பாஅர் மாட்டும் அன்பினைக் காட்டுக!*
*அன்பினைச் செய்க! அன்பினைப் பெறுக! என*
*அன்புப் பொங்கல் சிறக்கவே பாடிட*
*வருகிறார் வண்டமிழ்க் கவிஞர்மா யழகு!*
*அன்பினில் விளைந்த அவர்தம் அழகுக்*
*கவிதையைக் கேட்போம்! கவிஞர் வருகவே.*

முடிப்பு:

*மாயழ குக்கவி மனங்கொள வழங்கிய*
*அன்பினை ஏற்போம்! அன்பைவாழ் வாக்குவோம்.*

புலவர் நா. செல்லம் – அறிமுகம்
"பொங்கல் சிறக்கவே! – அறத்தினால்!"

*அன்பு ஆற்றல் மிக்கது! – அப்பரும்*
*"ஆற்றல் மிக்க அன்"பென மொழிந்தார்!*
*அன்பு, தொழிற்பா டுறுவது! அன்பு*
*உளதெனில் ஆங்குச் செயற்பா டுளதாம்!*
*செயற்பா டுளதெனில் அன்புஆங் குளதாம்!*
*அன்பின் விளைவே அறமாம்! அந்த*
*அன்பினை நுகர்தற்கு உரிய வாயிலும்*

*அறமே யாகும்! அந்த அறநெறி*
*செல்லமாய்ப் பேணத் தக்கது! அதனால்,*
*“அறத்தினால் பொங்கல் சிறக்கவே!” – கவிசொல*
*புலவர் செல்லம் வருகிறார்! பொழிகவே!*

முடிப்பு:

*செந்தமிழ்ச் செல்லம் செவியுறத் தந்த*
*அறநெறி போற்றுவோம்! அறத்தினால் வாழ்வோம்!*

### புலவர் அன்னைதாசன் – அறிமுகம்
### “பொங்கல் சிறக்கவே – அருளினால்!”

*அறவிலை வாணிகம் பகருதல் தண்டமிழ்*
*வழக்கமு மன்று; பழக்கமு மன்று!*
*அருள்நலம் சிறப்பதே அறத்தின் ஆக்கமாம்!*
*அன்பெனும் தாய், ஈ னுவ(து) அருள் மகவு!*
*அறநெறி யெனும்பணி மனையிலே வளர்வது!*
*தாயெனப் பரிவுடன் கூடிய அழைப்பு*
*ஈன்ற தாய்க்குரிய அழைப்பு மட்டுமல்ல!*
*காதல் வாழ்க்கையில் கைகொடுத் துதவும்*
*கன்னியர் தவிர, மற்றைய மகளிர்*
*அனைவருக் கும்பொது வாகிய அழைப்பாம்!*
*ஆட வரும்நமை ஆளும்ஆண் டவனும்*
*அன்னைஎன் றேதான் அழைக்கப் பெறுகிறார்!*
*“தாய் ஒக்கும் அன்பில்” புலநெறி வழக்கு – இது!*
*அருள் எனும் அன்னையை அறிமுகப் படுத்த*
*அருமைக் கவிஞர் அன்னை தாசன்*
*வருகிறார் இங்கே! தருகிறார் கவிதை!*
*அன்னைதா சனுக்குத் தாசராய் இருந்து*
*அவர்கவி கேட்போம்! ஆனந்தம் பெறுவோம்!*

முடிப்பு:

*அன்னை தாசன் அமுதெனத் தந்த*
*அருளின் மாட்சியை அருளின்ஆக் கத்தைச்*
*செவிகள் குளிர நாமெலாம் கேட்டோம்!*
*இதயத் திருத்துவோம்! அருளின்ஆட் சியையே!*

புலவர் எச். முஸ்தபா – அறிமுகம்
"பொங்கல் சிறக்கவே – வீரத்தினால்!"

*வீரம் என்பது விவேகம் நிறைந்தது!*
*வீரம் என்பது மானிட உலகை*
*அழிக்கும் போரினில் காட்டுவ தன்று!*
*மன்பதை காப்பதே மாபெரும் வீரம்!*
*பொறிகளின் மீது தனியர சாணை*
*செலுத்துவ தொன்றே சிறந்தபே ராண்மை*
*இன்று மானிடம் அவாவி நிற்பது*
*போரிடும் உலகத் தைஉரு வாக்கும்*
*வீரமன்(று)! எவர் மாட்டும் நல் லன்பு,*
*தன்னல மற்ற தகைசால் உழைப்பு*
*பிறர்நலம் பேணும் பெருமைசால் நோன்பு!*
*மன்னுயி ரனைத்தும் காத்திடும் திறம்! – இவை*
*வேண்டிநிற் கின்ற வீரமே யாகும்!*
*"அளவற்ற அருளாள னாகிய*
*ஆண்டவன்,*
*உயிர்களுக்(கு) இரக்கம் காட்டு வார்க்கு*
*உவந்தருள் செய்வான்" எனும் நபி நாயகம்*
*நெறியினைப் பேணும் இனியநற் கவிஞர்*
*முஸ்தபா கவிதை முழங்குவார்! வருகவே!*

முடிப்பு:

முந்துசெந் தமிழ்க்கவி முஸ்தபா தந்த
செந்தமிழ் வீரம் சிறக்கநாம் கண்டோம்
வீரம் கொண்டோம்! நாமெலாம் நெஞ்சில்
ஈரம் கொண்டோம்! இந்தநன் னாளிலே
இராம நாத புரமா வட்டம்
குருதி கொட்டும் செருகளத் தாடியது
போதும்! இனிமேல் பூசல்கள் வேண்டா
அனைவரும் ஒருகுடும் பம்என் றுணரவும்
அன்பினை வளர்க்கவும் வீரம் வேண்டும்
வருத்தும் பிரிவினை, வறுமையை எதிர்த்துப்
போராடு கின்ற வீரமே, வேண்டும்!
வறுமை ஒழிப்புப் போரினில் நம்மை
வழிநடத் தும்தள பதிபாஞ் சாலம்
தந்த செம்மல் ராஜீவ் வாலியா
வழிநின் றுழைப்போம்! வறுமையை ஒழிப்போம்!
தேடும் செல்வம் அனைத்தை யுமே, சசி
சேகர் வழங்கிடும் திட்ட நெறியினில்
சேர்ப்போம்! இச்செயல் சிறந்த வீரமே!

புலவர் ஜி. பாலசுப்பிரமணியம் – அறிமுகம்
"பொங்கல் சிறக்கவே! – வளத்தினால்!"

வளத்திற் கே, வழி காண்போம்! வலிமை சேர்
இளமை நலத்துடன் ஏற்றமார் உழைப்பில்
ஈடு படுதலே வளம் பெறும் வழியாம்!
பைந்தமிழ்க் கவிஞர் பால சுப்பிர
மணியம் வளத்தினைக் காட்ட வருகிறார்!
பாலன் அல்லவா? அவர்காட் டிடும்வளம்
காண்போம்! அவர்தம் கவிதையைக் கேட்போம்.

முடிப்பு:

*அறிவும் ஆற்றலும் படைப்பதே வளமாம்!*
*சிவமும் சக்தியும் சேர்ந்ததே உலகம்!*
*அறிவறிந் தாள்வினை அமைவுடன் இயற்றுவோம்!*
*அன்புற் றமர்ந்து இன்புற்று வாழ்வோம்!*
*அருள்நலம் காப்போம்! உழுதநோன் பக (டு)என*
*உழைத்து வாழ்வித்து வாழ்ந்திடும் நல்லறம்*
*காண்போம்! மன்பதை போற்றிக் காத்திடும்*
*வீரம் பெறுவோம்! வளம்பல விளைப்போம்!*
*புண்ணியப் பொங்கல் படைத்துஇவ் வுலகினில்*
*வளம்பல கண்டு வாழ்வாங்கு வாழ்வோம்!*
*பொங்கலோ பொங்கல்! பொங்குக பொங்கல்!*
*நன்றி! வாழ்த்து! நானிலம் வாழ்கவே!*

# 6. காரைக்குடி அண்ணா விழாக் கவியரங்கம்

காரைக்குடி அண்ணா தமிழ்க் கழகம்
அண்ணா விழா 12–10–1986
கவியரங்கம்
தலைமைக் கவிதை

அலைகடல் சூழ்ந்த உலகினில் உயர்ந்த
இமயம் முதலாக் குமரீ றாகப்
புகழ்விரித் தொளிரும் புண்ணிய பூமியில்
வட வேலவன் குன்றும் தென்குமரிக் கடலும்
எல்லையாக் கொண்ட எந்தமிழ் நாட்டில்
வரலாற் றுக்கு விசைதரு கடமையும்
எவரையும் மதிக்கும் இனியகண் ணியமும்
வளரும் மானுட குலத்தின் சீலமாய்
மதிக்கப் பெறும்நற் கட்டுப் பாடும்
எனும்இவை மூன்றனுக் கரண்செய் திடவும்
நாமமது இழந்து கிடந்தநாட் டுக்குத்
தமிழ்நாடு எனப்பெயர் தகவுடன் சூட்டிப்
பிறங்கிடச் செய்யவும் வந்து உதித்தவர்
சொல்வேந் தராம்நம் அறிஞர் அண்ணா!
நயத்தகு நாக ரிகம்இது வெனவழி
நடத்தவும் வந்து உதித்தவர் அண்ணா!
அவர்தம் புகழினை அவனியிற் பரப்பும்
அண்ணா விழாவில் தண்ணார் தமிழில்
கவிமழை பொழிய வந்துள கவிஞர்காள்!
அறிஞர் அண்ணா போல்,
பழகுதற் கினிய பண்பு நலமும்
சீரிய தோர்செயல் திறனும் பெற்ற

கு. XIV. 6.

*காரைக் குடிநகர் மன்றத் தலைவரே!*
*சிதறாச் சிந்தை யுடைய சிதம்பர!*
*இன்று,*
*பரந்த இந்திய நாடு ஒருமைப்*
*பாட்டினுக் கே, வழி கேட்டுநிற் கிறது!*
*பெருமைசால் தமிழகம் அரசியற் கண்ணியம்*
*எதுவெனக் கேட்டு ஏங்கிநிற்கிறது!*
*இந்தி ஆங்கிலம் இவைநெருக் கிடவே*
*எந்தமிழ் அன்னை நொந்து அவட்குரிய*
*தமிழ கத்தினைச் சடுதியில் மீட்டு*
*ஆண்டிட ஓர்வழி கேட்டுநிற் கின்றாள்!*
*ஆம்! ஆம்! இன்று ஒருவழி தேவை!*
*நம்தலை முறையில் அகத்தியர் போலே*
*புகழ்மிகு தலைமை பொலிவுறப் பெற்று*
*விளங்கிய அண்ணா வின்வழி யே, வழி*
*கடவுளின் பெயரை எவருமே கூறி*
*கடவுள் யார்? அவர் நெறிஎது? என்று*
*அறியவொண் ணாமல் ஆக்கிய சமயக்*
*கணக்கர் வழியில் சிக்கிய கடவுள்போல்*
*இன்றுஅண் ணாவின் பெயரைஎல் லாருமே*
*கூறு கின்றனர்! குருடர்கள் ஐவர்*
*யானைகாட் டியது போல - இதுவே*
*அண்ணா வழியெனக் காட்டு கின்றனர்!*
*நமக்கோ, மயக்கம்! நாட்டுக்கும் மயக்கம்!*
*நீதி தேவன் மயக்கம் தெளிவித்த*
*அண்ணா இன்றில்லை! ஆயினும் என்ன?*
*அண்ணா நினைவுநம் அகத்தினில் பசுமை*
*யானதோர் நினைவு! இன்றும் இடருற்று*
*அழும்பொழு தெல்லாம் அண்ணா இல்லையே*
*என்னும் ஓர் ஏக்கம், இதயத் தினையே*

அழுத்து கின்றது! இந்த அழுத்தமே
அண்ணா புகழுக்கு அடையாள மாகும்
தமிழின் ஊற்று; ஆங்கில வான்மழை
எனவிளங் கியவர்! உள்ளப் புழுக்கம்
அற்ற தலைமை பெற்றவர்! அரசியல்
பகைகளைக் களைந்து பண்பையே கண்டு
இவரே தலைவர் எனமிக ஏற்றம்
பெற்றவர் அண்ணா! அவர்புகழ் வாழ்க!
பகைப்புலத் தினையும் அணைத்துப்பண் பாட்டுப்
புலமாக் கியநம் அண்ணா வாழ்கிறார்!
அறிஞர்அண் ணாவின் பெரும்புகழ் பாடும்
போராட் டங்களில் புடம்போட் டெடுத்த
மாசறு பொன்னாம் டாக்டர் கலைஞரும்
பொன்மனச் செம்மலும் இணைவா ராகுக!
பெரியார்அண் ணாவிடம் காட்டிய பகைபோல்
பெரும்பகை ஏதும் இவரிடை இல்லையே!
இனிய தமிழகம் வளரநம் அண்ணா
வழியே வழியாம்! மற்றொரு வழியிலை!
"குடிசெய்வார்க் கில்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும்" – என் பதுகுறள்!
அருமை மிக்க இத்திருக் குறளுக்கு
உரைகண் டனர்பதின் மூன்றுரை காரர்!
புகழ்மணக் கின்ற இக்குற ளுக்கு
எழுத்து, சொல், பொருள் விரித்துப் பயன்என்?
இக்குற ளுக்கு இதுதான் உரையென
வாழ்ந்து காட்டி வையத்திற் குணர்த்திய
அறிஞர்அண் ணாவே உரைவிளக் காயினார்!
நந்தமி ழகத்தின் நந்தா விளக்காம்
புகழ்ஒளி விளக்காம் புண்ணிய விளக்காம்
அண்ணா வின்புகழ் வாழ்க, வாழ்கவே!

*இன்றுஅண் ணாவின் வழியினைக் கேட்டு*
*நின்றிடும் தமிழக மக்களுக் கெல்லாம்*
*அண்ணா வின்வழி இதுவெனக் காட்ட*
*வந்திருக் கின்ற கவிஞர் குலமே!*
*நீவிர் வாழிய! நீள்புகழ் பெறுக!*
*அண்ணா வழியினைக் காட்டி*
*ஆற்றுப் படுத்துக! அழைத்துச்செல் வீரே!*

கவிஞர் வீ. ம. இளங்கோவன் – அறிமுகம்

*நந்தமிழ் நாட்டின் ஒருமைப்பாட் டிற்குக்*
*காப்பியம் செய்தளித் திட்டமாக் கவிஞர்*
*இளங்கோ வின்பெயர் எழிலுறக் கொண்டு*
*விளங்கிடும் நற்றமிழ்க் கவிஞர் இளங்கோ*
*அண்ணா வழியில் நாடிது என்று*
*காட்ட வருகிறார்! கவிதை பொழிகவே!*

முடிப்பு:

*கவிஞர் இளங்கோ காட்டிய நாடு*
*அண்ணா வழியில் அமைந்தநா டல்ல!*
*அண்ணா வழியில் தவறிய நாட்டையே*
*அவர்காட் டினார் உணர்ச்சி வசப்பட்டே!*
*ஆட்சிக் கட்டிலில் அமர்ந்தபின் அண்ணா*
*கம்ப ரசத்தினைத் தந்தஅண் ணா, ஒரு*
*கம்பன் விழாவில் பங்குபெற் றாங்கே*
*இனியசொற் பொழிவு நிகழ்த்திய போது*
*கம்பன் கண்ட நாடே, நாம் காண*
*விரும்பும் நாடென நயமாய் மொழிந்தார்!*
*நாடா வளத்தது வாகநம் நாட்டை*
*உருவாக் கிடஅவர் ஓயா துழைத்தார்!*
*உயர்ந்தநம் பாரத நாட்டின் ஒருமைப்*

*பாட்டினில் உறுதிப் பாட்டுடன் நின்றார்!*
*தாம்பிறந் திட்ட தகைசால் மண்ணுக்குத்*
*"தமிழ்நாடு" எனப்பெயர் சூட்டி மகிழ்ந்தார்*
*அண்ணா காட்டிய அருமைநன் னாடு*
*இந்நாள் வரையும் மலரவே இல்லை*
*அவர்வழி நடந்து அவர்வழி நாட்டைப்*
*படைப்போம்! மக்கள் துயர்துடைப் போமே!*

### கவிஞர் இளசை. எஸ். சுந்தரம் – அறிமுகம்

*இளசை சுந்தரம் எம் "கலைச் செல்வர்"*
*வானொலி அண்ணா என்று மழலையர்*
*மகிழ்ந்து அழைத்திடும் மாண்பினை யுடையவர்;*
*இன்தமிழ்க் கவிஞர்; இனியபண் பாளர்*
*எனது உனது புனிதம் என்னும்*
*வரையறை கடந்த சிந்தனை யாளர்;*
*அண்ணா வழியில் சுதந்திரம் இதுவெனக்*
*காட்ட வருகிறார்! கவிதை தருகவே!*

முடிப்பு:

*வளமிகு தமிழின் நலமிகு கவிதையால்*
*காட்டினார் சுதந்திரம், கலைச்செல்வர் சுந்தரம்!*
*சுதந்திரம் என்பது,*
*மானிடச் சாதியின் மூச்சுக் காற்று!*
*அறிவும் அறிவறிந் திட்டஆள் வினையும்*
*சுதந்திர மாக வாழும் மானிடச்*
*சாதிக்கு உண்டு! சுதந்திரம் போலச்*
*மாயை காட்டி முடக்கிடக் கொடிய*
*சிறையினில் கிடந்திடும் மன்பதை உலகம்!*
*அண்ணா எந்த வழியினில் நின்றார்?*
*சுதந்திர மாக வளமொடு வாழலாம்*

என்று திராவிட நாடு கேட்ட
நந்தம் அண்ணா சிந்தனை செய்தார்!
திராவிட நாட்டிலும் உயர்ந்தது பாரத
நாட்டின் சுதந்திரம் என்றுகண் டார்!பின்
திராவிட நாடு வேண்டாம் நமக்குப்
பாரத நாட்டுச் சுதந்திரம் தேவை
என்றார் திடமாய்! நின்றார் உறுதியாய்!
ஆயினும்,
உரிமை வேறு உறவு வேறு என்ற
அண்ணாவின் இதயம் இன்றும் நினைவோம்!
காலிஸ்தான் கூர்க்காஸ் தான் என்னும் குரல்களை
முடக்கிப் போடவும் ராஜீவ் காந்திக்கு
அருகினில் நின்று குரல் கொடுக்கவும்
இந்தி வெறியரை அடக்கி வைக்கவும்
இற்றை நாளில் அண்ணா இல்லையே!
அண்ணா வழியில் அருமைப் பாரதம்
ஒரு நா டேயாம்! இஃதே உண்மையாம்!

## கவிஞர் வெள்ளி நிலவன் – அறிமுகம்

கவிஞர் வெள்ளி நிலவன்முந் துகிறார்;
அண்ணா வின்மொழிக் கொள்கை இதுவெனக்
கவினுறக் காட்ட வருகிறார்! வெள்ளி
வீதி யாரை நினைவூட்டு கின்ற
வெள்ளி நிலவனே! இருபெய ரொட்டுப்
பண்பா ளர்நீர்!
வெள்ளி நிலவெனில் நிறைநிலா வாகும்!
குறைவி லாதொளி வீசும் நிலவாம்!
நிலவுக் கும்குறை வந்துஅதை மூடி
இருள்க லந்தொளி தருதலும் உண்டு!
இன்று நம் தாய்த்தமிழ் மொழிநிலை வெள்ளி

*நிலவல்ல! அறிவியற் படிப்பில் தமிழில்லை!*
*எத்துறை யிலும்தமிழ் சிறந்திட வில்லை!*
*ஆங்கில மொழியில் ஆர்வம்நம் அன்னை*
*மொழி வளர்ச்சிக்குத் தடையா யிற்று!*
*வெள்ளி நிலவனே! வருக! என்சொல*
*நினைக்கிறீர்? வந்து உரைத்திடு வீரே!*

முடிப்பு:

*கவிஞர் வெள்ளி நிலவன் கவிதையைக்*
*கேட்டோம்! கவிஞர் வெள்ளி நிலவன்*
*நிறைநிலாக் காட்டாது அமாவா சையையே*
*விரிவாகக் காட்டி விளக்கினார் அன்றோ!*
*அண்ணா வழியில் தமிழ்ஒளி விளக்கினை*
*ஏந்தி நடப்போம்! இருளினை நீக்குவோம்!*
*அறிவினை வளர்ப்பது அன்னை மொழி, தமிழ்!*
*மொழிகளில் மூத்தது எந்தமிழ் மொழியே!*
*எண்ணத்திற் சிறந்தது எந்தமிழ் மொழியே!*
*இலக்கியத் தாற்சிறந் ததும்தமிழ் மொழியே!*
*மண்ணையும் விண்ணையும் மாண்புற அளந்து*
*காட்டிய மொழியும் எந்தமிழ் மொழியே!*
*கூத்து, இசை, இயல்என வளர்ந்தது முத்தமிழ்!*
*ஆரியத் தால்தமிழ் கெட்டது அற்றை நாள்!*
*புண்ணிருந் தாறிய பூவுடல் தழும்புபோல்*
*தமிழில் ஆரியம் கலந்து கெடுத்தது!*
*மயிலாடு துறை மாயவர மானது!*
*மறைக்காடு வேதா ரண்ய மானது!*
*திருநிலை யென்பது ஸ்திரமா யானது!*
*சோறு என்பது சாதம் ஆனது!*
*மணத்தி னால்மனம் கூடிடும் நிகழ்வாம்*
*திருமணம் விவாக சுபமுகூர்த்த மானது!*

இப்படிப் பலப்பல பலப்பல உண்டு!
அண்ணா கலப்புத் தமிழினை எதிர்த்தார்!
தனித்தமிழ் பேசினார்! தகவுடன் வளர்ந்தார்!
இன்று,
அந்நிய மொழியாம் ஆங்கில மொழியும்
தேசியம் என்ற பெயரால் இந்தியும்
அன்னைத் தமிழினை நெருக்க லாயின!
அண்ணா வின்குறிக் கோள்இதோ அறிக!
"அன்னை மொழிஅரி யணைஏற வேண்டும்!
தமிழ்நாட் டினில்தாய்த் தமிழ்துறை தோறும்
பயிற்று மொழியாய்ப் பரவிட வேண்டும்!
எங்கும் எதிலும் தமிழே ஆண்டிட
வேண்டும்!" என்றார்! இதுநடந் தாலே
நாடு – தேசியம் நலம்பெற லாகும்!
ஆதலின் மைய அரசாள் வோரே!
மாதிரிப் பள்ளி களில்தமிழ் மொழியைப்
பயிற்று மொழியாக் கிடுவீர்! நயத்தகு
தமிழைக் காப்பீர்! தமிழின் தகுதி
உயர்ந்திட உதவுவீர்! இந்தி மொழியும்
ஆங்கில மொழியும் ஆதிக்க மொழிகளாய்
ஆதல் கூடா! ஆதல் கூடா!
என்பதுஅண் ணாவின் மொழிக்கொள்கை யாமே!
இந்தி ஆங்கிலம் இவையிரண் டினிலும்
இந்தி யால்வரும் கேட்டினைத் தவிர்க்கலாம்!
ஆங்கில மொழியோ அன்னை மொழியாம்
தமிழினுக் குரிய அரியணை அமர்ந்து
தமிழைக் கீழே இறக்கி விட்டது!
கொஞ்சும் தமிழ்ம ழலையர் கூட
டாடி மம்மி என்று பேசிடும்
காலம் வந்து விட்டதே, இங்கே!

*தமிழ்மொழி வளரத் தடையாய் இருப்பது*
*ஆங்கில மே!ஆங் கிலத்தைப் பயிற்று*
*மொழியி லிருந்து முதலில் அறவே*
*விலக்கி அன்னைத் தமிழைஅந் நிலைக்குக்*
*கொணர்க! கொணர்க! அன்றே நமது*
*தமிழ்சிறக் கும்தமி ழர்நிலை உயரும்!*
*அண்ணா வின்வழி ஆற்றுவம் பணியே!*

### கவிஞர். மீனவன் – அறிமுகம்

*வையகம் இயக்கும் வரலாற் றுணர்வு*
*கடமை உணர்வைக் காசினி யோர்க்குத்*
*தோற்றுவிக் கின்றது! செந்தமி ழினத்தின்*
*தொன்மை நலமார் வரலாற் றுணர்வு*
*அறிஞர்அண் ணாவின் கடமை உணர்வினை*
*முகிழ்க்கச் செய்தது! மீனக் கொடியினைத்*
*தாங்கி இந்தத் தரணியை யாண்டு*
*புகழ்படைத் தவர்கள் பாண்டிய மன்னர்கள்!*
*அண்ணா நெஞ்சம் கவர்ந்த மன்னர்கள்!*
*மீண்டும் பழந்தமி ழகத்தைக் கண்டிடத்*
*துடித்தெ ழுந்தவர் அறிஞர் அண்ணா!*
*இங்கொரு மீனவன் வருகிறார்! இவர்க்கு*
*மீனக் கொடியில்லை! ஆட்சியுமில்லை!*
*ஆனா லும்கவி ஆட்சி செய்பவர்!*
*கண்பார் வையினால் கருவுறச் செய்யும்மீன்!*
*அண்ணா கண்களே பாடம் சொல்லிடும்*
*கவிஞர் மீனவன் அண்ணா வழியில்*
*கடமை இதுவெனக் காட்ட வருகிறார்!*
*ஐயா! கவிஞர் மீனவன் அவர்களே!*
*கடமை இதுவெனக் காட்டி, இன்றையக்*
*கடமையைச் செய்வீர்! கவிதை பொழிகவே!*

முடிப்பு:

*அண்ணா வாழ்வு கடமை வாழ்வு!*
*அவர்தம் உடலைப் புற்றுநோய் அரித்துத்*
*தின்னும் பொழுதும் கடமையைச் செய்யத்*
*தவறாக கடமை வீரர்நம் அண்ணா!*
*யாழ்இருப் பதுஇசைத்து மகிழவே!*
*நூல்இ ருப்பது படித்து மகிழவே*
*உடல்இ ருப்பது கடமை செய்யவே!*
*என்றுதன் தம்பிக்கு எழுதிக் காட்டினார்!*
*அந்தஅண் ணாவின் வழியில் அருமைத்*
*தமிழைத் துறைதொறும் வளர்க்கும் கடமை*
*செய்திடு வோம்!தமிழ் இனநலம் காப்போம்*
*நாடொறும் நாட்டுக் கடமைசெய் குவமே!*

கவிஞர். அ. மணிமேகலை – அறிமுகம்

*வையகம் முழுதும்உள் நின்று வருத்திடும்*
*பசியினை மாற்றி அறவேள்வி செய்து*
*சிறைச் சாலை யாவையும் அறச்சாலை யாக்கிய*
*மாதவச் செல்வி மணிமே கலையை*
*நினைவிற் கொணர்ந்து நீள்பசிப் பிணியை*
*எதிர்த்துப் போராட எம்மையும் தூண்டும்*
*செந்தமிழ்ச் செல்வி மணிமே கலை, இவண்*
*அண்ணா வழியில் பண்பா டிதுவெனக்*
*காட்ட வருகிறார்! வருக! வருக!*
*மணிவார்த் தைகளால் ஆனநற் கவிதை*
*தருக! தருக! தழைகபண் பாடே!*

முடிப்பு:

*பணிவொடு இன்சொல் அடக்கம் இவை, பண்*
*பாட்டின் வாயில்கள் நம்தலை முறையில்*

அரசியல் வாழ்வு வாழ்ந்தவர் தம்மில்
இவற்றை அணியெனக் கொண்டவர் அண்ணா!
இவர்போல் ஒருவர் யாரோ கூறுக!
காட்சிக்கு எளியர்; கடுஞ்சொல்லர் அல்லர்.
இனியபண் பாட்டுக்கு இலக்கிய மானவர்
தமக்கென ஓர்நிலை, நினைப்புக் கொண்டவர்.
அரசியல் வாழ்வில் கொள்கை, கோட்பாடு
இவற்றில் வேறுபாடு உடையவ ராயினும்
அனைத்துக் கட்சி யாளரிடமும்
நொய்முனை யளவும் பிரிவுணர் வின்றிப்
பெருந்தகை மையொடு புதியபண் பாட்டுத்
தலைவராய் விளங்கிய தன்மையை எடுத்துச்
சொல்லிட வார்த்தை இல்லை! இல்லையே!
இற்றைநாள் அரசியல் இழந்து நிற்பது
அண்ணா வின்பண் பாடே யாகும்!
அண்ணா வழியில் பண்பாடு போற்றிப்
பாடறிந் தொழுகுவோம் பாரினில் நாமே!

## பொற்கிழிக் கவிஞர் டாக்டர். ச. சவகர்லால் – அறிமுகம்

பொற்கிழிக் கவிஞர்; பொர்திகையில் தமிழ்நலம்
காக்கும் நம் திருவள் ளுவர்கல் லூரியின்
முதல்வர்; எப் போதுஇவர் அரசிய லுக்குச்
சென்றார்? நமக்குத் தெரிய வில்லையே!
இனியநற் கவிஞரே! பாடநீர் வருவது
கட்சி அரசியல் அல்ல!அண் ணாவின்
அரசியல் ஞானம்! ஒருசிலர் மட்டும்
இயக்கும் கட்சிக ளுக்கே அரசியல்
சொந்த மாகாது! என்பது அறிக!
மக்கள் நெறிஅர சியல்நெறி யாகும்!

*இஃதே அண்ணா கொள்கையு மாகும்.*
*கவிஞர் சவகர் அண்ணா வழியில்*
*அரசியல் இதுவென அமைத்துக் காட்டுவார்!*
*அறிஞர்அண் ணாவின் பாராளு மன்ற*
*அரசியல் வாழ்வில் அமரர் நேரு*
*பெருமான் பங்கேற் றிருந்தார்! நேருவின்*
*மறைவின் போது அண்ணா வைவிட*
*அழுதவர் வேறுயார்? ஆதலால் சவகர்*
*அண்ணா அரசியல் இதுவெனக் காட்டுதல்*
*பொருத்தமே! வருக! கவிதை பொழிகவே!*

முடிப்பு:

*சவகரின் கவிதையைக் கேட்டோம்! அண்ணா*
*மக்க ளாட்சியின் காவலர் என்றும்*
*ஆதிக்கத்தின் தடுப்புச் சுவர் என்றும்*
*தன்னாட்சி உரிமையின் குரல் என்றும்*
*நாடும் அறியும்; நாமும் அறிந்தனம்!*
*வாழ்ந்த நம் இனத்தின் வரலா றதனைப்*
*புதுப்பிப் பதுவே அண்ணா அரசியல்!*
*ஏழைமை யகற்றி எல்லா ருக்கும்*
*வாழ்வளிப் பதுவே அண்ணா அரசியல்!*
*அண்ணா கண்ட அரசி யல்வழி*
*இஃதெனத் தெளிந்தோம்! அவர்வழி நடக்கும்*
*துணிவினைப் பெறுவோம்! தொடர்வோம் பணியினை!*

### கவிச்சுடர். கவிதைப் பித்தன் – அறிமுகம்

*கவிச்சுடர் .....! கவிதைப் பித்தன்!*
*வியப்பா ன, பெயர்! ஐயா கவிஞரே!*
*நீர்,*
*கவிதைப் பித்த னாகிட வேண்டாம்!*

*கவிச்சுடர் என்றே என்றும் திகழுவீர்!*
*அண்ணா ஒருசுடர்! அறிவுச் சுடர்அவர்!*
*அண்ணா வின்சுடர் மிக்க சமுதாய*
*உணர்வினைக் காட்டக் கவிச்சுட ரே, நீர்*
*வருக! வருக! கவிஒளி வீசுக!*

முடிப்பு:

*அண்ணா வின்தலை முறையினில் நாட்டில்*
*சமுதாயம் இல்லை! சாதிகளே இருந்தன!*
*சாதி மதங்களில் சார்பிலாச் சமுதாயம்*
*காண்பதே அண்ணா வின்ஆ வேசம்!*
*சுரண்டும் வர்க்கம் இலாச்சமு தாயம்*
*காண்பதே அண்ணா காட்டும் சமுதாயம்!*
*அண்ணா படைத்த பார்வதி பி.ஏ.*
*என்னும் புதினம் இதுசமு தாயம்*
*என்று காட்டிடும்! இன்னும் அந்தச்*
*சமுதா யம்உரு வாகவே இல்லை!*
*அண்ணா வழியில் அச்சமு தாயம்*
*காண்பது நம்மனோர் கடமை என்று உணர்வோம்!*

## கவிஞர் மாரியதாஸ் – அறிமுகம்

*உலகப் பொதுமறை தந்த வள்ளுவர்*
*மானுடத் தின்கட மைகுடி செயல்எனக்*
*காட்டிய ஒட்பம் உணர்க! தாம் பிறந்த*
*குடியைஆ ளாக்குதல் குடிசெயல் எனப்படும்!*
*குடியிற் சிறந்தவர் கவிஞர் மரியதாஸ்!*
*இவர்ஓர் ஆசுகவி! உணர்ச்சி ததும்பப்*
*பாடிடும் பைந்தமிழ்க் கவிஞர் கோமான்!*
*தெள்ளு தமிழில் சிறந்த கவிதைகள்*
*அள்ளி வழங்கிடும் அருமைக் கவிஞர்!*

*அண்ணா வழியில் குடிசெயல் வகையைக்*
*காட்டிட வருக, மரியதாஸ் கவிஞரே!*

முடிப்பு:

*மாத்தமிழ்க் கவிஞர் மரியதாஸ் பாடிய*
*ஏற்றமார் கவிதை கேட்டுநாம் மகிழ்ந்தோம்!*
*அண்ணா வழியில் குடிசெயல் வகையினை*
*ஐயத்திற் கிடமின்றி அருமையாய்க் காட்டினார்!*
*வாழிய கவிஞர், வண்டமிழ் எனவே!*
*தமிழருக் குத்தன் மானம் உண்டு! ஆனால்*
*இனமானம் என்பது இம்மியும் இல்லை!*
*அயலினத் தால்தமிழ் இனம்அழி யாது!*
*ஆயினும் இங்கே ஒருகுடிப் பிறந்தோர்*
*பிணங்குவர்! பொருதுவர்! இணங்குதல் செய்யார்!*
*தமிழின அழிவு தன்னினப் பகையால்*
*தான்நிகழ் கின்றது! ஏன்நிகழ் கின்றது?*
*அயலார் ஒருவர் இடையிற் புகுந்து*
*நல்லோர் எனவும் தொல்லோர் சென்ற*
*வழக்கிது வென்றும் நயத்தகு நாகரிகம்*
*இதுவென மொழிந்தும் புகழ்மொழி களினால்*
*மயக்கியும் காற்றும் இடைப்புகு தாத*
*நெருக்க முடைய தமிழரைப் பிரித்து*
*விடுவர்இஃ துண்மை வரலா றாகும்!*
*அண்ணா – சம்பத் பிரிவின் போது*
*பின்னணி யார்? அதை உற்று நோக்குக!*
*கன்னித் தமிழின் காவலர் கலைஞர்*
*பூமண் டலம்புகழ் பொன்மனச் செம்மல்*
*இவரிடைப் பிரிவை உருவாக் கியது யார்?*
*கூர்ந்துநோக் கிடுவீர்! குடியினைக் கெடுப்போர்க்கு*
*இரையா காதீர்! இரையா காதீர்!*

நம்மின உறவினைக் கெடுக்கும் புகழுக்கு
இரையா காதீர்! இரையா காதீர்!
இனமானம் காத்தல் நந்தம் கடமை!
"குடிசெய்வார்க் கில்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும்"எனும் தமிழ்மறை
விளக்கம் அறிக! இத்திருக் குறட்கோர்
விளக்கமாய் வாழ்ந்தவர் அண்ணா ஆவார்!
பெரியா ரின்கடும் பகைத்தீக் கெதிரில்
அறிஞர்அண் ணாகுளிர் தென்ற லாகவே
விளங்கினார்! சிறிதும் துளங்கினா ரல்லர்!
அண்ணா தேர்தலில் தோற்றிட வேண்டும்
என்பது பெரியார் கொண்டதோர் ஆசை!
ஆயினும் அண்ணா வெற்றியே பெற்றார்!
வெற்றி பெற்ற கொற்றத் தமிழராம்
அறிஞர் அண்ணா அப்பகை மறந்து
பெரியார் மாளிகை நோக்கி நடந்தார்!
தமிழ்நா கரிகம் இதுவெனத் தரணி
உணர்ந்திடப் பெரியா ரிடம்இஃ துரைத்தார்!
"நீயே தலைவன்; இது நின் அரசு"
என்றார்! உலகப் புதுமைஇஃ தன்றோ!
நம்பெருந் தலைவர் காம ராசரைப்
"பொற்காப்பு" எனச்சொலிப் போற்றி மகிழ்ந்தார்!
அண்ணா வழியில் தமிழினம் காப்போம்!
அண்ணா வழியில் தமிழ்க்குடி வளர்ப்போம்!
அஃதே வழியெனச் சபதம்இங் கேற்போம்!

நிறைவு:

பழகிய நாள்கள் சிலவே யாயினும்
அவர்தம் நட்பு மாட்சிமை யுடையது!
அண்ணா!

*தமிழினம் தோன்றிய தனிப்பெரும் பிறவி!*
*பண்டும் அவர்போல் இருந்தவர் இல்லை!*
*இனியும் அவர்போல் இருப்பவர் ஐயமே!*
*நெஞ்சிற் பகைகொளாப் பேராளர்அவர்*
*நயந்தினி துரைக்கும் நாவினர்! பிறரை*
*உயர்த்திடு வதிலே உவப்படைந் தவர்அவர்!*
*உயர்த்தியே உயர்ந்த தலைவர்நம் அண்ணா!*
*கனிவும் கண்டிப்பும் உடைமை அவர்தம்*
*சிறப்பு! அருமறை உரைத்த நெறிப்படி*
*பெரியார் சொல்லினை ஏற்று வாழ்ந்தவர்!*
*சிறந்தார்வாய் இன்னாச் சொல்நோற் றமையால்*
*துறந்தா ரினும்அவர் தூய்மை யுடையவர்!*
*குடிசெயல் திறம்மிக வுடையவர் அண்ணா!*
*அண்ணா விற்கு நன்றி காட்டுதல்*
*அவர்தம் வழியில் வாழ்தலே யாகும்!*
*நன்றி கூறி நாம்விடை பெறுகிறோம்!*

# 7. திருச்சி வானொலி பொங்கல் கவியரங்கம்

திருச்சிராப்பள்ளி
அகில இந்திய வானொலி பொங்கல் கவியரங்கம்
"நல்லகாலம் வருகுது!"
14–1–1987

*இன்பப் பொங்கல் இனியநாள் இன்று*
*அகில இந்திய வானொலி நிலையத்தார்*
*"நல்ல காலம் வருகுது!" என்று*
*எண்ணிக் கவிதையால் இயம்ப வைத்தனர்!*
*வாழிய நிலையத்தார்! வானொலி நேயர்கள்*
*வாழிய! மக்கள் அனைவரும் வாழ்கவே!*
*"நல்ல காலம் வருகுது" என்பான்*
*தெருவிலே வருகிற குடுகுடுப் பாண்டி!*
*"நல்ல காலம் வருகுது" என்பர்*
*சாதகம் கணிக்கும் சோதிடர்! ஆயினும்*
*நாம் அறிந்ததை நவில்கிறோம் இங்கே!*
*நல்ல காலம் தானாக வந்திடும்*
*என்பதை மட்டும் நம்பிட வேண்டாம்!*
*நல்லது – கெட்டது*
*காலத்தில் ஏது? காலத் தினையே*
*நல்லதாக் குவதும் கெட்டதாக் குவதும்*
*ஐயா! நீர்தான் என்பதை அறவீர்!*
*நல்ல காலத்தை நாம் படைத்திட*
*இன்றே உறுதி கொள்வோம்! பொங்கற்*
*பானை குயவர் வனைந்து படைத்தது!*
*செந்நெல் அரிசியும் செங்கரும்புச் சாறும்*
*உழவர் உழைப்பின் விளைவு! இவையெலாம்*

உழைப்பின் விளைவாய், இருக்கும் பொழுது
காலத்தை நன்றாக்கல் கற்பனையிற் சாலுமோ?
உலக இயற்கையின் உயிர்ப்பு உழைப்பே!
மண்முதல் விண்வரை மண்டிக் கிடந்திடும்
பூத பௌதிக உலகம் யாவையும்
ஓயா துழைத்து உயிர்ப்பொடு வாழும்!
இம்மண் ணுலகை எழிலுறக் காத்திடும்
ஓரறிவு உயிர்முதல் ஐயறிவு உயிர்வரை
இயற்கை நெறியில் இம்மியும் தப்பாது
உழைப்பி னாலே தழைத்துவாழ் கின்றன!
எல்லா உலகமும் ஆனவ னாக
இலங்கும்எம் இறைவனும் கூடஅப் படியே!
இறைவ னுக்குப் பூசனை யென்றால்
எதற்குப் பூசனை? இறைவனுக் காஅது?
இல்லை, இல்லை! ஏற்றமார் மானுடம்
உழைப்பினால் உயர்ந்து விளங்கிடும் உண்மையைக்
காட்டிட வேதான் கடவுட்குப் பூசனை!
இறைவன்பால் இரத்தலுக்கு ஏற்பட்ட தன்று!
மானிடச் சாதியின் மாண்பமை படைப்பின்
ஆற்றலைக் காட்டும் செயல்அது வாகும்!
இறைவன் திருவுளம் பொய்த்திட வில்லை!
என்பதன் புனிதச் சான்றே பூசனை!
ஆதலின்,
நம்பிக் கையினால் நடந்தது போதும்!
அறிவ றிந்த ஆள்வினை ஓம்புமின்!
நலமிலாக் கலியுகத் தோடு பொருதுமின்!
தொழில்களும் கலைகளும் செழிக்கச் செய்திடும்
கிருத யுகத்தினை விரைந்து கொணருமின்!
புதியதோர் உலகம் காண, நீர் எழுமின்!
கழனி யிற்களை எடுத்தல்நன் றென்பது

வேளாண் மைத்தொழில் வித்தக மாகும்
மனித குலத்தின் மாண்பினை அழிக்கும்
தீமையைக் களையெனக் கருதி எடுத்தல்
நன்றாம் என்றிடும் நமது வள்ளுவம்!
கம்பன் கண்ட வாறு மானிடம்
வெற்றி பெற்றிட வேண்டினால் வேற்றுமை
யாவை யும்களை யெடுத்திட வேண்டும்!
கடவுள் வென்றார்! தேவர்கள் வென்றனர்
என்ற நியதியைக் கம்பன் மாற்றி
"மானிடம் வென்றதம் மா!"என வுரைத்தான்!
ஆம்! ஆம்! மானிடம் வென்றிட வேண்டும்!
கம்பன் கண்ட மானிட வெற்றி
உயிர்க்குல மனைத்தின் ஒருமைப்பா டாகும்!
வேற்றுமை கருதேல்! விரிந்தமா னிடத்தின்
ஒருமைப் பாட்டினை உன்னுக! உன்னுக!
இல்லார் உடையார் எனும்இரு நிலைகள்
எக்கா லத்திலும் வேண்டவே வேண்டாம்!
கல்வி கேள்வியால் மானிடச் சாதியின்
பொறிகளும் புலன்களும் செழித்து வளர்க!
ஒருமைப் பாட்டினில் ஊன்றிநின் றிடுக!
பொதுமை காணும் நோன்பியற் றிடுக!
தனக்கென முயலும் பேதைமை தரணியில்
பகுத்தறி வற்ற உயிர்கள்பா லில்லை!
பகுத்தறி வுள்ள மனிதனே இதுஏன்?
மண்செ ழித்திடில் மரம்செ ழித்திடும்;
மரம்செழித்து மண்செழித் த(து)இல்லை!
மன்பதை உலகம் செழித்தபின் தான்நின்
வாழ்க்கை செழித்திடும் என்பது அறிக!
உலகம் ஒருபெரும் வீடு! அதனுள்
உன்றன் வீடு ஒருசிறு மூலை!

பிறர்க்கென முயல்வதே பெரிய நோன்பெனச்
சங்கச் சான்றோன் சாற்றிய தறிக!
பைந்தமிழ்த் தேர்ப்பா கன்பா வேந்தன்
நன்றிது வென்று நயமொடு காட்டிய
நெறியினைத் தேர்ந்துஅஃ துரிமையாய்க் கொள்வோம்!
"உன்வீடு – உனது பக்கத்து வீட்டின்
இடையில் வைத்த சுவரை யிடித்து
வீதிகள் இடையில் திரையை விலக்கி
நாட்டொடு நாட்டை இணைத்து மேலே
ஏறு! வானை இடிக்கும் மலைமேல்
ஏறி நின்று பாரடா எங்கும்!
எங்கும் பாரடா இப்புவி மக்களை!
பாரடா உனது மானிடப் பரப்பை!
பாரடா உன்னுடன் பிறந்த பட்டாளம்!
என்குலம் என்றுனைத் தன்னிடம் ஒட்டிய
மக்கட் பெருங்கடல் பார்த்து மகிழ்ச்சி கொள்
அறிவை விரிவுசெய்! அகண்ட மாக்கு!
விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை!
அணைந்துகொள்! உனைச் சங்கம மாக்கு!
மானிட சமுத்திரம் நானென்று கூவு!
பிரிவிலை எங்கும் பேத மில்லை!
உலகம் உண்ணஉண்! உடுத்த உடுப்பாய்"
என்று பாவேந்தன் இயம்பிய தறிக!
அன்று பாரதி புதியகோ ணங்கியாய்
"நல்ல காலம் வருகுது" என்றான்!
அடிமை நாட்டினில் அவன்வாழ்ந் தமையால்
"நல்ல காலம் வருகுது" என்று
எதிர்கா லத்தால் எடுத்துக் கூறினான்!
இன்றுநாம் யாவரும் சுதந்திர மக்கள்!
இன்றுநம் கடமை ஏற்றமார் படைப்பே!

நல்ல காலத்தை நாம்படைத் திடுவோம்!
தமிழில் அறிவியல் தகவுறப் படைப்போம்!
"ஒன்று பரம்பொருள்; நாம்அதன் மக்கள்;
உலகு இன்பக் கேணி"என் றுரைத்த
மகாகவி பாரதி மகாவாக் கியத்தை
மன்பதை உலகின் வாழ்க்கை யாக்குவோம்!
எல்லா ருக்கும் எல்லாம் என்றிடும்
சமுதாய நீதியைச் சமைப்போம் வருகவே!

### கவிஞர். அபிபுல்லா – அறிமுகம்

இந்தநூற் றாண்டு
காலமும் தூரமும் கடந்தநூற் றாண்டு!
கிழக்கும் மேற்கும் வடக்கும் தெற்கும்
அனைத்தையும் ஒன்றாய் இணைத்துச் சுருங்கிய
எல்லை யாக்கியது இந்தநூற் றாண்டு!
ஆதலால்,
பன்மொழிப் படிப்பும் பல்கலைப் படைப்பும்
வளர்ந்து மக்கள் மாண்புற வேண்டும்!
படிப்பின் தொடக்கம் பள்ளியி லாகும்!
படிப்பின் விரிவு வாழ்க்கையி லாகும்!
படிப்புஎக் காலமும் வேண்டிய தாகும்!
இறக்கும் நொடிக்கு முன்னரும் நூலினை
எடுத்துப் படித்த கிரேக்க நாட்டுச்
சிந்தனை யாளனின் செயலினை ஓர்க!
வான்புகழ் வள்ளுவம் சாந்துணையும் கற்க
என்றெடுத் தோதல் நன்றிவண் நினைக!
நாலிரு நூல்கள் வாங்குக எனவும்
படிப்பினை வளர்த்துக் கொள்க எனவும்
பொங்கல்நன் னாளில் பொங்கல் படைத்து
உண்ண விரைந்திடும் நம்மனோர்க் கெல்லாம்

*எடுத்து இயம்புவார் கவிஞர் அபிபுல்லா*
*அவர்கவி படிப்பினை ஆகிடும் நமக்கே!*

முடிப்பு:

*படிப்பு வளருது எனப்பாட வந்த*
*புதுமைக் கவிஞர் அபிபுல்லா*
*படிப்பின் பயனா கியநல் லறிவைத்*
*தேடுக என்றார்! விரிவிலா மானிடம்*
*கிழித்த எல்லைக் கோட்டினைக் கடந்து*
*அறிவினைத் தேடல் செய்குவோம்! அனைவரும்!*
*வினா – விடை களில் மலி வான சரக்கு*
*வேண்டாம்! ஞானம் தேடுவோம்! அடைவோம்!*
*உண்மையை ஆடம் பரத்தி னின்றும்*
*மீட்போம்! மண்மேல் விளங்கிடச் செய்வோம்!*

## கவிஞர் மரியதாசு – அறிமுகம்

*உழவொடு தொழிலும் ஒருங்குநன் கிணைந்து*
*வளர்ந்தால் தான்இவண் மாந்தர்தம் வாழ்நிலை*
*உயரும் என்பது உண்மை. தெருவெலாம்*
*தொழில்கள் பெருகி வளருதல் வேண்டும்*
*உழைக்கும் கைக்கே உணவினை அள்ளும்*
*உரிமை உண்டு! அந்தநல் உழைப்பு*
*பெருகிடத் தொழில்கள் பெருகிட வேண்டும்*
*நாட்டினில் தொழில்கள் பெருகுது என்று*
*நமக்குத் தொழில்கவி தைஎன்று நவின்ற*
*பாரதி மரபில் வந்தநற் பாவலர்*
*சந்தக் கவிஞர் மரிய தாசு*
*கவிதை முழங்குவார் செவிமடுப் பீரே!*

முடிப்பு:

*மாத்தமிழ்க் கவிஞர் மரிய தாசு*
*தொழில்பெரு குதுஎனச் சொல்லியகவிதை*
*கவிதையா? அல்ல!அஃ தோர்ஆ வேசம்!*
*நந்தம் நாட்டினை நாடொறும் வளர்க்கத்*
*தொழில்பல செய்து வளமுடன் வாழ்கவே!*

## கவிஞர் பழநி. இளங்கம்பன் – அறிமுகம்

*நந்தம் வாழ்க்கை நாளும் மகிழ்வுற*
*நமக்குத் தேவை நல்ல செல்வமே!*
*பணம்எனப் படுவது பயம்தரும் பூதமாய்*
*உயர்ந்து நிற்கிற ஒருகா லம்இது!*
*செல்வம் – பணம்எனத் தேறுதல் பிழையாம்*
*மனிதன் வாழ்ந்திடற் குரியநுகர்வுப்*
*பொருள்களே செல்வம்! பொதுமறை திருக்குறள்*
*"வேண்டின்உண் டாகத் துறக்க" என்றது.*
*இந்தத் தத்துவப் பொருளே பழநியில்*
*ஆண்டியாய் நிற்கும் அவன்திருக் கோயில்*
*செல்வச் செழிப்பில் சிறந்து திகழ்வது!*
*திருக்குற் றாலத் தருவிக் கவிநடை*
*பழநிப் பஞ்சா மிர்தம் எனச்சுவை*
*ததும்பிடும் கவிதை 'தரும்'இளங் கம்பன்*
*"செல்வம் வருகுது!" எனக்கவி நல்குவார்*
*செல்வம் சேர்க்கும் ஆர்வம்மிக் குடையீர்!*
*தமிழ்இளங் கம்பன் தாரார் செல்வம்!*
*பொருள்செய் புதிய முயற்சிகள் காட்டுவார்!*
*செவிமடுத் திடுவீர்! செயலினைத் தொடங்குவீர்!*

முடிப்பு:

*செல்வம் வருகுது எனக்கவி பாடிய*
*பழநி இளங்கம்பன் பாட்டினைக் கேட்டோம்!*
*வாழ்வோம் அவர்நெறி, வளமெலாம் எய்தியே!*

கவிஞர் மா. வரதராசன் – அறிமுகம்

*நந்தம் நாடு நனிபல சாத்திரம்*
*கண்டதோர் நாடு! ஆயினும் கணக்கிலாச்*
*சாத்திரம் ஆனதால் சழக்குக ளுக்கே*
*வித்தா யின;பல வேற்றுமை விளைத்தன!*
*"சாத்தி ரம்பல பேசும் சழக்கர்காள்"*
*என்றுநம் அப்ப ரடிகளும் ஏசினார்!*
*ஆயினும் என்ன? ஆண்டவ னுக்கே*
*புனிதம்சேர்க் கும்எனும் பொய்ச்சாத்தி ரங்களால்*
*சாதியை வளர்க்கும் சழக்கர்தம் வழக்குகள்*
*வளருதல் கூடா! மயக்கும்அச் சாத்திரம்*
*மன்பதை நோக்கி மாறிட வேண்டும்!*
*இவ்வா றெண்ணல் ஈரோட்டு நெறியல!*
*வள்ளலார் வகுத்த ஒள்ளிய நெறியே!*
*பழைய சாத்திரம் மீதுள பற்று*
*திருவா ரூரின் தேரைப் போன்றது!*
*திருவா ரூர்த்தேர் தெருவில் நகருதல்*
*எளிதன் றென்பது யாவரும் அறிந்ததே!*
*அத்திருத் தேர்வடம் அக்கறை யோடு*
*பிடித்திடப் பெரிய கூட்டம்இன் றில்லை!*
*பழைய சாத்திரப் பைத்தியத் தேரைப்*
*புதியதோர் உலகம் நோக்கி இழுத்துச்*
*சென்றிட, பழைமையைச் சிந்தையில் தேக்கி*
*அஞ்சி நின்றிடும் நந்தமக் கிங்கே*

*புதியதோர் உலகம் படைத்திடத் துணையாய்*
*நிற்கும் அறிவியல் அற்புதம் காட்டி*
*ஆன்ற தொழில்நுட்பம் தேர்ந்து சிறந்திட*
*வரமிக வழங்கி மாத்தமிழ்க் கவிஞர்*
*வரத ராசன் வழிகாட்டு வாரே!*

முடிப்பு:

*வண்டமிழ்க் கவிஞர் வரத ராசன்*
*தந்தநற் கவியால் சாத்திர வளர்ச்சி*
*இதுவெனத் தெளிந்தோம்! இறும்பூ தெய்தினோம்!*
*நந்தம் நாடு நலம்பெற் றுயர்ந்திடத்*
*தேர்ந்த தொழில்நுட்பச் சிறப்பெலாம் காட்டினார்!*
*வையக மெல்லாம் செழித்துவா ழியவே!*
*புதிய பாரதச் சிற்பி நம்நேரு*
*விண்ணில் ஒளிரும் விண்மீன் கள்என*
*இருபத்தி ஏழு அறிவியல் ஆய்வு*
*மையம்கண் டார்இவை, சி.எஸ்.ஐ. ஆர்.என*
*அழைக்கப் படும்அவை வழங்கிடு கின்ற*
*தொழில்நுட்ப மெல்லாம் தேர்ந்துவாழ்ந் திடுவோம்!*

## கவிஞர் விசயலக்குமி நவநீத கிருட்டிணன் – அறிமுகம்

*கற்றவர் நியாயம் காணுவர்! அவர்பால்*
*சூது மதிஇல் வாதபோது!*
*தொழில்,*
*நியாயத்தின் பார்வையில் எல்லை கடந்தது!*
*அத்தொழில் இன்று பொருளினைச் சேர்க்கும்*
*இயந்திரம் ஆனதால் நியாயம் என்பதைக்*
*காணவே யில்லை! சாத்திரம் சழக்குக்கு*
*ஆளா காதெனில் நியாயம் காட்டிடும்!*
*செல்வம் செய்திடும் நன்மை பலப்பல!*

*எனினும் செல்வம் நனிநியா யத்தையும்*
*மறைத்திடும் என்பதை மறைப்பதற் கில்லை!*
*பிறர்தம் பங்கைத் திருடும் மாந்தர்*
*செல்வம் சேர்ப்பதில் நியாயம் பார்த்திடக்*
*கூடா தென்றொரு நியாயம் கூறுவர்!*
*அநியாயம் எலாம் நியாயமாக் காட்டிடும்*
*பொய்ம்மை நிறைந்த இந்தப் புவியினில்*
*மகளிர் வாழ்க்கைக் காக நியாயம்*
*கேட்டிடு கின்ற பாட்டிசைக் கவிஞர்*
*விசய லக்குமி நவநீத கிருட்டிணன்*
*"நியாயம் தெரியுது" எனக்கவி நிகழ்த்தப்*
*போகிறார்! கிராமப் புறத்து மாந்தரின்*
*இதயம் தெரிந்தவர்; இதமும் அறிந்தவர்*
*இசையமு தக்குயில் விசய லக்குமி*
*கவிதையில் நியாயம் தெரிவதைக் கேட்போம்!*

முடிப்பு:

*கவிதைப் பொழிலில் வெற்றி முரசு*
*கொட்டிடும் விசய லக்குமி இசைத்த*
*"நியாயம் தெரியுது" எனும் கவி கேட்டோம்!*
*நியாயம் தெரிந்தது!*
*சூடு பிறந்தது சுரணையும் வந்தது!*
*ஆயினும் நியாயம் செய்யத் தெரியுமா?*
*சத்திய மாக அதுதெரி யாது!*
*தனிஉடை மையெனும் பிணியும் தகவிலா*
*அதிகா ரமும்இவ் அவனியில் மனிதனைச்*
*சைத்தா னுக்கே அடிமை யாக்கின!*
*இன்றோ, சைத்தான் வேதம்ஓ துகிறது!*
*அன்புடை யீரே! சிந்தை தெளிமின்!*
*புதுமையும் பொதுமையும் படைத்திடும் நூல்களைத்*

*தேடிப் பிடித்துப் படித்திடு வீரே!*
*உடலின் அமைப்பு உழைப்பினுக் கேயாம்!*
*உழைத்திடும் உடம்பே உறுதி பெற்றிடும்!*
*உழைக்காத உடம்பு நோய்க்குண வாகும்!*
*உழைத்துத் தொழில்பல உவப்புடன் செய்வீர்!*
*புவியினர் நுகரும் பொருள்பல படைப்பீர்*
*சாத்திரம் புதுக்குவீர்! சழக்குகள் தவிர்ப்பீர்!*
*அறிவியற் பார்வை அனைத்திலும் தேவை*
*மண்ணில் விண்ணகம் மாண்புறப் படைக்கச்*
*செல்வம் பெருக்குவீர்! சிறந்த நியாயம்*
*தெரிந்துல கத்தோடு இசைந்துஒப் புரவால்*
*உயர்ந்து வாழுமின்! இதுவே கவிஞர்கள்*
*நந்தமக் குணர்த்திய நல்லசெய் திகளே!*
*நல்ல காலம் நனிவிரை வாகக்*
*காண்ப தென்பது எளிதா காது!*
*சந்து முனைகளில் சிந்துப் பாடல்கள்*
*திண்ணை வேதாந்தப் பேச்சுகள், உறக்கம்*
*வாரா நிலையில் வந்திடும் கனவுகள்,*
*இவைஒரு போதும் நல்லன அல்ல!*
*காலக் கொலைகள் தவிர்த்திடல் வேண்டும்!*
*கடுகி ஓடிடும் காலத்தைத் தடுத்து*
*நிறுத்தி வாழ்வுரு அளித்திடல் வேண்டும்!*
*கற்க நாடொறும் கற்க; கற்கவே!*
*கற்பது பருவ காலத் தொழில்அல்ல!*
*கற்பது வாழ்நாள் கடைமுறை தொடர்ந்து*
*நிகழ்ந்திட வேண்டிய நிகரிலா வேள்வி!*
*புதிய கருத்துகள் புத்துணர் வளிக்கும்*
*அறிவியல் காண்க! தொழில்நுட்பம் தேர்க!*
*மறைந்து கிடக்கும் வளங்கள் அனைத்தையும்*
*தொழில்திறத் தாலே வாழ்க்கைக் குப்பயன்*

ஆக்குக! அப்படி வளரும்அப் பொழுதே
சாத்திரம் தழைத்து வளரவேண் டாமா?
தாத்தா தனது பேரனுக்குச் சட்டை
தைத்து வைத்தலும் சகத்தினில் உண்டோ?
இன்றைய தலைமுறைக்கு இசைந்துவா ராத
சாத்திரம் அனைத்தையும் மாற்றி வளர்த்துப்
புத்துருக் கொடுமின்! பழைமை புதுமையை
ஈன்று தருதல் வேண்டு மல்லவா?
மகப்பே றிலாத மகளிர் மலடென
ஆனது போலப் புதுமைஈ னாத
பழைமையும் பயனற் றதுதான்! எனவே
சாத்திரம் புதுக்கி வளருமின்! இங்கே
நியாயம் தேர்ந்து தெளிந்திடு வீரே!
நேர்மை யென்பது யாது?கூறுவீர்!
இரண்டுபுள் ளிகளை இணைக்கும்ஓர் கோடு
நேர்கோ டாகும்! ஆரொரு வர்க்கும்
இசைவாய் இருப்பதே நேர்மை யெனப்படும்!
நியாயம் தெரிந்த சமுதா யத்தினில்
கலகம் இல்லை; காழ்ப்புகள் இல்லை!
நியாயம் நிலவிடும் ஊரினில் காவல்
தேவையே இல்லை!
இன்று நல்ல காலமும் இல்லை
என்பதே உண்மை யாயினும் எதிர்வரும்
இருபத் தோராம் நூற்றாண் டுக்கு
அழைத்துச் செல்கிற ஆயத்தம் உண்டு
மூத்த தலைவன் முன்னே செல்கிறான்
இந்த இருபதாம் நூற்றாண் டுடனே
சாதிச் சனியன் தொலைந்துபோ கட்டும்!
மதவெறிக் கலகம் மறைந்துபோ கட்டும்!
பிறர்தம் பங்கைத் திருடிச் சேர்த்திடும்

புன்மை நெறி,மண் புதைந்துபோ கட்டும்!
நல்லது எதுவென நன்குதேர்ந் திடுமின்!
காலம் போற்றுமின்! நாளும் போற்றுமின்!
புதியன பேணுமின்! பொழுதெலாம் உழைத்து
ஓங்குநற் செல்வம் உலகினிற் குவிமின்!
உறவு கலந்துநீர் உண்டு மகிழுமின்!
எல்லாரும் ஓர்குலம் எனமுர சறைமின்!
இதுதான் நல்ல காலம்என் பதுவே!
நல்லகா லத்தை நாம்படைத் திடுவோம்!
பொங்கல்நன் னாளில் புதிய பாரதம்
படைத்திட உறுதி யெடுப்போம்! வருகவே!

# 8. புதுச்சேரி பாவேந்தன் பாரதிதாசன் கவிதா வேள்வி

புதுச்சேரி பாவேந்தன் பாரதிதாசன்
கவிதா வேள்வி 26.12.1989
வாழ்த்துக் கவிதை

*புவிமண் டலத்தில் கவிதா மண்டலம்*
*பிரெஞ்சு மணங்கமழ் பெருமைசேர் புதுவை*
*மண்ணிலே தோற்றுவித் திட்டதேன்? எதனால்?*
*புதுவையி லேதான் புதுயுகக் கவிஞன்*
*பாரதி வாழ்ந்து விடுதலை முரசம்*
*பார திர்ந்திட ஆர்த்தனன்! மேலும்*
*பாரதி தனது கவிமர புக்கு, ஒரு*
*வாரிசை வரித்துக் கொண்டது, இம் மண்ணில்தான்!*
*புதுவையின் குயிலும் கூவும் கவிதையே!*
*சுதந்திரம், சமத்துவம், சகோத ர்த்துவம்*
*என்ற மூன்று மந்திர மொழிகளைத்*
*தந்த பிரான்சு தேசம் வாழ்க!*
*பாரதிக் கவிஞனின் கவிக்கொரு மிடுக்கினைக்*
*கொடுத்துப் புதுயுகப் புரட்சியைக் கண்ட*
*மானுடம் வாழ்க! வாழ்க, வாழ்கவே!*
*பாரதி, தேசியம் பாடி விடுதலை*
*வாங்கித் தந்தனன்! அவன்அடிச் சுவட்டில்*
*வந்த, பா வேந்தன் புரட்சிக் கவிதை*
*முரசம் ஆர்த்துச் சங்கம் முழங்கினன்*
*பாரதி, "வேதம் புதுமைசெய்" என்றான்*
*பாவேந்தன் புதிய வேதம் ஓதினான்!*
*அந்தப்பா வேந்தன் அடிச்சு வட்டினில்*

*"புதியதோர் உலகம் செய்வோம்! – கெட்ட*
*போரிடும் உலகத்தை வேரோடு சாய்ப்போம்!"*
*எல்லா ருக்கும் எல்லாம் என்ற*
*நியதியை உலக நீதி யாக்குவோம்!*
*பொதுவுடை மையே பூமண் டலத்தின்*
*பொதுவிதி யென்று கவிதை இசைப்போம்!*
*புரட்சிக் கனல்மணம் வீசிய மண்ணில்*
*கூடி யிருக்கும் கொழிதமிழ்க் கவிஞர் காள்!*
*கவிதாஞ் சலியா செய்யவந் தீர்கள்?*
*நமது கவிஞர்கள் இருவரும் உமது*
*அஞ்சலிக் கவிதையா எதிர்பார்த் திருந்தனர்?*
*அவர்தம் நெஞ்சு புரட்சிக்கொந் தளிப்பு!*
*பகுத்தறி வுச்சுடர் வீசிய தீக்கனல்!*
*போர்முர சார்த்த வீரக் கவிக்களம்!*
*எந்தமிழ்க் கவிஞர்காள்! எண்ணுமின்! எண்ணுமின்!*
*பாவேந் தனின்அடிச் சுவட்டினில் இங்கே*
*வேதம் புதுமை விரைந்துசெய் யுங்கள்!*
*புதிய வேதம் செயப்புறப் படுங்கள்!*
*சாதி களைச்சுட் டெரித்துப் பொசுக்குக!*
*மருட்டு கின்ற மதத்தலை வர்களை*
*மக்கள்மன் றத்தின் தனிமைப் படுத்துக!*
*முழுச்சு தந்திர மூச்சுக் காற்றினை*
*மக்கள் சுவாசிக்கு மாறுசெய் திடுக!*
*இந்திய அரசினை முதலா ளிகளின்*
*கைகளி லிருந்து கடிதினில் பிடுங்கி*
*உழைப்பவர் கைகளில் ஒப்படைத் திடுக!*
*பழைய பைத்தியம் தொலைந்திடச் செய்க!*
*கொடியவன் முறைக்குச் சாப்பறை கொட்டுக!*
*"ஒன்று பரம்பொருள்; நாமதன் மக்கள்*

*உலகு இன்பக் கேணி" என்று*
*பாரதி பாடிய நேரிய தமிழையும்*
*"எல்லாருக்கும் உடைமை பொதுவாக் கிடுவோம்!"*
*என்று புரட்சிக் கவிஞன்பொன் மொழியையும்*
*வெற்றி மொழிகளாய் விளங்கிடச் செய்வோம்!*
*கவிதை பாடிடும் கவிஞர்காள்!*
*போர்மறக் கவிதைகள் புனைந்துபா டுமினே!*
*வாழ்க, யுகக்கவி பாரதி நாமம்!*
*வாழ்க, பா வேந்தன் புகழ்நனி வாழ்க!*
*வாழ்க வையகம் நலமெலாம் வளர்ந்தே!*

# 9. கோவிலூர் ஆதீனம் – கவியரங்கம்

28.9.1990

தொடக்கக் கவிதை

தண்ணார் தமிழ்மொழி தழைத்து வளர்ந்திடும்
தென்பாண்டி நாட்டில், செந்தமிழ் மொழியையும்
சிவநெறி தன்னையும் சிறப்புடன் பேணும்
நல்லறக் குடியின ராகிய மாண்பார்
நாட்டுக் கோட்டை நகரத்தார் மரபில்
காரைக் குடியெனும் கவினார் நகரில்
நூற்று எண்பது ஆண்டுகள் முன்னர்
ஆற்றல்சால் தவத்து ஆண்டவர் முத்து
ராம லிங்க ஞான தேசிகர்
தோன்றி ஞானச் சுடராய் விளங்கினார்!
செல்வம் நிறைந்த செட்டி நாட்டினில்
பூவார் சோலைசூழ் கோவிலூ ரதனில்
ஞானப் பயிர் வளர் நாற்றங் காலாய்
ஆண்டவர் திருமடம் அமைவுறக் கண்டார்!
ஆண்டவர் அரிய சிவபூசை செய்தும்
நாள்தொறும் கோயில் வழிபாடு செய்தும்
ஊனும் உயிரும் உணர்வும் ஒன்றிச்
சீவன் முத்த ரான பெருந்தகை!
அடுத்து வந்தவர் துறவு ஆண்டவர்!
இவரோ,
தேவர்கள் கோட்டையாம் தேவ கோட்டையில்
தோன்றிய ஞானி! துறவின் வேந்தர்!
இப்படி வழிவழி அருளா ளர்பலர்
அமர்ந்தருள் பரப்பிய ஆதீ னம்இது!

திருக்கோயில் பேணல், சிவநெறி வளர்த்தல்
வேதாந்தக் கல்வி வழங்குதல், மேலும்
இன்னபே ரறங்கள் நன்னர் இயற்றிப்
புகழ்நலம் சிறந்து பொலிந்து விளங்கும்
ஆதீனம் கோவிலூர் ஆதீன மாகும்!
இந்த ஆதீனத்தில் இற்றைக்கு அமர்ந்தருள்
காசி விசுவ நாத தேசிகர்
ஆற்றல் மிக்க அன்பின் உருவினர்!
சீர்சால் இதயமும் சிரித்த முகமும்
அரவ ணைத்திடும் அருமையும் பண்பும்
இசையுடன் கூடிய இனியசொற் பொழிவும்
அணியெனக் கொண்டவர்; அருளில்மேம் பட்டவர்!
அற்றைநாள் ஞான சம்பந்த ருக்கு
அப்பர் எனநாவுக் கரசர் அமைந்தார்!
ஐய, நீ,
இற்றைநாள் நமக்கு வாய்த்தஅப் பர்எனத்
திகழுகின் றனை!நின் அன்பில் திளைத்திடும்
பேறுநாம் பெற்ற பெரும்பே றாகும்!
கன்னித் தமிழ்மொழி கவிதை மொழியாம்!
கவிதை நலத்தில் கனிந்தநல் வாழ்வே
தமிழர்தம் வாழ்வு! அது தனிப்பெரு வாழ்வு!
கோவிலூர் ஆதீனக் குருவாய்த் திகழ்ந்திடும்
அருந்தவத்து அடிகள் நின்றன வாழ்வு
வண்டமிழ்க் கவிதை வாழ்வா குகவே!
காசினி யிற்சிலர் காசிக்குச் சென்றனர்
ஆயினும் அவர்கள் நாயன்மார் போலே
காலால் நடந்துகாசிசென் றார்அல்லர்
நாயன்மார் போலே நம்பனை நினைந்து
பாரத நாட்டைப் பாதத்தால் அளந்து

*காசியைக் கண்ட காசி ஸ்ரீ! நம்*
*"கவிஞர்கோ" பொற்கிழிக் கவிஞர் அருமை*
*அரு. சோம சுந்தரம் பெருமைசால் தலைமையில்*
*கவியரங் கேறிச் செவிநுகர் கனியெனக்*
*கவிதை பொழிந்திடும் கவிஞர்கள் வாழ்க!*
*வாழ்க, கோவிலூரர் ஆதீனம் வாழ்க!*
*வாழ்க, திருவரு ளார்ந்த காசி*
*விசுவ நாத ஞானதே சிக, நீ*
*அப்ப ரடிகளின் உழுவலன் பே, என*
*நின்அன்பு வளர்கென நினைந்து*
*மகிழ்கின் றனம்யாம்! நன்றி! வாழ்கவே!*

2

# வாழ்த்தும் இரங்கலும்

## 1. அண்ணல் நபி நாயகம்

*மலர்தலை உலகில் இருளகற்றி ஒளியேற்றிப்*
*புகழ் பெற்றார் அண்ணல் நபிகள் நாயகம்!*
*நானிலத்திற்கு நல்வழிகாட்டிய அண்ணல் நபிகள் நாயகம்*
*உபதேசத்தால் மட்டுமல்ல; வாழ்ந்தும் காட்டினார்*
*கடுந்தவம் மேற்கொண்டு அவம் நிகழ்வதிலும்*
*இயல்பான வாழ்க்கையில் அன்பும் அறனும் அருளும்*
*பொலிவுறும்படி செய்ய இயலும்*
*என்பதற்கோர் எடுத்துக் காட்டு, பெருமானார் நபிகள்*
*வாழ்க்கை!*

*கடவுளை நம்பினார்*
*கடவுள் தந்தருளிய திருமறையை*
*மண்ணுலக மாந்தர்க்குத் தந்தருளினார்!*
*நாளும் ஐந்து தடவை அல்லாவைத் தொழுக*
*என்று ஆணையிட்டார்!*
*சிலையை நீக்கிச் சிந்தையில் தொழுகெனப் பணித்தார்.*
*ஈட்டத்தில் ஒருபகுதியை ஈத்துவப்பது*
*கருணையல்ல – கடமை என்று நெறி வகுத்தார்*
*சமாதானம் பேணுக என்றார்!*

உழைத்து உண்ணும் உயர்நெறி காட்டினார்
இஸ்லாம் மதம் கண்டார்
சமாதானம், சகோதரத்துவத்தைச்
சமய நெறியில் நிலைநாட்டிய
நந்தம் போற்றுதலுக்குரிய
அண்ணல் நபிநாயகம்
புகழ்வளர்க; வையகம் வளர்க!
இயைந்தவா றெல்லாம் திருமறை வாக்கில் அருளிய
ஒழுங்குகளைக் கற்போம்! ஒழுக்கங்களைப் பேணுவோம்!

## 2. லெனின் புகழ் வாழ்க!

*புதியதோர் உலகம் காணும் குறிக்கோளுடன்*
*மாமுனிவர் மார்க்சின் அறிவியல் நூலான*
*மூலதனம் என்ற முதல் நூலுக்கு*
*விளக்கம் எழுதியதோ டன்றி,*
*மாமுனிவர் மார்க்சின் சிந்தனையாகிய*
*பொதுவுடைமைச் சமுதாய அமைப்புக்கு*
*அயராது உழைத்துச் செயலுருவம் தந்த,*
*மாமேதை லெனின் புகழ் வாழியவே!*
*கலியுகத்தைக் கொன்று கிரேதாயுகத்தைக் கொணர்ந்த*
*யுகப் புரட்சித் தலைவன்,*
*எல்லாருக்கும் எல்லாம் கிடைக்கும் வையகம் படைத்த*
*உத்தமத் தலைவன் லெனின் புகழ் வாழ்க!*
*"மாநிலம் பயனுற மனிதகுலம் வளரக்*
*கூட்டுறவே வழி; வேறுவழி இல்லை" என்று*
*மக்களைக் கூட்டுறவில் நம்பிக்கை கொள்ளச் செய்த*
*மக்கள் தலைவன் லெனின்புகழ் வாழியவே!*
*உலகத்துக்கு ஓர் புதுமையாய் சோவியத்தை உருவாக்கிய*
*உழைப்பாளர் தலைவன் லெனின்புகழ் வாழியவே!*
*போரற்ற சமாதான உலகம் காணத் துடித்த*
*அன்புத்தலைவன் லெனின் புகழ் வாழிய, வாழியவே!*

## 5. தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அருளாட்சி வெள்ளிவிழா வாழ்த்து

15-7-92

*தண்தமிழ் நாடதனில்*
*உழவும் தொழிலும் செழித்து வளரும்*
*மேலைச் சிதம்பரம் என்று சேக்கிழார்*
*போற்றிப் புகழ்ந்த பேரூர் அதனில்*
*ஒன்றாக நல்லது கொல்லாமை என்று*
*அறம் கூறித்*
*தவஞா னத்தால் ஆன்மாக்களை*
*உய்யும் நெறியில் உய்த்துச் செலுத்திய*
*தகைமைசால் சாந்தலிங்கத்*
*தவமுனிவர் கண்ட தவமேவு திருமடத்தில்*
*பயிற்றிப் பலகல்வி தரும் கல்விக் குரிசிலாய்*
*அருட்குருவாய்த் திகழும் எம்*
*சாந்த லிங்க இராமசாமி அடிகள்*
*நன்மை பெருகு அருள்நெறி நயந்தினிது வளரத்*
*தமிழ்உரை நிகழ்த்தும் தமிழ் அடிகள்!*
*நின்புகழ் போற்றுவம்!*
*நந்தமக்கு நீயே நயந்துவந்து*
*நின்னைத் தோழமை யாகத் தந்தனை!*
*நம் வாழ்க்கைப் பயணத்தில்*
*நீ, மறைவாகச் செய்த மடைமாற்றம்*
*எத்தனை, எத்தனை?*
*நினைப்பின் நெஞ்சு நெக்குருகி நெகிழ்கிறது!*
*எம் அடிகள்! நினக்கொரு விண்ணப்பம்!*

திருவுளம் கொள்க!
நம்பால் அயர்விலா அன்பு காட்டும்
அருள்நயந்த திருப்பணி வேந்தர்
சுந்தரம் அடிகள் நினைவிற்குக் கொணர்க!
வாழ்க்கையை ஆய்ந்து ஆய்ந்து கூறிய வள்ளுவம்
“நோய்நாடி நோய்முதல் நாடி அது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்” என்றது!
இன்று நமது நெறிக்குப்
பலம் வாய்ந்த – ஒரு நேரத்தில்
நாடு தழுவிய பணிகள் நடைபெற
இயக்கம் தேவை! அஃது
ஆய்த எழுத்தே போல வாழும்
நம்மால் சாலும்! திருவுளம் பற்றுக!
வாழ்க நின் ஞானக் கொற்றம்!
வளர்க எம் அடிகள் தொண்டு!
அடிகள் தம்மை நினைப்பறியாது நினைக்கும் நம் இதயம்!
தென்றலினும் தண்ணளி சார்ந்தது நின்தோழமை!
யாது கைம்மாறு?
செந்தமிழும் சிவநெறியும்
தரணியில் தமிழ்மக்கள் மேவிட
நீவிர் செய்யும் தொண்டுக்குப்
பூவொடு சார்ந்து நிற்கும் நார்போல
ஒத்துழைத்தல் நம் கடன்!
அதுவும் நின் விருப்பன்றே!

## 4. தவத்திரு சுந்தர சுவாமிகள் மணிவிழா வாழ்த்து

31-10-1989

*பூவுல கத்தில் புண்ணிய நாடாம்
பாரதத் தினில்தண் ணீர்மையும் தவமும்
வளர்த்துப் புகழ்பூத் திட்ட வண்டமிழ்
வழங்கும் பெருநாட் டில்மறு வில்லாக்
கொங்குநா டதனில் நந்தமிழ்க் குடியினர்;
தம்தலை தாழ்ந்து வணங்கும் முருகன்
என்னும் பெரும்பெயர் எழில்மிகு கடவுளின்
குடிமுழு தாண்டு நெடிதுகாத் தருளும்
இணைமலர் நோன்றா ளினைப்பிரி யாது
மறவா தேத்தும்கௌ மார மடத்தில்
செந்தமி ழுருவாய்ச் செழுங்கவி முகிலாய்த்
தொண்டெனும் தூய உயிரினைத் தாங்கித்
திருப்பணி நாயக ராய்ச்சிறந் தோங்கும்
சுந்தரத் தமிழே யாகிய நந்தம்
சுந்தரம் அடிகாள்! நின்பாற் பழகினம்!
கூட்டு வித்த உழுவ லன்பினை
மனமார வாழ்த்து வம்!திரு வதிகை
உடன்பா டென்றும்நம் உளத்தில்நின் றாலும்,
நின்னோ டோடி வரவிய லாமல்
போயினும் நடந்து வருதல்நம் முயற்சியே
என்றும் இளையராய்ப் பொன்றா எழிலுடன்
செந்தமி ழினையும் சிவநெறி யினையும்
செவ்வேள் முருகன் தண்ணருள் திறத்தையும்
காத்து வாழ்க! நாம் இன்புற
வாழ்க நீ யென்று வாழ்த்துகின் றோமே!*

# 5. கோவிலூர் ஆதீனம் திருவருள் திரு. காசி விசுவநாத சுவாமிகள் ஞானபீடம் அமர்ந்த 5ஆம் ஆண்டு விழா வாழ்த்து

28.9.1991

செந்தமிழ் நிலத்தில் செட்டிநா டென்பது
அந்தமில் புகழ்சேர் அருமைநன் னாடு!
செந்தமிழ் மொழியையும் சிவநெறி மாண்பையும்
சிந்தையால் மொழியால் செயலால் போற்றிடும்
நாட்டுக் கோட்டை நகரத் தார்களால்
சிறந்திடும் நாடு, செட்டிநா டாகும்!
கலைக்கோ யில்களும் கல்விக்கோ யில்களும்
பலப்பல எடுத்துப் பாங்குடன் புரக்கும்
நகரத் தார்களின் நற்புகழ் நாவால்
பகரற் கரிய பான்மைத் தாகும்!
நகரத் தாரின் நற்குரு பீடமாய்த்
திகழ்வது கோவிலூர்த் திருஆ தீனம்!
நாட்டுக் கோட்டை நகரத்தார் மரபில்
சாற்றற் கரிய தவத்தின் சீலராம்
முத்து ராமலிங்க ஞான தேசிகர்
மெய்த்தவ ஞானச் சுடராய்த் தோன்றினார்!
'ஆண்டவர்' என்னும் அழகிய நாமம்
பூண்டு, கோவிலூர் பொருந்தி யிருந்தனர்!
ஆண்டவர், ஆண்டவன் அடிமலர்க் கே, தம்
நெஞ்சம் வைத்து நெகிழ்ந்துநெக் குருகி
சீவன் முத்தராய்த் திகழ்ந்த மைந்தனர்!
நாட்டுக் கோட்டை நகரத் தார்களின்

*கோட்டை யாகிய தேவ கோட்டையில்*
*தோன்றிய ஞானி "துறவு ஆண்டவர்"*
*துறவு ஆண்டவர் பெருமையோ பெரிது!*
*அவர்வழி வந்த அருளா ளர்பலர்*
*அமர்ந்தருள் புரிந்த ஆதீனம், இது!*
*இந்த ஆதீனக் குருபரம் பரையில்*
*இற்றைநாள் ஞான பீடத் தமர்ந்து*
*அருளாட்சி புரியும் அருட்பெருந் தகையர்*
*காசி விசுவ நாத தேசிகர்!*
*இவரோ,*
*மாசிலா மனத்து மாண்பினர்; இறைவன்*
*பூசனை மறவாப் புண்ணிய சீலர்;*
*நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பி*
*ஞானப் பயிரினை வளர்க்கும் நாயகர்;*
*அருள்நலம் சிறந்தவர்; ஆன்மக் காட்சியர்;*
*அன்பால் நம்மையும் அரவணைத் தருளும்*
*தாயிற் சிறந்த தன்மையர்! இவர்தாம்*
*ஞான பீடம் ஏறிய நாள்இது!*
*இந்தநன் னாளை, இவர்தம் பெருமையைப்*
*போற்றுவ தாலே புகழ்நமக் காகும்!*
*காசி விசுவ நாததே சிகரின்*
*அரிய குணநலன் அனைவரும் பெறலாம்!*
*தம்மை நமக்குத் தோழமை யாகத்*
*தந்த பெருந்தகை! தமிழ்க்குலம் வாழ*
*வந்த தமிழ்மா முனிவர் வாழ்கவே!*
*எந்தை ஈசன் காளத்தி நாதன்*
*இன்னருள் நினைந்து இனிதுபோற் றுதுமே!*

# 6. முதல்வர் கலைஞருக்கு வாழ்த்து

## 1. புதிய புறநானூறு

### (1)

(கலைஞரை—குன்றக்குடி அடிகளார் பாடியது)

திணை: வாகை துறை: வல்லாண்முல்லை

*திங்கள் திரிதரு ஞாலத் தோங்கிய*
*திங்கள் மரபெனத் திகழ்தரு சீர்மை*
*முன்னைச் சோழர் முத்தநின் மரபினர்;*
*வலங்கொள் தானை நிலம்புடை பெயரச்*
*சென்று வடபுலப் பனிமலை மார்பில்*
*பூவுல கதிரப் புலிப்பொறி நாட்டிப்*
*புகழொடு மீண்டு பொலிந்தனர் அவர்போல்*
*வலிவும் வளமும் மலிந்தநற் சோழ*
*மண்ணகத் தாரூர் மாட்சியில் தோன்றிய*
*அண்ணல் கலைஞ, முன்னோர் அடிச்சுவ(டு)*
*ஒட்டிநீ இந்நாள் உறுபுகழ் சேர்த்தனை!*
*சிந்து வளங்கொழி சீமையில் அன்னைக்*
*காவிரி ஈன்ற தலைமக னாம்நீ*
*கங்கைவாழ்த் துரைக்கச் சிந்துபூச் சொரிய*
*சிங்கநேர் மறக்குலச் சீக்கிய மக்கள்*
*நின்சீர் பரவிடத் தன்புகழ் நாட்டி*
*மறத்தமிழ் மாண்பினைத் திறத்துடன் காட்டி*
*எழிலார் புகழும் ஈடிலா வெற்றியும்*
*ஈட்டி வந்தனை "எந்தமிழ் மறவ,*
*அற்றைநாள் தென்புலத் தரசர் வடபுலம்*
*வாழுநர் தமக்குப் பெருஞ்சோ றளித்த*
*பெற்றியை அறிவேம்! பின்னைநீ அவர்தம்*

*நெறியினில் நின்றே நிலவும் சீர்மையால்*
*பெருஞ்சோ றளிக்கும் பெருநெறி யதனை*
*விரும்பி வேட்டனை! நின்கொற் றத்துப்*
*பசித்த வயிற்றினைக் காண்கிலம்! பைந்தமிழ்*
*பாங்குடன் ஓங்கிப் பாரெலாம் மணக்க*
*இமயப் பெருங்கல் தமிழ்வரை யாக*
*ஏற்றிடச் செய்யும் ஏந்தல்நின்*
*வலனேர்பு கொற்றம் வாழிய இனிதே!"*

(2)

திணை: பாடாண் திணை துறை: வாழ்த்தியல்

*மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகமென்*
*றந்நாள் புலமைச் சான்றோன் அறைந்தான்*
*மலர்தலை உலகிற் கரசே உயிராம்*
*அரசினுக் குயிரோ அனைத்துயிர் நீதி*
*நீதி நெறியில் நின்றினி தொழுகிய*
*பெரும்பெயர்க் கொற்றம் அருந்தமிழ்க் கொற்றம்*
*ஆவிற் காய்த்தம் அருமகன் கொன்றும்*
*இணையிலா நீதிக் கின்னுயிர் ஈந்தும்*
*முந்தை முன்னோர் முறைநெறி போற்றினர்*
*செந்தமிழ்க் கலைஞ, நந்தம் மக்கள்*
*நின்னருங் கொற்றம் இந்நிலம் காணுமுன்*
*அஞ்சல்விண் ணப்பம் அனுப்பியே கண்டனர்*
*ஆயினும் அரசின் மறுமொழி அடைந்திலர்*
*கோத்துக் கட்டிய கோப்புகள் குவிந்தன,*
*குறைகளும் தவிர்ந்தில, குறைதெரி வித்தே*
*எழுதிய மக்கள் ஏதும் பெற்றிலர்*
*ஞாயிறு தோய் நெடு மாளிகை முன்றிலில்*
*முழங்கும் மணியொலி கேட்டு முறைமை*
*வழங்கிய மனுநீதிச் சோழன்நின் குலத்து*

முன்னோன் ஆகலின் அம் "மனு நீதி நாள்"
கண்டனை! நின்றன் கொற்றத் தேவலர்
சிற்றூர் முதலாப் பேரூர் வரையிலும்
சுற்றிச் சூழ்ந்து மக்களுக் குற்ற
குறைகளைக் கேட்டுக் குறித்த நாட்களில்
விடைதரு கின்றனர்! இடர் ஒழி கின்றது!
குறைதீர் நின்றன் கொற்றம்
ஏறுயர்த் தோன்அருள் என்னவா ழியவே!

(3)

திணை: பாடாண் திணை துறை: வாழ்த்தியல்

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுல கத்து
முடியுடை வேந்தர் பற்பலர் தம்புகழ்
நாட்டிச் சிறந்தனர் நம்வர லாறிது.
தண்ணளி சேர்ந்த தமிழக மண்ணில்
விஞ்சிய புகழின் வேந்தர்கள் வடபுலம்
கண்டும் கங்கை யாற்றினைக் கொண்டும்
பனிமலைச் சாரலில் பயின்று உலாவியும்
வெற்றியின் சின்னம் விளங்கஊர்ப் பெயர்கள்
தமிழெனத் திகழத் தகுபெயர் மாற்றிப்
பெரும்புகழ் பெற்றுப் பீடுற் றனரே!
நீயும்,
தண்டமிழ் வரைப்பினில் தாரணி அனைத்தும்
புகழோங் கியதமிழ்ப் புறநா னூறு
கொண்டகொற் றமெனப் பழந்தமிழ்ப் பெயராம்
கல்லக் குடிப்பெயர் கண்டனை! இஃது
பெயர்மாற் றமல; பெரும்பெயர்க் கொற்றம் நீ
பெற்றவோர் பீடுசால் வெற்றியே யாகும்!
வளமார் தமிழின் வரம்பிலா ஆற்றலை

வடபுலம் உணர வாய்த்தவோர் சின்னம்!
தமிழக அரசு இமிழ்கடல் வரைப்பில்
வசையிலாத் தமிழனின் மானம் போற்றிடப்
பேணிய பெரும்புகழ் ஆர்ந்த
வரலா றிஃதுநின் கொற்றம் வாழியவே!

(4)

திணை: பாடாண் திணை துறை: பரிசில் துறை

பூவுல கம்பொலி வுறப்புகழ் பூத்த,
பொன்னிச் செல்வி பொய்யாக் குலக்கொடி
காஅ விரித்துக் காதல் வளர்க்கும்
காவிரி நாட! பாவிரி கலைஞ!
நாடா வளத்தது நும்நா டாகும்!
நாடிநின் அடைந்தோர் கேட்டினை நீக்கி
ஏற்றமுற் றனைநினை நாடா ரிடத்தும்
நண்ணி நாடொறும் நயமே யாற்றினை!
நாமக்கல் லாரும் நெல்லை யப்பரும்
நின்கொடை யால்மனத் தின்படை கின்றனர்;
நாளும் மக்கள் குறையினை நாடி
முறைமை தேர்ந்து நிறைவுற முடிப்பாய்
'நாளை' என்றொரு சொல்நினை நாடினோர்
கேட்டது மில்லை! மாற்றுவை அவலம்!
உயர்தமி ழே, நின் உயிர்மூச் சாகும்;
பண்டைத் தமிழப் பண்புநின் இலக்கு!
என்றறிந் தேம்யாம் இன்றுனை எய்தினம்
ஆயி ரத்துமுந் நூறியாண் டின்முன்
ஏழாம் நூற்றாண் டெழு, தமிழ் ஞாயிறு!
அயல்வழக் கதனை வென்று செழுந்தமிழ்
வழக்கை வாலி தாக்கிய மாண்பினர்
அப்ப ரடிகளின் செப்பரும் புகழ்தமிழ்

இனத்துப் புகழாம்! இவர்அருள் நெறியை
நும்முயி ரனைய செம்மல் அண்ணா
ஒருகுல நெறியென் றுவந்து போற்றினர்;
அருந்தமிழ்க் கீசர் அப்ப ரடிகளின்
புகழினைப் பேணப் புவியினை யாளும்
நின்னிடம் விழைவது நிகழ்த்துவம் ஒன்றே!
சிந்தை மகிழ நந்தம் அப்பர்
பெயரில் உயர்தமிழ்ப் பல்கலைக் கழகம்
உய்த்துணர் மெய்ப்பொரு ளுடன்பயிற் றுவிக்கப்
பாங்கொடு காணப் பரிசில்
நல்கிப் பயனெலாம் நனிமிக வுறுகவே!

(5)

திணை: பொதுவியல் துறை: இயன் மொழி

உலக முவப்ப வலனேர்பு திரிதரு
நின்றன் கொற்றம் நின்று வாழிய
மேவு வாழ்க்கை விருப்புறு உணர்வு
வேட்டன வெல்லாம் வழங்குவே ளாண்மை
நுந்தம் குடியின் மரபென அறிந்தோம்.
அதனால்
நாமும் நின்பால் நயந்து வேட்டனம்
உன்றன் ஆவி யென்றே விளங்கும்
அறிஞர்அண் ணாவின் ஆருயிர் நிகர்த்த
அன்னை மொழியாம் கன்னல் தமிழ்க்கோர்
துறைதொறும் துறைதொறும் நிறைவளம் சேர்க்கும்
பல்கலைக் கழகம் காண வேட்டனம்.
யாம்தமி ழகத்திரு மடங்களின் பேரவை
இயக்கும் தொண்டன் என்றொரு முறையில்
வேட்டனம் உன்றன் தோழமை யுணர்வு
எண்ணிய முடிக்கும் என்னும் அசைவிலா

உணர்வில் வேட்டனம். உயர்தமிழ் முதல்வ,
மண்திணி ஞாலம் மாரியும் மறந்திடல்
காணு கின்றனம் பேணிய சிறப்பின்
நின்னயந் துறைநரும் நீநயந் துறைநரும்
அல்லா தவரும் உள்ளமார் வேட்கை
பிழைபட லின்றிப் பெற்றிடும் பெற்றிமை
ஓர்ந்து நின்பால் சார்ந்தனம்
கருதிய முடித்தல் கலைஞநின் கடனே!

(6)

திணை: பாடாண்திணை துறை: வாழ்த்தியல்

மண்திணி ஞாலத் துள்மிக ஓங்கிய
வடபெருங் கல்முதல் தென்கும ரிவரை
ஒருநெறிப் படுத்தி முறைசெய் துயர்ந்த
பலர்புகழ் பாரதம் நிலவுபே ரரசின்
அவையினில் அணிசேர் அனைத்து மாநில
மாண்பு மிகுமுதல் அமைச்சர்கள் அழகுற
அமைந்த நல் வவையம் அதனிலே, திங்கள்
திரிதரு ஞாலம் செழித்திடத் திட்டம்
தீட்டிப் பணிகள் செய்தே பல்வளம்
கொழித்திட ஏய்ந்த குறிப்பில் கொணர்ந்தனர்;
நேமிசூழ் உலகறி நேருவின் புதல்வி
பிறப்பால் பெண்ணே யாயினும் பேணும்
திறத்தால் இப்பெருந் திருநா டாளும்
இந்திரா அம்மையார் இயல்பினி லமைத்த
நான்காம் திட்டத்து நந்தமிழ் நாட்டுச்
சேலத் திரும்பு சேரா மையினால்
பீடுசால் உரிமை பேணுநல் வேட்கையால்
விடாமல் நெடிய மொழியது கூறி
ஒப்பம் தராமல் இப்பெருந் தமிழக

*உரிமைத் திறத்தினை உரத்த குரலில்*
*எடுத்து முழக்கிய நின்தறு கண்திறன்*
*வியர்ந்துவாழ்த் துதுமே! வியந்துவாழ்த் துதுமே!*

## 2. காவிரி மீட்கும் போர்க்களத் தலைவர்

*தண்ணார் தமிழளிக் கின்ற புகழ்சால்*
*நாட்டுக் கலைஞர்; நம்முத லமைச்சர்!*
*வள்ளுவத் திற்கு வான்புகழ் சேர்க்கும்*
*எழில்மிகு தலைவர்! இராசரா சனுக்குப்*
*புகழினைச் சேர்க்கும் தகைமிகு தோன்றல்!*
*நலம்பல மகளிர் எய்திட நல்லறம்*
*பலப்பல இயற்றிடும் பண்புசால் முதல்வர்!*
*இல்லை யெனும்சொல் இல்லாமை யாகவும்*
*எல்லாரும் உடையும் உணவும் பெற்று*
*நல்லின்ப வாழ்வு நாளும்எய் திடவும்*
*எண்ணி எண்ணி ஏணியைப் போலே*
*பலர்வாழ் வுயர்ந்திடப் பாங்குடன் தாங்கும்*
*ஏந்தல்! கங்கையிற் புனித மாகிய*
*காவிரி மீட்கும் போர்க்க ளத்தினில்*
*நிற்கும் தலைவர் நற்றமிழ் நாட்டுப்*
*பெரியீர் அறிமின்! அறிமின்! அறிந்து*
*பூம்புகார்ப் புகழ்ஒளி நாயகர் கலைஞர்தம்*
*கொற்றம் சிறக்கவும் 'அவர்தம் கொள்கை*
*முற்றவுவும் அவர்கண் டனைய தியற்றவும்*
*படையின ராகப் பாங்குடன் வருகவே!'*

## 3. இன்றே போல்க நம் புணர்ச்சி!

*ஞாயிறு திரிதரு ஞாலத் தினில்தென்*
*தமிழும் தென்றலும் தண்ணென் றுலவிடும்*
*தமிழகத் தின்தன் னேரிலா முதல்வ!*

தமிழ்நிலம் பொதுவெனப் பொறார்வழி வந்த
தலைவ, நின் ஆற்றலும் பொதுவன்று நினக்கே
உரியது என்று வரலாறு இயம்பும்
புகழ்சால் தலைவ! தகைசால் கலைஞ!
இளங்கோ வடிகள்தம் இனியநற் சிலம்பில்
வாழி காவேரி! வாழி காவேரி!
என்று வாழ்த்திய நந்தம் காவிரி
மீட்கும்போர்த் தலைவ! வேட்டநின் காவிரிப்
போரில் தமிழகம் திரண்டு நின்றிடும்!
இஃதுறு தியென்றி யம்பவும் வேண்டுமோ?
தமிழகம் செழிக்கத் தமிழர் வளர்ந்திட
நாளும் பணிசெயும் நின்தமிழ்க் கொற்றம்
வளர்க; வளர்க! வாழ்க! வாழ்க!
நின்நலம் நந்தமக் கொருசொத் தாகும்!
நலம்பல கண்டு நாளும் வாழ்கநீ!
நாண்மங் கலம்நீ காணும்இந் நாளில்
நின்கவ னத்தை ஈர்க்க விழைவது
சங்ககா லத்துச் சான்றோன் காவிரிப்
பூம்பட்டி னத்துக் காரிக் கண்ணனார்
“நல்ல போலவும் நயவ போலவும்
தொல்லோர் சென்ற நெறிய போலவும்
காதல் நெஞ்சினும் மிடைபுகற் கலமரும்
ஏதில் மாக்கள் பொதுமொழி கொள்ளாது”
என்றநன் மொழியை இதயம்நீ கொள்கென
நன்றே யுரைப்பது நங்கட னாகும்!
யாஅம் இரக்கும் பரிசில்ஒன் றுண்டு!
அஃதுஇப் பாட்டுடைப் பொருளே!
“இன்றே போல்க, நம் புணர்ச்சி”யென் பதுவே!

## 4. அன்பால் வேண்டினம்

*மாண்பார் தமிழக முதல்வர் "டாக்டர்"க்கு*
*வளனும் நலனும் பெருகிச் சிறக்க,*
*கண்மணி யன்ன தண்ணருள் சுரக்கும்*
*அண்ணா மலையார் திருவடி நினைந்து*
*எழுதும் திருமடல்! இத்திரு நாட்டில்*
*மக்கள் அனைவரும் ஒருகுலத் தினராய்*
*வாழ்ந்திடத் தோன்றிய மதத்தின் பெயரால்*
*சாதியும் நீதியும் பற்பல வளர்ந்தே*
*சமர்க்களம் ஆக்கலைத் தவிர்த்துக் காத்திட*
*மனித நேயமே மலர்ந்து மணந்திட,*
*புதுநெறி புதுமதம் பூத்துச் செழித்திட,*
*செழுந்தமிழ் நெறியின் செவ்வொளி பரவிட,*
*தெய்விகப் பேரவை எனும்பெரு நிறுவனத்*
*தொய்வினை நீக்கித் தொண்டு தொடர்ந்திட*
*இந்நாள், அதன்பொறுப் பேற்றனம்! அதற்கே*
*அரசாணை கிடைக்க ஆவன செய்து*
*பொறுப்பு முழுவதும் ஒப்புவித் துதவி*
*முழுமையாய் விரைந்து செயல்பட எம்மை*
*ஈடு படுத்திப் பணிகொள்க என்றே*
*அன்புடன் வேண்டினோம்! அன்பால்வேண் டினமே!*

## 7. இலங்கை சயவர்த்தனேவுக்கு வாழ்த்து

### மனிதப் படுகொலை தவிர்க!

*அலைகடல் சூழ்ந்த அழகிய இலங்கை, தீப்*
*பற்றி எரிகிற தந்தோ! பரிவொடும்*
*அணைப்பவ ரிலையோ? அந்தச் சந்திரன்*
*இயலின் கண்டு தெளியும் காலம்*
*இதுவாம்! உயரிய அறிவியல் இலக்கியம்*
*கண்(டு)ஓர் உலகம் இன்றுரு வாகி*
*உள்ளது! ஞாலம் வலம்வரத் தக்கதே*
*என்னும் உணர்வின் உருவக மேயாம்*
*எந்தை ஈசன் பிள்ளைகள் இருவரை*
*ஞாலம் வலம்வர ஏவிய தாகும்!*
*இன்றைய நிலையில் இனவழிச் சிந்தனை*
*ஒழுக்கம் எனலும் ஒல்லுமோ? மானுடம்*
*ஒன்றென் றறிக! ஓரின மென்று*
*நன்றே யறிக! இலங்கை நாட்டின்*
*தலைவ! சயவர்த் தன!நின் புகழ்ஒளி*
*மங்கா திருக்கக் கொலைப்படைச் செயலை*
*நிறுத்துக! வேற்று மையில்ஒரு மையே*
*உயிர்ப்புள ஒருமை என்பதை ஓர்க!*
*மொழிவழி மாநிலம் முகிழ்த்திடச் செய்க!*
*நாவலந் தீவென நந்தாப் புகழுடைய*
*பாரதம் நோக்குக! பாரத நாட்டின்*
*பண்பட்ட வழியே சட்டம் வகுத்து*
*இலங்கை அரசியல் எழிலுறப் புதுக்குக!*
*இனவழிச் சிக்கல் இனிவரா தமையத்*
*தீர்வுகண் டிடுக! ஈழத் தமிழர்*
*அரசியல் உரிமை அடைந்திடச் செய்க!*
*மாவலி யாற்று நீரிலும் தண்ணிய*
*தகைசால் ஐய! மனிதப் படுகொலை*
*தவிர்க! இலங்கையின் புகழ்பே ணுகவே!*

## 8. மக்கள் பேராயர் வாழ்க!

நல்ல மேய்ப்பர்; நல்ல மேய்ப்பர்;
மண்ணகம் நல்ல புண்ணியம் செய்து
பெற்றவோர் மக்கள் பேரா யர்இவர்!
சூட்டிக் கொண்ட பெயரால் மட்டுமே
ஆரோக்கிய சாமி யல்லர் இவரோ
அகநிலை யினிலும் புறநிலை யினிலும்
ஆரோக்கிய மான குணந லன்களை
அணிக லன்களாய்ப் பூண்டு வாழ்பவர்;
எந்தை யேசு பெருமான் அருளிய
"சமாதானம் செய்து வைப்பவர்
பாக்கிய வான்கள் என்னும் உயர்ந்த
அமுத மொழியினுக் கிலக்கிய மானவர்;
புரவலன் போலும் தோற்றம்; உறழ்கொள
இரவன் மக்களின் பணிமொழி பயிற்றி"ப்
பாங்குடன் திருவருட் பேரவை மாநிலத்
தலைவராய் அமர்ந்துஇவர் நாளும் பணிசெயும்
பணிகளுக் கேதுகைம் மாறுகடப் பாடு!
ஐய, ஆண்டகையே!
வாழ்க, பல் லாண்டுநின் வாழ்நாள் வரையில்
யாமும் வாழிய நினைவாழ்த்து தற்கே!

## 9. மணிவிழாச் செல்வர்

## நா. மகாலிங்கம் வாழ்க!

*ஞாயிறு திரிதரு ஞால மதனில்*
*திசையெலாம் புகழும் தென்தமிழ் நாட்டில்*
*கோதி லாத்தமிழ் கொழித்து வளர்ந்திடும்*
*கொங்குநா டென்னும் தங்கநா டதனில்*
*பூமகளுக்குப் பூவணி யென்னப்*
*பொலிந்து விளங்கிடும் பொள்ளாச்சி நகரில்*
*நல்லதோர் நாச்சி முத்தெனும் அன்பர்க்குச்*
*செந்தமிழ் மொழியும் சிவநெறி யோடு*
*சீலசன் மார்க்கமும் சிறந்து பயனுறத்*
*தோன்றிய தோன்றல் ஆன்றபண் பாளர்*
*மாசி லாப்புகழ் மகா லிங்கம்*
*திருவேறு தெள்ளிய ராதல் வேறெனும்*
*பொய்யா மொழியும் பொய்க்கும் படியாய்த்*
*திருவும் தெள்ளிய அறிவும் இவற்றினை*
*நல்கும் அயர்விலா உழைப்பும் நயன்சேர்*
*வண்மையும் திண்மையும் வளர்உயர் நோக்கும்*
*உவமையில் பண்பும் ஒருசேர்ந் தியங்கிப்*
*பொலிந்தனன் வாழ்க! நலஞ்சேர் மனையறம்*
*புகழ்பெற வாழ்ந்து புதல்வரால் பொலிந்தனன்!*
*மணிவிழா நாயக னாகிஇன் புற்றுத்*
*தனிச்சிறப் பெய்தினன் தமிழ்போல் வாழ்கவே!*
*பெருமைசால் பெரியோன் பின்னும்ஆ யிரம்பிறை*
*கண்டுவாழ்ந் திடுக! மண்திளி ஞாலம்*
*சாதி சமயச் சழக்கினைச் செய்து*
*அல்லற் பட்டழி கின்றது அதனைச்*
*சன்மார்க்க நெறிக்கீழ்த் தம்வயப் படுத்திப்*
*புன்மார்க்கம் போக்கிப் புவியெலாம் வாழச்*
*செய்துபல் லாண்டு சிறந்து வாழ்கென*
*காளத்தி யண்ணல் கழலிணை*
*நினைந்துவாழ்த் துகின்றோம்! நீடு வா ழியவே!*

## 10. ஆ. பத்மநாபன்

*மலரெனப் படுவது தாமரை மலரே!*
*மன்னுல கத்தில் வாழ்ந்தவ ரென்று*
*எண்ணப் படுபவர் மிகமிகச் சிலரே!*
*அந்தச் சிலருள் இந்த உலகினை*
*உய்த்துச் செலுத்துபவர் ஓரிருவரே!*
*"யாதும் ஊரே! யாவரும் கேளிர்!"*
*என்றுநல் லுறவு, கொண்டு வாழ்ந்தது*
*மூத்த தமிழ்க்குடி முன்னாள்; பின்னாள்*
*புற்று நோயெனப் புகுந்தது சாதி!*
*சாதிச் சழக்கின் பரிணாம வளர்ச்சியே*
*தீண்டாமை யாகித்தேசம் கெடுத்தது!*
*எல்லா உயிர்க்கும் தந்தை, தா யானவன்*
*எந்நாட் டவர்க்கும் உரிய இறைவன்*
*கோயிலில் மூத்த தமிழ்க்குடி புக்கு*
*ஊனும் உயிரும் உருக வழிபடும்*
*உரிமை பறிக்கப் பட்டது! அதனால்*
*அடிமைத் தனமும் நுழைந்தது! அயர்ச்சிகள்*
*அனைத்தும் வந்தே அணைந்தன! இந்த*
*இழிநிலை எதிர்த்(து)எற்புடைக் களம்கண்டு*
*விடுதலை வேண்டிப் போரா டியமுதல்*
*தலைமக னாவார் திருநாளைப் போவார்*
*நந்தம் சென்னியில் வைத்துநாம் போற்றும்*
*புகழ்த்திரு நாளைப் போவார் அற்றைநாள்*
*பண்ணை யடிமை முறையை நீத்தார்!*
*திருக்கோயில் நுழைவுக் கும்போ ராடினார்!*
*திருப்புன் கூரில் தோல்விகண் டாலும்*
*தில்லையின் எல்லையில் வெற்றியே பெற்றர்*
*உயர்குடிப் பிறந்தோர் உறுசெருக் கொழிந்து*

*திருநாளைப் போவாரைத் திசைதொழு தேத்தி*
*'ஐயரே' என்றழைத் தமைவுடன் தாழ்ந்து*
*வலம்வந்து வாழ்த்தி ஆடல்வல் லானின்*
*அரங்கினுக் கழைத்துச் சென்றன ரன்றே*
*சாதி முறைகள் சருகாய்ப் போயின!*
*தீண்டா மையும் சிதைந்து தொலைந்தது!*
*மறதி களையே மரபெனப் போற்றி*
*வரும்நம் தமிழின மக்களுக் கெல்லாம்*
*நன்றினைக் காட்டி நாளும்படிப் பிக்கும்*
*பண்பார் பத்ம நாபச் செம்மால்!*
*நன்னெறிக் காவல! நாவல! பாவல!*
*அறநெறி சார்ந்த ஆட்சி யாள!*
*நீள நினைந்து திருநாளைப் போவார்க்கு*
*ஒருமணி மண்டபம் உவந்து கண்டனை!*
*வாழ்கநின் கொற்றம்! மனித நேயம்!*
*தண்டமிழ் நிலம்நின் தாளாண்மை எண்ணி*
*எண்ணிப் போற்றும் எண்ணிலா ஆண்டுகள்!*
*மேலாதனூர்ப் பணியினை மேலும்*
*சிறக்கச் செய்கென எம்மைப் பணித்தனை!*
*பிழைக்கா தியற்றுவ தெம்பெருங் கடனே!*
*நீ கருது பணியினை நின்று*
*முடித்தல் எந்தலைக் கடனாம் முயல்வமே!*

## 11. *துரை கலியமூர்த்தி

*இந்தப் புவியில் எதுசிறந் ததெனில்*
*ஈடில்மா னுடமே சிறந்தது! இன்றோ*
*பணம்பெரி தாகி மனித மதிப்பினைப்*
*பாழ்செய் நோயே பரவு கின்றது!*
*மானு டத்தை மதித்தலும் அந்த*
*மானுடத் திற்கு மாறா அன்பு*
*செய்தலும் சீரிய அறமெனத் தேறித்*
*தெளிந்தனன் சிறந்த முறைமன் றத்தில்*
*நீதி வழங்கும்நெறிசால் உயர்துரை*
*கலிய மூர்த்தி யெனும் ஒரு சான்றோன்!*
*பிறர்தம் பங்கைத் திருடிப் பிழைக்கும்*
*எத்தரால், குறிஞ்சி நிலத்தினில் இருந்த*
*குறவர்தம் உரிமை பறிபோ யிற்று!*
*தொல்லை தந்து முல்லை நிலத்திற்குத்*
*துரத்தப் பட்டனர் தொல்குடிக் குறவர்!*
*முல்லை நிலத்திலும் நிலம்கிடைக் காமல்*
*புறங்கா டதனிற் புகுந்து வாழ்ந்தனர்;*
*ஆங்கே அலையும் நரிக ளோடு*
*கூட்டுற வாகிக் கூடி வாழ்ந்ததால்*
*நரிக்குற வர்எனும் நாமம் பெற்றனர்!*
*புறங்கா டதனிலும் உறிஞ்சியே வாழ்ந்த*
*உலுத்தர்கள் தந்த ஓயாத் தொல்லையால்*
*காடு மிழந்தனர்; நாடோடி யாயினர்*
*ஊர்சுற்றி வாழ்தல் பழக்கமா யிற்று!*
*ஓரூர் இல்லை; தலைசாய்த் துறங்க*
*ஒருவீ டில்லை; ஒருதொழி லில்லை!*
*இந்த இழிநிலை கண்டுளம் நொந்த*

* 1988இல் சிவகங்கை நீதிபதி.

ஈர நெஞ்சன்துரை கலிய மூர்த்தி
அமைவுற வீடுகள் சமைத்தனன்! அழகிய
பழத்தோட் டமும்கண் டுந்துவந்தனன்!
தங்கிப் பயிலவோர் பள்ளியும் தந்தனன்!
நாடோடி மக்களை நாகரீக மக்களாய்
ஆக்கிடத் துடித்து அழைக்கும்
துரைகலிய மூர்த்தி வாழ்க! வாழ்கவே!

## 12. கொப்பனாபட்டி

## திரு. நா. அருணாசலம் செட்டியார்

## மணிவிழா வாழ்த்து

மண்ணிற்கு அணியாய் மழைக்குத் துணையாய்க்
கொப்புக ளுடனே குளிர்நிழல் வழங்கும்
மரங்கள் நிறைந்து மாண்புகழ் சேர்க்கும்
புண்ணிய பூமியாம் இந்திய பூமியில்
கொப்பனா பட்டியில் செழித்தநன் மரங்களின்
கொப்புகள் போலே செழித்த கிளையுடன்
விளங்கும் புகழ்க்குடி மு.ப.மு. குடியின்
வழிவழிச் சிறந்த மரபினில் வந்த
அருணா சலம்எனும் அண்ணல்வா ழியவே!
வாழ்வாங்கு வாழ வழிகாட்டு கின்ற
வள்ளுவத் தின்வழி வான்பொருள் தேடும்
வழிகள் பற்பல! "இயற்றலும் ஈட்டலும்
காத்தலும் காத்த வகுத்தலும் வல்லது
அரசு!" எனும் குறள்நெறிக் கிலக்கண மாக
வாழ்அரு ணாசல அண்ணல்வா ழியவே!
ஈட்டிய செல்வத் தினைஆன் மாக்களின்
அறியாமை நீக்கக் கல்வி நிலையமும்
உடற்பிணி நீக்க மருத்துவ நிலையமுமாய்த்
தந்துத வியதோர் தாளாண்மை யுடையாய்!
வாழ்க, நீ வளமார் வாழ்க்கைத் துணையுடன்
மங்கல மனையறத் துப்பய னாகிய
நன்கலத் துடன்நீ நலமெலாம் பெருகிப்
பலநூறு பிறைகள் கண்டு
உலகினில் வாழ்க! வளர்க! வா ழியவே!

## 13. ''தமிழய்யா'' கதிரேசன்

காவிரி போற்றுதும்! காவிரி போற்றுதும்
காவிரியின் செழிப்பில் பூஞ்சோலைகளின் அமைவில்
பூவாளூர் என்ற ஊர் தோன்றிச் சிறந்தது!
பூவாளூர் இயற்கை எழில் பூத்தது;
ஏரி நிறைந்தனைய செல்வம் உடையது
இன்பத் தமிழும் வளர்ந்த மண்!
மகாவித்துவான் தியாகராசச் செட்டியார் பிறந்த ஊர்!
பூவாளூரில் பிறந்து பனசையில் தமிழ் கற்றுக்
குன்றக்குடியில் குடியேறிய குணக்குன்று,
கதிரவன் எனத்திகழும் கதிரேசன் அவர்கள்
நலம் பாராட்ட முன்வந்து
அடிக்கல் போட்டவர் நமது 'எழுத்துச் செம்மல்'
ஊருக்கும் நாட்டுக்கும் உனதருமை காட்டினார்!
சந்தனக் கடைக்கும்
பூக்கடைக்கும் விளம்பரம் வேண்டுமோ!
நாமும் நமது கவிஞர் பரமகுருவும்
"தமிழய்யா" என்றே அழைப்போம்
நின் அன்பு எங்களை ஈர்த்தது
குட்டுகள் பல பெற்றனர் மாணவர்கள் உன்னிடம்!
ஐயா, தமிழய்யா! இளையோருக்கும்
மகளிர்க்கும் தமிழ் கற்றுக் கொடுப்பீர்!
குன்றக்குடியில் தமிழால் வாழ்க!
என்றுமுள தமிழ்போல் வாழ்க!
இனிதே வாழ்க! வளர்க!

## 14. பரமகுரு வாழ்க!

பூமலி உலகில் பிறந்தோர் பலர்!
வாழ்ந்த சுவடே இல்லாமல், காணாமல் போனவர்கள் பலர்;
வாழ்ந்த போதே பயனுற வாழ்ந்தவர் சிலர்;
இச்சிலருக்கு ஏன் வயதுகள் வளர வேண்டும்.
இம்மாநிலம் பயனுற வாழ்வோர்
என்றும் வாழ்ந்தால் என்ன, கூற்றுவனுக்கு இழப்பா?
நல்லோர் பலரும் இன்றில்லாததால்
முற்றிய கதிர்மணிகளைக் காணோம்!
பதர்களே எங்கும்!
இவருள்ளும் ஒருசிலர் உண்டு!
அள்ளி எடுத்தல் இயலாது; பொறுக்கி எடுத்தல் வேண்டும்!
அங்ஙனம் பொறுக்கி எடுத்த மனிதருக்கும்
வயது வளர்கிறது என்பது ஏன்?
பற்றிலர்; பாங்குடன் பழகுவர்;
கருமமே கண்ணாக உடையர்;
நோயினால் உடல்வருந்தியும் விடுமுறை விண்ணப்பம்
எழுதியறியார்;
எப்படி எழுதினும் புரிந்து கொள்வார்!
இவர்போல் படித்தார் யார்?
(அன்பும்) பணிவும் அணியெனக் கொண்டவர்;
நமது இலக்கியப்பணி முதிர, நூல்கள் பல வர
உதவிய பாங்குக்குக் கைம்மாறு ஏது?
ஐய, பரமகுருவே! பல்லாண்டுகள் வாழ்க!
நோயின்றி வாழ்க!
இன்புறு நலன்கள் அனைத்தும் பெற்று வாழ்க!
விரைவில் நூறாவது புத்தகம் வர உற்றுழி உதவுக!
நின்உதவிக்குக் கைம்மாறும் கடப்பாடும் செய்ய இயலுமா?
பரமகுருவே! பல்லாண்டு வாழ்க, வாழ்க!

# 15. கோபிநாத்

கோபிநாத்! கவனமாகக் கேள்!
உன்கடமை. அன்றாடம் செய்ய வேண்டியவை
நாளை என்றால் விழித்துக் கொண்டிருப்பவர்கள்
மேவிவிடுவர்
உன்பணி எளிது! மிகவும் குறைவும் கூட!
உன்பணி சிறக்காத தால்
இழந்த இழப்புக்கள் பல!
ஆண்டு வேலைத்திட்டம் அளித்தும்
நீ பின்பற்றவில்லை!
கிழமை வேலைத் திட்டம் ஒதுக்கீடு செய்தாலும்
ஏற்றுச் செய்தாயல்லை!
உன்துறையில் இன்று கடன்!
ஊதியத்திற்குரியது இல்லை!
ஏன், இந்த அவலம்?
நீ இளைய வயதினன்!
நின் நிலைமையை நினைந்து கவலைப் பட்டால்
மாறலாம்! மாறுவாய்!
மாறாக உனக்குக் கோபம் வருகிறது.
உதவும்பணி உபத்திரமாகப் போகிறது!
நீ, கவலைப்படமாட்டாயா?
நீ, சாமர்த்தியமாகத் தெரியவில்லை என்கிறாய்?
திறமையில்லை என்கிறாய்!
இது உண்மையா?
நின்னைச் சோம்பல் ஏவல் கொள்கிறது.
உயர்மனப்பான்மை கொடிகட்டிப் பறக்கிறது!
இவற்றைத் தவிர்த்து விடு!
நின்பணி சிறக்கும்! நின்வாழ்வு சிறக்கும்!
வளர்க! வாழ்க!

## 16. குலச்சிறையார் பேரவை

பூவுலகில் புகழ்பூத்து வாழ்ந்தோர் வரலாறு
நந்தம் வாழ்க்கைக்கோர் உந்து சக்தி!
வரலாறு தரும் படிப்பினையை
ஏற்றுப் போற்றிடின்
குறைகள் நீங்கும் நிறைகள் பெருகும்!
குணக்குன்றெனத் திகழ்ந்தகுலச் சிறையார்
கொல்லாமை மறைந்தொழுகிய சமண்பாவியரைப்
புறம் வேர்த்துக் காட்டாது அகம் வேர்த்து
நந்தம் குலதெய்வமெனச் செஞ்சொல் சேக்கிழார்
போற்றிய
மங்கையர்க் கரசியார் குறிப்பு வழி நின்று
இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
சராசரமெல்லாம் சிவம்பெருக்கிய பிள்ளையார்
ஞானத்தின் திருவுரு ஞானசம்பந்தரின் துணைகொண்டு
செந்தமிழும் சிவநெறியும் தமிழ்மரபும்
காத் தருளிய குலச்சிறையார் புகழ்போற்றும்
மணமேற்குடி குலச்சிறையார் பேரவையினர்
குணம் போற்றி! அருந்திறல் போற்றி வாழ்த்துவோம்!

# 17. தருமபுர ஞானபுரீசுவரர் கோயில் திருக்குட நீராட்டு விழா மலர் வாழ்த்து

*தரணியை யெல்லாம் தன்பால் ஈர்க்கும்*
*கங்கையிற் புனிதமாம் காவிரிக் கரையில்*
*ஆருயிர்க் குற்ற பகையெலாம் கடிந்து*
*தண்ணருள் பொழியும் தரும புரத்தினில்*
*மன்னுயிர்க்கு ஊன சம்பந்தம் நீக்கி*
*உய்திதந் தருளும் ஒப்பிலா ஞான*
*சம்பந்த தேசிக! தருமையும் கமலையும்*
*விரிதமிழ்க் கூடலும் திருநக ராக*
*அரசு வீற்றிருந் தருளும் ஞான*
*சம்பந்த தேசிக! நின்திரு வுள்ளத்திற்கு*
*இசைந்த தொன்றினை இயம்புவன் கேண்மோ!*
*கயிலையின் நீங்கித் தரும புரத்தில்*
*உலகுயிர் அனைத்தையும் வினைப்பகை சுடாமல்*
*ஆட்கொளும் ஐய! ஞானத் தலைவ!*
*என்பால்நின் கருணை மாறி விழுந்ததேன்?*
*ஞாலத் துயர்தமிழ் அறிவு நல்கினை;*
*வேதாந்தத் தெளிவாம் சித்தாந்த அறிவுதந்து*
*சிந்தையும் தெளிவும் தெளிவு சிவமுமாய்*
*விளங்கு பெற்றிமை உணர்த்தி யருளினை!*
*மூலையில் கிடந்தேனை முற்றத்தில் விட்டனை!*
*நின்னருள் வழியில் நிற்கமாட்டா தேற்குத்*
*தவிசுமிட் டருளினை ஆயினும் என்ன?*
*நின்றும் கிடந்தும் எழுந்தும் நடந்தும்*
*நின்நாமம் ஏத்தி வாழ்ந்திடும் பேறு*
*பெற்றே னிலேன்; நின் பரிகலம் மாந்தி*
*மகிழ்வுறும் பேறு வாய்த்திலேன்; ஞான*

கு·XIV·10·

சம்பந்த தேசிக! நல்லருள் தேசிக!
சண்முக தேசிக! மண்நட மாடும்
கோயில் களில்எழுந் தருளும் மூர்த்தியாம்
ஞான புரீசன் எழுந்தருள் கின்ற
திருக்கோ யிற்பெருஞ் சாந்தித் திருவிழா
எடுத்தருள் கின்ற எண்ணில்சீர் புண்ணியம்
எடுத்துக் கூற ஏது நமக்கு
ஆற்றல்? ஐய, செந்தமிழ்ப் பயனாம்
சிவநெறி உய்த்துச் செலுத்திய நாயக!
நின்னருள் தகைமை நினைந்தே என்றன்
ஆவி கழியும் ஐய! நீ என்னை
மறக்கப் பெறாமை யானுனை வேண்டுவல்!
எங்களை யாண்டுகொண் டின்னருள் புரியும்
ஞான தேசிக! சண்முக தேசிக!
எதுஎமைப் பணிகொளு மாறது அருள்கவே!

## 18. அருட்கொற்றம் வளர்க! வாழ்க!

*செந்தமிழும் சிவநெறியும் வளர்த்து வரும்
திருவாவடுதுறை ஆதீனம்
சீர் வளர் சீர் குருமகா சந்நிதானம்
சரா சரமெல்லாம் சிவம் பெருக்கும்
சிவப்பிரகாசம் எனும்
திருநாமம் கொண்ட தேசிக!
நின் அருட் செங்கோலின் கீழ்
எல்லாரும் உள்ளோம் என்பதே
இதயத்திற்கு இதம்!
நின் அருட் பார்வையில்
சீருடன் நடைபெறும்
அம்பலவாண தேசிகர் நடுநிலைப்பள்ளி
நூற்றாண்டு விழாக் காண்பது
அளப்பரிய மகிழ்ச்சி தருகிறது!
ஆயினும் ஒரு குறை!
நின் அருட் பார்வையில் நடைபெறும் பள்ளியில்
பயிலும் மாணாக்கனாக இலாது போனோமே!
இன்று பயிலுவோர் பேறு பெற்றவர்
பள்ளி வளர்க! பலநூற்றாண்டு வளர்க!
நின் அருட் கொற்றம் வளர்க! வாழ்க!*

## 19. குறளியத்திற்கு வாழ்த்து!

பூவிரி உலகிற் புகழ்நனி சிறந்த
தண்டமிழ் நாட்டில் தரணிக்கு முதலாய்த்
தோன்றி முத்த தொல்தமிழ்க் குடியின்
பெருநெறி யதனில் பிணங்கு புல்லுருவிக்
களையினை நீக்கிக் கறையெலாம் போக்கி
வாழ்வாங்கு வாழ வந்தது குறளியம்!
வசையிலாப் புகழ்சேர் வள்ளுவன் வாயுறை
வாழ்த்தெனத் தந்தது திருக்குறள் திருமறை;
குறளடி களினால் குறைவிலாப் பெருநெறி
சாற்றினன் ஞாலம் போற்று பேராளன்!
குவலயம் குறைகள் தீர்ந்து வாழ்ந்திடத்
தந்த குறளியம் இந்தவை யகத்து
வாழ்விய லாக அமைந்திடு மாயின்
மானுடம் கலிப்பகை வென்று வாழ்ந்திடும்;
குறளியத் தின்வழிக் குவலயம் நடந்தால்
அறிவ றிந்த ஆள்வினை யாலே
செல்வம் குவித்திடும்; சிறந்து வாழ்ந்திடும்;
உயிர்ஓப் புரவு நெறிநின் றோங்கிடும்:
ஈதலும் இசைபட வாழ்தலும் உண்டு;
மனையக மெல்லாம் மாண்படை யோரும்
மாநில மெல்லாம் மாதவத் தோரும்
அறத்தினை வளர்த்துச் சீலம் பெருக்குவர்;
பிரிவினைப் பிணக்கால் பேதுற் றிருக்கும்
நிலமகள்.
பொருளைச் செய்து போற்றா தவரால்
பல்குழு வால், பாழ் செய்யும் உட் பகையால்,
வேந்தலைக் கும்கொல் குறும்பால் நடுக்குறும்;
குறைகள் எல்லாம் விரைவில் நீக்கி
நிறைகள் நல்கிடும் குறளியம், உறுதி;
குறளியம் வையகப் பொதுநெறி யாகுக!
குறளியம் வழங்கிப் பெரும்புகழ் கொள்ளும்
வேலா வாழ்க, வாழ்க!
குறளியம் போற்றுமின்! வரலாறு படைமினே!

## 20. விருதலைநாள் வாழ்த்து

"பெற்ற தாயும் பிறந்தபொன் னாடும்
நற்றவ வானினும் நனிசிறந் தனவே!"
என்றான் கவிஞன் பாரதி! அவன்றன்
அடிச்சுவட் டினில்நடை போடுவோம் வாரீர்!
சாதி குலப்பகைச் சண்டைக ளுக்கொரு
முடிவு கட்டுவோம்! விடிவு காணுவோம்!
இவர்தே வர்!இல்லை அவர்தே வர்!எனக்
கலகம் செய்து கழிவெறி யூட்டி
மருட்டு கின்ற மதப்பிணக் குகளை
மண்ணிலே போட்டு இன்னே மூடுவோம்!
மானுடம் பேசி மகிழ்ந்திடப் பலமொழி
கற்றுத் தெளிவோம்! மனிதம்ஒன் றாவோம்!
இங்குள அனைவரும் இந்திய ரே,யென
ஒருமனப் பாட்டுடன் கூடிவாழ்ந் திடுவோம்!
கூட்டுற வதனில் கூடித் தொழில்செய்து
பொதுவுடை மைச்சமு தாயம் பூத்திட
வாயில் அமைப்போம்! வறுமையைப் போக்கி
வளம்பல படைப்போம்! உலக அரங்கினில்
நமதுநன் னாட்டு பெருமையை உயர்த்துவோம்!
தாயின் மணிக்கொடி உயர்த்திப் பிடிப்போம்!
இமயம் முதல்தென் குமரி வரை புகழ்
மண்டிக் கிடக்கும் இந்திய நாட்டைப்
போற்றி மகிழ்வோம்! இப் புண்ணிய நாளிலே!

# 21. பொங்கல் வாழ்த்து

பூவுல கினிற்புகழ் சிறந்தது தமிழ்நிலம்!
கல்தோன்றி மண்தோன் றாக்கா லத்தே
முன்தோன்றி மூத்த குடி—தமிழக் குடியாம்!
சிந்தையிற் சிறந்து செயலில் விளங்கு
புகழ்படைத் திட்ட பொன்வர லாறு
முந்தையோர் தமக்குச் சொந்த மாகும்!
இன்றைய நிலைமை என்ன? எண்ணுவோம்!
வாழ்க்கைக்(கு) இலக்கணம் கண்ட மாண்பார்
தமிழர்தம் வாழ்வில் இலக்குகள் இல்லை!
இலக்கிய மில்லை! இலக்கண மில்லை;
தமிழ்மொழிக் குப்பின் தோன்றிய மொழிகள்
புதிய கலைகளால் பொலிவுபெற் றுள்ளன!
ஆனால், தமிழ்த்தாய் பட்டிமன் றங்களில்
கவிதைகள் கதைகளில் சுழன்றுழல் கின்றாள்!
வான மளந்த தனைத்தும் அளந்திடும்
ஆற்றல் மிகுந்த தொழில்திறன் அனைத்தும்
அன்னைத் தமிழில் அமைந்திடு கின்ற
பேற்றினை இன்னும் பெற்றோ மில்லை!
தாயாய் இருந்து வளர்க்கும் தமிழ்த்தாய்
கல்வி மொழியாம் தகுதிபெற் றாளிலை!
அவள்தம் வீட்டில் அவள்முழு உரிமை
பெற்றா ளில்லை இற்றைநாள் வரைக்கும்!
இடையிலே வந்த ஆங்கி லச்சியும்
நடுவீடு அமர நாழிகை பார்த்துக்
கொண்டுநிற் கின்ற இந்தியும் தமிழ்க்குத்
தரும் நெருக் கடியையும் அவ்வழித் தமிழரின்
வருங்கா லத்து வாழ்வுச் சரிவையும்
எண்ணிப் பார்த்திடும் இதயமும் உண்டா?

"பிறப்பொக் கும்எல் லாஉயிர்க்கும்" எனும்
வள்ளுவம் பிறந்த வரலாற்றுச் சிறப்புடைத்
தொன்மைத் தமிழகத்(து) எண்ணத் தொலையாச்
சாதிகள் இறைவன் சந்நிதி வரையில்
கொட்டம் அடித்துக் கூத்தாடு கின்றன!
விழுப்புர மும்வெண் மணியும் மீனாட்சி
புரமும் இராம நாத புரமும்
தமிழர் வரலாற்றின் கறைகளே யன்றோ?
"ஒன்றென் றிரு;தெய்வம் உண்டென் றிரு"என்றும்
"எந்நாட் டவர்க்கும் இறைவன்" என்றும்
சமயப் பொதுநெறி கண்டஇந் நாட்டில்
மண்டைக் காடுமுதல் மணப்பா றைவரை
சமயச் சண்டையால் சாரமே இல்லாச்
சமயம் காணும் அவலம் வந்தது!
இல்லா ரும்இலை; உடையா ரும்இலை
எனும்உயர் மானுடன் கம்பனின் வாக்கு
வலுவினை இழந்து வறுமை மிஞ்சி
நிலநடுக் கோட்டொடு போட்டி போட்டிடும்
வறுமைக் கோடு வந்த நாள்இது!
"சக்தி யேசிவம்" என்பீர்! வள்ளுவன்
"பெண்ணிற் பெருந்தக்க யாவுள?" என்றான்.
ஆயினும் என்ன? அகத்தி னில்எழும்
துன்பத் தீயினில் நாழிகை தோறும்
செத்திடு வோரும் புறத்துமூண் டெரியும்
தீயினில் வீழ்ந்து செத்திடு வோரும்
எத்தனை பெண்கள்! எண்ணிப் பார்மின்!
கருத்துக் களின்வழி கட்சிகள்! கட்சிகள்
அரசியல், சமுக அருமைநா கரிகப்
பண்ணைகள் என்ற தத்துவம் கெட்டு
எரிவி னாலே எதிரிக ளாகி

உட்பகை வளர்த்து வெப்ப உணர்ச்சியால்
நாட்டைக் கலகக் காடா யாக்கிடும்
கட்சிப் போக்குகள் கவலை தருவன!
எதையும் ஏற்(று)இழி நிலையில் வாழ்ந்து
மாண்டிட நினைக்கும் மனத்தைமாற் றாது
பானையை மட்டும் மாற்றினால் போதுமா?
பழக்கம் மாற்றிப் பண்பினை வளர்ப்போம்!
அன்னை மொழியில் அனைத்தையும் கற்போம்!
அன்னைத் தமிழ்க்(கு)அணி கலன்க ளாக
மற்ற மொழிகளை மாண்புறச் சேர்ப்போம்!
தமிழ்மொழி காத்துத் தமிழராய் வாழ்வோம்!
இந்தியராக இயைந்துவாழ்ந் திடுவோம்!
உலகச் சமூகத்து உறுப்பாய்த் திகழ்வோம்!
கெட்ட போரினை முற்றும் தவிர்ப்போம்!
ஆன்ம நேய ஒருமைப் பாட்டினை
ஒழுக்கமாய்க் கொள்வோம்! ஒருகுல மாவோம்!
மாந்தர்எல் லாரையும் மதித்துவாழ்ந் திடுவோம்!
ஒன்றே கடவுள் என்றுகும் பிடுவோம்!
எல்லா ருக்கும் எல்லாம் கிடைத்திடும்
உயர்ந்த பொதுமை யுகம்படைத் திடுவோம்!
பொதுவினி லாடும் புண்ணிய மூர்த்திக்(கு)
இதுவே விருப்புறு பூசனை யாகும்!
பொதுமைச் சமுதாயம் காண்ப தன்வழி
வைய கத்தினில் வானகம் காண்போம்!
புதுப்பா னையிலே பொங்கிடும் சோற்றுப்
பொங்கலைப் படைத்திடும் பொழுதே மண்ணில்
புதுமையைப் பொதுமையை வளர்த்து மன்பதை
உலகினில் மகிழ்ச்சிப் பொங்கல்
நிலவிடச் செய்து நீடுவா ழியவே!

## 22. பொதுமைப் பொங்கல் பொங்குக!

*தண்ணார் தமிழகத் தினில், தை முதல்நாள்*
*வரும்விழா பொங்கல் திருவிழா வாகும்!*
*வீடுக ளெல்லாம் வெள்ளை யடித்துப்*
*புதுக்கித் தூய்மைப் பொலிவுசேர்த் திடுக!*
*நமது வாழ்விலும் நலமில் லாத*
*பழமைகள் நீக்கிப் புதுமை பெறுக!*
*புத்தா டைகள் வாங்கி உடுத்துக!*
*அறிவி யற்புது வாழ்வைத் தொடங்குக!*
*செந்நெல் அரிசியில் செங்கரும் பின்சாறு*
*நன்னர் சேர்த்து நற்பொங்க லிட்டு*
*உண்டு உடலுக்கு உறுதிசேர்த் திடுக!*
*செந்தமி ழின்சுவை யூறும்நற் கருத்துகள்*
*உணர்வினுக்(கு) ஊட்டமாய்த் தினம்தினம் பெறுக!*
*உயிர்க்குல மனைத்தும் நமது வாழ்க்கையில்*
*ஒத்தி சைந்து நிற்பத னால்தான்*
*நமது வாழ்வு நடக்கிறது! ஓர்க!*
*நமது வாழ்வு பிறஉயிர்க் குலத்தின்*
*நலனுட னிசைந்து நடைபெறு கின்றதா?*
*என்று நாள்தொறும் எண்ணுக! வாழ்க!*
*பானையில் பொங்கல் பொங்கினால் போதுமா?*
*வாழ்க்கையில் பொதுமைப் பொங்கல்*
*பொங்குக! எங்கும் தங்குக நலமே!*

# 23. தமிழ்ப் பொங்கல் பொங்குக

பொங்கலோ, பொங்கல்! பொங்குக, பொங்கல்!
செந்நெல் அரிசியும் செங்கரும்புச் சாறும்
சுவைமிகு நெய்யும் அளவொடு கலந்து
ஆயது இனிய சர்க்கரைப் பொங்கல்!
ஒவ்வோ ராண்டும்தான் உண்கிறோம்! சர்க்கரைப்
பொங்கல் மட்டுமா பொங்கல் திருநாள்!
தமிழர் திருநாள்? சற்றுச் சிந்திப்போம்!
பொங்கல் என்றதுஏன்? இங்குள்ள தமிழர்
யாவரும் ஒன்று படவேண்டும் என்பதே!
நாளும் நாளும் தமிழர்கள் தம்முள்
அந்நியப் பட்டுக் கொண்டுசெல் கின்றனர்
தமிழினம் ஓரினம்; தமிழ்க்குடி ஒருகுடி
என்றநல் லுணர்வை இதயத்தில் பதிப்போம்!
சங்க காலத்துச் சான்றோர் கோவூர்கிழார்
"ஒருவீர் தோற்பினும் தோற்பதுங் குடியே
இருவர் வேறல் இயற்கையும் அன்றே"
என்ற இசைமொழி வாழ்வாகும் நாளே
தமிழர்க்கு உண்மையில் பொங்கல் நாளாகும்
தமிழ், பகை பலகண்டு வளர்ந்த தனிமொழி
அன்று ஆரியத்தை வென்றது நம்தமிழ்
இந்தியைக் களத்தில் கண்டுவென் றதும்தமிழ்!
இன்றோ ஆங்கிலத் தின்நெருக் கடியால்
தாய்மொழி தமிழ்தன் தகுதி யிழந்து
வருங்கொடு மையினால் பெருங்கேடு வந்தது!
இல்லங்கள் தோறும் குழலும்யா ழும்என
இசைத்தது தமிழ்; அத் தமிழ்பேசும் மழலைகள்
"அம்மா"வை மறந்து "மம்மி" என்றும்

“அப்பா”வை மறந்து “டாடி” என்றும்
பேசும் நிலையில் பொங்கல் விழாவா?
ஏ!எந் தமிழர்காள்! தமிழினம் காப்பீர்
தமிழ் மானம் காப்பீர்! ஒருகுடி யாவீர்
தமிழையே கற்போம்! தமிழிலே கற்போம்
பொங்க விடுவோம்! அதுதமிழ்ப் பொங்கல்
“எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்!”
இதுவே நமது இலட்சிய மாகும்!
பொதிகைத் தமிழ் வாழ்க! பொங்குக, பொங்கலே!

## 24. தைத் திங்கள் தேவி!

மங்கல மனையின் கதவினைத் தட்டும்
ஓசை கேட்டு ஓடிக் கதவினைத்
திறந்தேன்! தைத்திங்கள் தேவிநின் றிருந்தாள்!
அன்ன நடைநடந் துள்ளே வந்தாள்!
வீட்டினுள் அவளை வரவேற் கின்ற
சூழல் இல்லை! தைத்திங் கள்அவள்
என்னை நோக்கி நகுதல் செய்தாள்!
"ஏன் இந்த உறக்கம்?
செல்வத்தின் ஊற்றாம் உழைப்பின்
உறுகளன்களும் உனக்குள்ளன!
ஏன் இந்தத் தளர்வு?"
"உழைப்பே தவம்" என்ற உறுதிமொழியை
மறந்தனையோ?
உழைப்பவர் உள்ளமே ஈசன் எழுந்தருளும் கோயில்!
என்பதனை மறந்தனையோ?
"உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?"
என்றாள்!
"இல்லை! இல்லை! தாயே!
உழைப்பில் முறையாக உழைத்தேன்!
நாளும் உழைத்தேன்! ஆயினும் உறுபயன் காணேன்!"
என்றேன்
உடன்பிறந்தோரே யாயினும்
திறமறிந்து உறவு கொள்ள வேண்டும்!
ஆள் கணக்குக் கூட்டம் கூட்டினை!
அவர்கள் உன்னுடன் வரவில்லை! உண்மை!
ஏன்? நீ தனியே நடைபோட முடியாதா?
கண்ணை இமை காப்பதைப் போல
நின்கருமத்தில் விழிப்புடன் இருக்க இயலாதா? இயலும்!

பயணத்தைக் குறை! வெளிச்சத்தைக் குறை!
ஆரியக் கூத்து ஆடினாலும்
காரி யத்தில் கண்ணாக இரு!
இனியும் சொல்லாதே செய்!
நாள் தோறும் செய்!
புதியன தொடங்காதே! பழையன போற்று!
என்று தைத்திங்கள் தேவி இயம்பினாள்!
எழுச்சி கிடைத்தது! விழிப்புணர்வு வந்தது!
மூலையில் இருந்த பானையை எடுத்துப்
பொங்கலிட்டுப் படைத்தேன்!
இனி, செயலினை மூச்சினைக் கடமைகளுக்கே
அர்ப்பணிப்பேன் என்றேன்!
நங்கை விடைபெற்றாள்! நான் எழுந்தேனே!

## 25. கயிலைக் குருமணி அவர்களுக்கு வாழ்த்தும் அஞ்சலியும்

*தருமையும் கமலையும் விரிதமிழ்க்கூடலும்*
*திருநக ராக அரசுவீற் றிருந்தவ,*
*பல்லுயி ருக்கும் பவசம் பந்தம்*
*மாற்றிய ஞானசம் பந்தமா முனிவ,*
*அறுபடை வீட்டில் அமர்ந்தருள் வழங்கும்*
*அண்ணலின் பெயர்தம் உரிமையாக் கொண்ட*
*சொற்பொருள் தேடும் சுப்பிர மணிய*
*தேசிக கயிலைக் குருமணி! நீயே*
*ஒன்றுக்கும் போதா என்றன் உளத்தினில்*
*புகுந்து நின்றனை, புகலரும் பெரியோய்!*
*கண்ணப்பன் அன்பைக் காளத்தி யப்பன்*
*உகந்த தற்குக் காரணம் என்னை?*
*அங்ஙனே போதிலும்நின் அன்பே! ஆனால்*
*கண்ணப் பன்தன் கண்ணினைத் தந்தான்.*
*யாதுநீ பெற்றனை என்பால் ஐயனே!*
*உமையொரு கேள்வன் உலகுடை நாயகன்*
*என்னுயிர் எடுத்துக் கொண்டுநின் னுயிரை*
*மண்ணில் தவழ்ந்திட மனங்கொண் டானவன்!*
*மன்னு மாமலை கயிலை யதனிலே*
*எந்தை ஈசன் தனக்குத், தாயிற்*
*சிறந்த பரிவுடன் செய்ம்முறைப் பாங்குடன்*
*பணிகள் செய்திடும் அடியா ரிலாத*
*நிலையில் நினைவந் தழைத்தனன் கொல்லோ?*
*ஆலால சுந்தரன் என்ன ஆயினன்?*
*பண்டொரு நாள் அவன் அணுக்கத் தொண்டினை*
*மறந்து காதல் மயக்கங் கொண்டிட*

அண்ணல் வருந்திய வருத்தம்ஆ ரறிவார்?
அண்ணல் மட்டும் அறியலாம். அவனோ(டு)
ஆரு ரன்பால் ஆர்ந்த வேட்கையில்
மாதே வனும்இம் மண்ணிலே நடந்து
மீண்டும் அவனை மீட்டுச் சென்றனன்!
அந்தஆ ரூரன் மீண்டும்அக் காதல்
வழிப்பட் டிருப்பான் போலும்! எதையும்
காதலிக் காமல் தன்னையே காதலித்(து)
இன்புறும் இனிய தோழனை விரும்பி
கயிலா யத்துறை நாதன் கடிதினில்
நாடி நின்னை நயந்துபெற் றனனோ?
தகைசால் சிவத்திடம் தன்னலம் இருந்ததே,
அவன்நன் றாகவாழ்ந்துபோ கட்டும்!
நின்னுடைப் பேணலில் நிமலன் மகிழ
மண்ணகம் விட்டுனை மறைந்தெ டுத்தனன்.
யானென் செய்வல்? யானென் செய்வல்?
நெஞ்சின் தூய்மை நின்முகம் காட்டக்
குழைத்த அன்பினை நின்சொற் கூட்ட
அணைத்த அணைப்பின் இதத்தினை இகழ்ந்தேன்!
எம்போ லியரும் இம்மண் ணுக்கிரை
யாகி விடாமல் அழியா மாண்பு
படைத்துத் தந்தநின் படைப்புத் தொழிலையும்
ஊனுக் குணவும் உயிர்க்கு ஞானமும்
உவந்தளித் திடும் நின் காத்தல் தொழிலையும்
நின்றன் சிரிப்பில் எந்தம் பண்டைக்
கொடுவினைக் காரியம் மறை(த்)திடும் தொழிலையும்
ஞானத் தழுவலால் எம்மூல மலத்தை
அவித்தழித் தமைந்த அழித்தல் தொழிலையும்
இமயம் சார்கருங் காக்கையும் எழிலார்
பொன்மய மாகப் பொலிவது போல

நின்னைச் சார்ந்த நமக்குநின் னுரிமை
தந்(து)எம் பெயரை மாற்றி நின்பெயர்
தந்துநல் இன்பத் தொட்டிலில் வளர்த்ததால்
நின்றன் நிகரிலா அருளும் தொழிலையும்
ஆக ஐவகைத் தொழிலையும் அறிந்து
நினைந்து நெகிழ்ந்தே உருகு கின்றனம்!
நீர்த்துளி காணாப் பயிரென எம்முயிர்
வாடா தோ? நாம் வாடிடக் கயிலைக்
கடவுள் தாம் மகிழக் கருதிய தறமோ?
கூடல் மா நகர் நெடுஞ் செழியனோ அன்று
தன்நிறை தவறினன். அதுபோ லின்று
கூடல்மா, நகரில் கொற்ற மமர்ந்தருள்
ஆலவாய் அண்ணலும் நிறைதவ றித்தான்
மகிழவும் எம்முயிர் வாடவும், நின்னுயிர்
கொண்டுபோய்ச் சேர்த்துக் கொடுமை செய்தனனே!
கயிலை நாதன் காதலித் தான்நினை
கயிலை நாதனைக் காதலித் தாய், நீ!
நானோ நின்னை நயந்துகா தலித்தே
என்னெஞ் சினிலே நின்னைக் கொண்டனம்!
என்னெஞ் சினின்றும் நின்னை யகற்றிடக்
கயிலை மலையா னாலும்சா லாதே
கண்ணால் நின்னைக் கண்டு மகிழத்
தடைசெய் தான் அவன் ஆயினும் நின்னை
நெஞ்சால் நினைந்து மகிழும் உரிமை
எந்தை ஈச னாலும் பறித்திட
இயலா உரிமை! என்றன் உரிமையே!
நின்னை நினைந்தென் ஆவி கழியும்!
நின்னை உள்ளி நீளுல கத்தில் நீ
பணித்த பணிகளைச் செய்து கிடப்பேன்!
கயிலை நாதன் கழிபெரு வேட்கையால்,

நின்னை அழைத்திட நெடிதுகா முற்றனன்!
எனையழைத் திடாமல் தனிநீ ஏகினை!
பெரியோர் செய்கை பொருட்குறிப் புடையது
என நான் தேறிஇவ்வுடல் தாங்கினன்!
எந்தை கயிலை ஈசன் தன்னிடம்
செந்தமிழ்ச் சுந்தரன் விண்ணப் பித்துச்
சேர மான்பெரு மாளைச் சேர
அழைத்துக் கொண்டது நீ அறி யாததோ?
உண்மையில் உன்னிடம் ஒரு விண்ணப்பம்
நின்னடி வேண்டுவன் யான் அஃதொன்று!
எந்தை கயிலை ஈச னொடு நீ
இனிது மகிழ்ந்துறைந் திருக்கும் போழ்தினில்
என்னையும் அழைத்திட எடுத்துக் கூறி
இனியஉத் தரவுபெற் றெனக்(கு) அதை யனுப்பி
அருளுக! நாளும்நின் அழைப்பை
நோக்கியே வாழ்தலை நோன்பெனச் செய்வனே.

கு. XIV. 11.

## 26. சுந்தரம் அடிகள்! கேள்!

ஞாலந் தன்னை வாழ்வித் தருளும்
குலதெய்வம் குமரன் புகழ்பரவும்
கொங்கு நாட்டுக் கௌமார மடம்தனில்
அதிபதியாய், ஆதீன கர்த்தராய்
இருந்தருளிய சுந்தரத் தமிழ்முனிவ!
சுந்தரம் அடிகள்! கேள்!
அன்று சுந்தர ருக்குத் தோழனாய்
இறைவன் வந்தான்!
இந்த இப்புவியில் நந்தமக்கு, வாய்த்த
தோழன் நீ!
அவிநாசிப் பயண மாளிகையில்
நாம் உண்ண, நீ உண்ணா நோன்பு கொண்ட
கெழுதகை நட்புள்ளம்
நாடறியாத நற்றிறப் பண்பு!
கோவை விமான நிலையத்தில் இறங்கி
எங்கோ செல்லஇருந்த நம்மை வழிமறித்து
அரசியல் சாராவண்ணம் செய்த
நின்தோழமைக்கு ஏது கைம்மாறு?
சுந்தரம் அடிகள்! கேள்!
இனி இப்புவியில் யார் தோழர்?
"குன்றக்குடியின் குரல்நீ" – என்று
கயிலைக் குருமணி உவந்து பாராட்டினார்!
ஐய, திருப்பணி நாயக!
கவிமழை பொழியும் கொண்டலே!
சேக்கிழாரை நீ விரித்துரைத்த பாங்கதனை
இனியாரிடம் கேட்பது?
என்ன கொடுமை!
கூற்றுவனும் நொதுமலாளன் அல்ல போலும்!

ஆண்டில் மூத்த நம்மை அழைக் காமல்
நின்னை அழைத்துக் கொண்டது
கொடுமையினும் கொடுமை!
மீண்டும் காலனைக் காலால் உதைத்து
நின்னைத் தந்திருந்தால்
தமிழ்க் கவிதா மண்டலம் வளரும்!
திருக்கோயில்கள் திருப்பணி நலம் பெற்றுப்
பொலிந்திருக்கும்!
திருத்தேர்கள் உலாவரும்!
ஏன் இறைவன் செய்யவில்லை!
கயிலையில் திருப்பணி செய்ய
நயந்து நின்னை அழைத்தனன் போலும்!
ஐய, சுந்தரம் அடிகள்! கேள்!
நின்னைத் தேடி வருவோம் நாம்!
அப்போது நின்குளிர் அன்பில்
திளைக்கும் பேறு கிடைக்கும்!
இது உறுதி!

## 27. நீளுலகில் வாழ்வாய் நிலைத்து

## (அண்ணா)

நாடு புகழ்ந்தேத்தும் நல்லபே ரறிஞன்
பாரினுள் ளோர்க்குப் பைந்தமிழ்ச் சாரதி
மலராடு சோலையில் வண்டாடு புதுமலர்
வழக்காடு மன்றத்தில் தேர்ந்த வழக்காடி
இன்னபுகழ் சேர்த்த எமதருமை அண்ணா
தாங்குபுகழ்த் தமிழினத்தின் தானைத் தலைவன்
ஓங்கியசீர்ப் பாரதத்திற் குற்ற தனித்தலைவன்
தரணிபுகழ் அன்னைத்தமிழின் தவப்புதல்வன்
வள்ளுவத்தை உலகுணர வைத்தவொரு வான்விளக்கு
தெள்ளுதமிழ் நெஞ்சில் தேன்சேர்க்கும் பேச்சழகன்
சிரித்த முத்தழகன் செந்தமிழின் நாவழகன்
இரக்கத் தனிஊற்றாம் ஏற்றத்தின் சாயல்
மலரினை மொய்த்து மயங்கிச் சுழன்றாடும்
வண்டாய்த் தமிழுலகம் வாயாரப் போற்றி மகிழ்ந்து
அண்ணா அண்ணாவென் றழைத்திடவே வாழ்ந் துயர்ந்த
எமதருமை அண்ணா எங்குற் றனைநீயோ?
நின்னை வளர்த்த தமிழ்மறந்து சென்றனையோ?
வேறுலகம் சென்றனையோ? விண்ணகந்தான்
போயினையோ?

பாரினில் பஞ்சைப் பராரிகள் வாழ்ந்திடவே
படியரிசி தானளக்க நிதிதேடிச் சென்றனையோ?
செகத்தில் சிறந்த சேலத்து நல்லிரும்பை
விலைகூறச் சென்றனையோ வேறுசெயப்
போயினையோ?

நின்னைப் பிரிந்த தமிழ்என்ன ஆவதுவோ?

*பாசத்தி லேசிறந்த தம்பியர்கள் என்படுவர்?*
*வித்தட்டி யுண்போர் வியனுலகில் யாருமிலர்*
*கூற்றுவனும் அன்னதுபோல் ஆற்றிவிட்டான்*
*இக்கொடுமை!*
*நின்னுடலம் மாய்ந்தாலும் நின்றன் புகழ்நிற்கும்*
*'உளதாகும் சாக்காடும்' என்றானே வள்ளுவனும்*
*தெள்ளுதமிழ் வள்ளுவர்க்குச் சிலையெடுத்து நீயுயர்ந்தாய்*
*நீளுலகில் வாழ்வாய் நிலைத்து.*

## 28. என்ன கருதி எமக்குத் தந்தனை? (அண்ணா)

வாழும் நெறியினை வகுக்கும் வள்ளுவம்
கோல உலகினிற் குடிநின் றுயர
பருவம் மடிமா னம்பா ராமல்
குடிசெய் கென்று குரல்கொ டுத்தது!
அக்குர லதற்கே அரும்இலக் கியமாய்
வாழ்ந்து வேறுபா டின்றி இனநலம்
கருதிக் கங்கு கரையிலா அன்பு
பொழிந்தபே ரறிஞன் அண்ணா கண்டோம்!
வாழுதல் கலையென மொழிந்தான் வள்ளுவன்
வள்ளுவன் நெறியும் அண்ணா நெறியும்
வாழும் வகைக்கிரு கால்க ளெனவே
கொண்ட கொண்டல் கொழி தமிழ்க் கலைஞர்
புதிய புறநா னூற்றைப் படைக்கும்
புரவலர்; புரவலர் புரவல ராகப்
பிறப்பதோ டன்றிப் பரந்தகா லத்தையும்
வென்று நிற்கும் வியன்மிகு கவிஞராய்
நிரந்தினி துரைக்கும் நீர்மைநா வலராய்
ஏற்றம் மிகுந்த எழுத்தா ளருமாய்
நாடொறும் நாடி நலம்புரி அமைச்சாய்
நெஞ்சில் பழக்கம் எனும்சால் உழுது
அன்பெனும் வித்திட் டாரத் துய்த்திடும்
அருமைக் கலைஞர் நமைமே லவையில்
இருக்கச் செய்தது என்ன கருதியோ!
நெடிய நேரம் நினைந்த பின்னும்
புலப்பட வில்லை! புலப்பட வில்லை!
நமதுஆ தீன மஃதுஅண் ணாமலை
ஆதீ னம்ஆம் அண்ணா என்ற
முதன்மைச் சொல்லில் மூண்ட காதலோ?
பேசும் மொழியால் பெட்புறு நெறியால்

தமிழ இனத்தைச் சார்ந்தது கருதியா?
குன்றக் குடியைக் குன்ற விடாமல்
நின்று விளக்கிட நினைத்தோ? இவரை
ஏற்றிப் பார்க்கலாம் என்ற எண்ணமோ?
ஒதுங்கி மடத்தில் உட்கார்ந் தவரை
மன்றில் நிறுத்தி வேடிக்கை பார்க்கவோ!
பிறந்ததாய் மொழியைப் பயின்றநாள் தொட்டு
தொண்டு நெறியின் சுவைதே றியநீ,
நம்மையும் தொண்டு நெறியினில் நடத்தித்
தூண்டக் கருதியோ? தொன்மையார் சிறப்பின்
தாரணி புகழும் தஞ்சை மண்ணில்
ஒருங்கே பிறந்தோம் எனும்பா சத்திலோ?
சென்ற நாட்களில் சில துறை ஏற்றுத்
தொண்டு செய்ததில் தொடர்ந்த துன்பத்தைக்
கண்டு களைந்திடுங் கருத்தது தானோ?
தமிழ்மொழித் துறையில் தக்கபே ரறிவு
இல்லை யெனினும் எழிற்றமிழ்ப் பற்று
மிக்கோர் என்னும் விரிந்த கருத்திலோ?
இழிசா தியெனக் கிடந்த இனத்தை
ஏற்ற முறச்செய் பெரியார் நம்மிடைக்
கொண்ட பாசம் குறித்தோ நினைத்தது?
எதுவென அறியோம், யாதுசெய் வதென
விளங்கவு மில்லை! வேண்டுவ தொன்று!
இன்றே போல்க உமது கேண்மை.
தாங்கு புகழார் தரணிக்கு நீசெயும்
பணிக்குடன் நிற்கும் வாய்ப்பளித் தமைக்கே
உளமார் நன்றி; உவந்துரை, செய்தோம்!
எழுபிறப் பும்யாம் உள்ளுவம் நினது
உழுவ லன்புத் திறம்வாழ்த் துதுமே!

## 29. கண்ணதாசன் புகழ் வாழ்க!

*பூமண் டலத்தில் புரியாப் புதிர்பல!*
*தமிழ்த்தா யின்தண் ணளியினில் தழைத்து*
*உயர்தமிழ்க் கவிஞனாய் ஓங்கி நின்றவன்;*
*வையத் தினைவழி நடத்தி வாழ்ந்திடும்*
*கவிஞர் குலத்தின் அரசாய்த் திகழ்ந்தவன்;*
*எண்ணிலா நலன்கள் இனிதுறப் பெற்றவன்;*
*குழைந்திடும் குழந்தை மனம்ப டைத்தவன்;*
*கொழித்திடும் கவிதை உள்ளம் கொண்டவன்;*
*புயலென வீசிய அரசியல் உலகிலும்*
*எதற்கும் அர்த்தம் எடுத்துக் கூறியும்*
*நந்தா விளக்காய் நம்மிடை வாழ்ந்தவன்;*
*கண்ண தாசன்; கவிஞர் கோமான்;*
*பாரதி பாரதி தாசன் வரிசையில்*
*இடம்பிடித் தோங்கி இனிதே அமர்ந்தனன்*
*கவியர சாகிய கண்ண தாசனை*
*இழந்தே இன்ன லுற்றுத் தமிழகம்*
*நின்றழு கின்றது! நிலையிழந் ததுவே!*
*கண்ண தாசன் உயிர்கொண்ட கள்வன்*
*காலன்நம் கண்ணிற் படுவா னாயின்*
*அவனுயிர் வெளவும் ஆத்திரம் உண்டு!*
*என்ன செய்வது? இயற்கையின் நியதி!*
*கண்ண தாசன் புகழ்வா ழியவே!*

## 30. பக்கீர் முகம்மது!

காவிரி யாறு வளம்கொ ழித்திடும்
குடந்தையில் வளம்பல பெற்று வளர்ந்தோன்!
"மயிலாடு துறையின் நாடாளு மன்றத்
தொகுதி என்றும் இவன்றன் தொகுதியே"
என்றுரைத் திடுவர்! இத்தொகு தியிலே
தொடர்ந்து தேர்தலில் வெற்றியே பெற்று,
"தோன்றிற் புகழொடு தோன்றுக!" என்ற
வள்ளுவத் திற்கோர் எடுத்துக் காட்டாய்
வாழ்ந்த செம்மல், பக்கீர் முகம்மது!
"புரவலன் போலும் தோற்றம் உறழ்கொள
இரவன் மாக்களிற் பணிமொழி பயிற்றி"ப்
பலர்நெஞ் சங்களில் குடிகொண் டாயே
நீ ஒரு முஸ்லீம்! ஆம்முஸ் லீமே!
ஆயினும் நின்னிடம் விளங்கித் தோன்றியது
இந்தியப் பண்பா டேயாம்! அன்று
சீறாப் புராணம் செய்த உமறுப்
புலவர்க்கு வாய்த்த புகழ்த்தமிழ் வள்ளல்
சீதக் காதிபோல் செம்மல், நீ நமக்கு
வாய்த்த வள்ளலு மாயினை! இன்று நீ
எமைத் தனி யேவிட் டேகினாய் சுவர்க்கம்!
இனியார் துணைநம் தொண்டுகள் சிறக்க!
பீடுசால் பக்கீர் முகம்மது வே! சொல்!
அளவற்ற அருளா ளன்அருட் பெருக்கில்
நனைந்து வாழ்க! நண்ப!
இன்ப அன்பில் திளைத்து வாழ்கவே!

3

# நாள்வழிக் கவிதைகள்

## 1. அறிவு

"அறிவுடை யார்எல் லாம்உடை யார்" என
வான்புகழ் வள்ளுவம் மயக்கற உணர்த்தும்!
அறியாமை அகன்றிடக் கற்பன கற்க!
கேட்பன கேட்க! சிந்தனை செய்க;
நாடொறும் நாட்டின் நடப்புகள் அறிந்து
படிப்பினை பெறுக! பட்டறி வுறுக!
மானுடத் திற்கு வாய்த்தநற் கருவி
அறிவு!அவ் அறிவினைக் கருவியாக் கொண்டு
வையகத் தின்துன், பங்களை மாற்றி
வெற்றிகாண் பவரே கற்றறி வுடையோர்!
அவமது நீங்கிய அறிவுடை மையினால் –
தொடர்ந்த தோல்விகள் வெற்றிக ளாக்கிப்
பசிப்பிணி பகைப்பிணி இவற்றி னின்றும்
வைய கத்தினை மீட்போ மாக!
அறிவுடை யோம்என் றறிந்தே
உறுதுயர் நீக்கும் அறிவினைப் பெறுகவே!

## 2. தன்னை அறிக!

*அண்டம் அனைத்தையும் உரிமைப் படுத்தும்*
*அறிவினை அடையும் வாயில்கள் பலப்பல!*
*அந்த வாயில்கள் அனைத்திலும் முதன்மை*
*யானது வாழும் வாழ்வினை ஆழ்ந்து*
*அனுபவித் தறித லாகும்! முழுதும்*
*உறுசுவை யான உணவே யாயினும்*
*சிறுகுடல் பேரள வாகா திதுவெனக்*
*கழித்திடும் உண்மை காண்க! அதாஅன்று*
*நாடொறும் நாம்வாழ்ந் திடும்வாழ் வதனை*
*அறிந்தே வாழினும் ஆயிரம் பிழைகள்*
*உண்டு!அப் பிழைகளைக் கண்டவை தவிர்த்து*
*வாழ்வாங்கு வாழ்தலே வளர்ச்சி யாகும்;*
*நன்றெது? பிழையெது? என்று தேர்ந்திட*
*வாழ்ந்த வாழ்வினை உற்று நோக்குக!*
*தற்சார் பின்றித் தன்னைஆழ்ந் தறிக!*
*அந்த அறிவினில் தன்பிழை தெரியும்!*
*அப்பிழை தந்த அறியாமை தெரியும்!*
*அறியாமை அகற்றுக! அறிவுநலம் பெறுக!*
*நந்தம் நேற்றைய வாழ்விலும் நமக்குச்*
*சிறந்தஆ சிரியன்யார் அறிவினை நல்கவே!*

## 3. வரலாற்று அறிவினைச் சார்ந்து வாழ்க!

*ஞாலம் ஞா யிற்றை வலம்வரு வதனால்*
*காலம் நகர்கிறது; ஞாலம் நகர்கிறது*
*நாடொறும் நானிலத் தினில்எண் ணற்ற*
*நிகழ்வுகள் நிகழ்ந்த வண்ணம் உள்ளன.*
*நிகழ்வுகள் நிகழ்ந்தவா றிருப்பன வல்ல.*
*அந்த நிகழ்வுகள் நந்தம் வாழ்விலும்*
*தாக்கம் பலப்பல தகவுறச் செய்வதால்*
*நமது வாழ்விலும் பாதிப் பேற்படும்*
*அந்தப்பா திப்பை ஆக்கம்நல் குவதாய்*
*நயந்துஞா லத்தின் நடப்பினுக் கேற்பவும்*
*கால வர்த்த மானத்திற் கிசையவும்*
*கலந்தினி தாய்வாழ்ந் திடல்அறி வுடைமை!*
*உலகத் தோடு ஒட்ட ஒழுகல்*
*ஒழுக்கம் எனும்உயர் வள்ளுவம் ஓர்க!*
*வரலாற் றறிவினைச் சார்ந்து வாழ்தலே*
*அறிவுடை வாழ்வாம்! அமரவாழ் வஃதே!*

## 4. நிகழ்வுகளும் காரணங்களும்

உலகம் தழீஇய தொட்பம்என் றறிவோம்!
நாடொறும் நானில மக்கள் வாழ்க்கையில்
நிகழ்வுகள் எண்ணில நிகழ்வுறு கின்றன.
இன்றைய நிகழ்வுகள் இன்றைய விளைவல்ல!
என்றோ ஒருநாள் மானுடம் இயக்கிய
இயக்கத் தாலே வீழ்ந்த வித்துகள்
இன்றைய மகசூ லாயின காண்க!
இன்றைய நிகழ்வு களில்எதிர் கால
நீண்ட வரலா றுள்ளது நினைமின்!
ஆதலின் நாடொறும் அவ்வர லாற்றை
உற்று நோக்குக! உலகம் எங்கே
தங்கு கின்றதோ அங்குத் தங்கிட
முயல்க!வை யத்து முழுவர லாற்றின்
நிகழ்வு களை, அந் நிகழ்வுக ளுக்குப்
பின்னணி யாகப் பிறங்குகா ரணங்களை
ஆய்ந்தறிந் தேநல் லறிஞர் மார்க்சு
மூல தனமெனும் நூலை யாக்கினார்
ஆதலால்,
செய்திகள் செய்திகள் மட்டு மல்ல
உலக நிகழ்வுக் கொலிபரப் பாகும்.
வரலாற் றுக்களம் இந்த வையமே!
ஏழை பணக்கா ரன்எனும் ஏற்பா(டு)
இன்று தோன்றிய தன்(று)அது என்றோ
எண்ணித் திட்ட மிட்ட!ஏற் பாடே!
இந்தஏற் பாட்டிற் குத்தலை விதியைக்
காரண மாகக் காட்டி வைத்தது
ஒருநாட் செயலல! பலநாள் எண்ணி

*மதத் தலைவரும் பிறர்தம் பங்கைத்*
*திருடிய திருடரும் சேர்ந்து செய்த*
*கூட்டு முயற்சியின் கொடுமையே அஃதாம்!*
*காணும் காட்சிகள்! பேசுசாத் திரங்கள்*
*அனைத்தும் மனித குலவர லாற்றில்*
*விரிந்தவை யேயாம்! இவற்றினில் நன்று*
*தீதினை ஆய்வு செய்து வாழ்க்கையை*
*இயக்குத லேஅறி வுடைமை என்கவே!*

## 5. பெறற்கரும் அறிவு

மன்னா உலகில் மன்னுதல் வேண்டின்
மன்பதை உலகம் செல்லுமா றறிந்து
இந்தவை யகத்தின் இயங்குவர லாற்றை
நாளும்உய்த் தறிந்து மானுடப் போக்குடன்
முரண்பட்டு நில்லாது உடன்பாட்டு நிலையில்
ஏற்புழி ஏற்று ஏலா தனதிசை
மாற்றங்கள் செய்து தாமும்இம் மன்பதை
உலகமும் வாழ்வதற் குரிய அறிவினைப்
பெறுதல் வேண்டும்!
உலகத்தோ டொட்ட ஒழுகல் என்பது
வள்ளுவன் தந்த மறைமொழி யாகும்!
உலகம் என்பது உயர்ந்தோர்மாட் டென்பது
பொருள்பொதி உரையெனப் புந்தியில் தேறுக!
உலகம்! ஆம்!அது மானுடப் பரப்பே!
உலகம் ஏற்ப இயைபுழி ஒழுகி
வைய கத்தினை வாழ்வுறு வழியில்
இயக்கி வாழ்தலே வாழ்தல்! இத்தகு
அறிவே பெறற்கரும் அறிவென அறிகவே!

## 6. கற்பது கடமை

*கழிபிணி உடலின் நலிவினை நீக்க*
*உணவே உரிய நன்மருந் தாகும்!*
*இடர்தரு நோய்க்கும் இதுவே மருந்தாம்;*
*உடலினை இயக்கி உறுபயன் கொள்ளலாம்!*
*உய்யு மாறொரு வாழ்வு வேண்டின்*
*உயிருறு ஆணவம் ஒழிந்திட வேண்டும்*
*ஆணவத் தின்படை யாக அமைந்து*
*கேடுகள் பலசெயும் கீழ்அழுக் காறு அவா*
*வெகுளிஇன் னாச்சொல் வேண்டும்வேண் டாம்எனும்*
*வேற்றுமைப் படுத்தும் குணங்க ளோடு*
*அடக்க மின்மையும் அதிகாரப் பசியும்*
*எனஇவை யெல்லாம் இன்றிப் பீடுசால்*
*வாழ்வு வாழ்ந்திட உயிர்க்குறு மருந்து,*
*வாழ்வெனும் ஆழ்கடல் மூழ்கி அறிஞர்*
*ஆராய்ந் தெடுத்த அறிவுமுத் துக்கள்*
*கொழிக்கும்நன் னூல்களைத் தெளிவுற நாள்தொறும்*
*கற்பது நந்தம் கடமை யாகும்.*
*கற்பவை கற்றுத் தெரிந்த லின்வழி*
*பெறும்அறி வேநமக் குறுதுணை யாமே.*

## 7. கற்றலின் கேட்டலே நன்று

*உலகந் தழீஇய ஒட்பம் பெறுதல்*
*அறிவிற் கறிவா கியநல் லணியாம்!*
*நானி லத்து நான்கு திசையிலும்*
*ஆன்றலிந் தடங்கிய கொள்கைச்சான் றோரிடம்*
*வணங்கிய வாயின ராய்க்கேட் டறியும்*
*அறிவே ஆளும் அறிவெனப் படுமே!*
*தம்மின் மூத்த தகைஅறி ஞருடன்*
*கலந்து பேசித் தெளிந்திடல் அறிவு!*
*அறிவிற் கெல்லாம் மேம்பட்ட அறிவு!*
*கற்றலிற் கேட்டலே நன்றெனும் பொருளுரை*
*தேர்க! நன்கு சிந்தையுள் தெளிக!*
*மானுடம் பெற்றவை செவியிரண் டாகும்*
*எதிர் எதிர்த் திசையினில் இருப்பன அவைதாம்;*
*தாழும் தடையும் இலாத அச் செவிகளால்*
*கேட்பன வெல்லாம் கேட்டறிந் திடுக!*
*என்பதே இறைவன் ஆணைஎன் றறிகவே!*

கு.XIV.12.

## 8. சிந்தனை

*மானுடம் வலம்பட வாழ்தற்கு வாய்த்த*
*பயனுறு கருவிகள் பலவற் றுள்ளும்*
*சித்தம்என் பதுவே சீர்மிக் குடையது!*
*சிந்தித்தல் சித்தத் தின்தொழிற் பாடு*
*கண்ணால் காணும் காட்சியைக் கடந்து*
*செவியி லூற்றிடும் செய்தியைக் கடந்து*
*உணர்ச்சியைக் கடந்து உறும்ஆழ் நிலையில்*
*சித்தத்தில் வைத்தொரு செய்தியைப் பலபடச்*
*சிந்தித்துத் தெளிதலே சித்தத்தின் தொழில்!*
*சிந்திப் பவனே மனிதன்! சிறந்த*
*சிந்தனை யின்பயன் நன்னெறி வாழ்வு!*
*சிந்தை யின்பய னாகிய தெளிவில்*
*செழித்துக் கிடைக்கும் அறிவே சிறந்த*
*நலம்பல படைக்கும் நல்லறி வாமே!*

## 9. பகுத்தறிவு

*கற்பன கேட்பன உணர்வன யாவும்*
*உறுதி பயக்கும் உயர்அறி வாகி*
*விடும்என் பதில்லை; மேலாம் தேன்சுவைப்*
*பலாவின் சுளையைப் பக்குவ மாகத்*
*திருத்தி யெடுத்துச் சுவைப்பதே முறையாம்!*
*நன்றும் தீதும் உண்மையும் பொய்யும்*
*பயனும் பதரும் கலந்த நிலையில்*
*தீமையும் நன்மையும் தேர்ந்து தெளிந்து*
*வாழ்விற் குறுதுணை யாக அமைந்திடும்*
*அறிவினைத் தேர்த லேபகுத் தறிவு!*
*ஆசிரி யன்புகழ் நூலுக்குச் சான்றாகா(து)*
*உண்மைக்(கு) உரைகல் உரைப்பவன் புகழன்று*
*வாழ்வினுக்(கு) அணியாய் விளங்கும்*
*அறிவினைத் தேர்தல் தான்பகுத் தறிவே!*

## 10. அறிவுடைமை

வாழ்வாங்கு வாழ்தலில் வாய்த்தநல் அறிவு;
அறிவறிந்த ஆள்வினை யால்வந்த அறிவு,
ஐம்பூ தங்க ளாகி நின்றிடும்
இயற்கை வழங்கும் எழிலார் அறிவு;
உலகுக் குயிர்ப்பாய் உலவு மானுட
இயக்கத் தாலே வீழ்ந்தவித் தாகிய
வரலாற் றுத்திசை வழிதேறும் அறிவு;
கற்பவை கற்பத னாலாய அறிவு;
தம்மின் மூத்த அறிவுடை யோர்சொல்
வழியில் சேர்த்த மாண்பமை அறிவு
சித்தத் தினிலே இவையெலாம் சேர்த்து
அசைபோட் டுக்கடைந் தெடுத்ததோர் அறிவைப்
பலபட பகுத்து ஆய்வுசெய் திட்ட
பகுத்தறி வாலே தேர்ந்து தெளிந்த
அறிவுடை மையெனும் ஆற்றலிற் சிறந்த
கருவிபோ லுண்டோ பிறிதொரு கருவியே!

## 11. மார்க்சியம்

வைய கத்தினில் வாழ்வாங்கு வாழ்ந்து
உய்தற் குரிமை யுடைய உயிரினம்
வளமார் அறிவுப் புனல்நிறைந் தினிது
வாழ்ந்திட வேண்டும்;
ஆன்மா விற்கு அறிவுப் புனலினை
வழங்கு வாரி யங்களே பொறிகள்
கண், காட் சியில்களித் தல்குறி யன்று;
கண்டது கற்கப் பண்டித னாவான்
என்ற முதுரை நன்கு தேறுக;
புவியீர்ப் புத்தத் துவத்தினைக் கண்ட
அறிவியல் மேதை ஐசக் நியூட்டன்
ஆய்வுக் கூடத் திலாஅது கண்டார்?
ஓங்கி உயர்ந்த மரத்தினிற் பழுத்த
பழம்நிலம் நோக்கி விழுந்திடப் பார்த்த
போது கண்டதே புவியீர்ப் பாற்றல்!
காண்க! உற்றுக் காண்க! காண்கவே!
இயற்கையைத் தேறுக!
மாளிகை மருங்கே குடிசைகள் காண்க!
செல்வப் புனலோ
பள்ளம் நோக்கிப் பாய்வ தில்லை
மேடு நோக்கியே மேவிப்பாய்கிறது.
இந்த விந்தையை ஆய்ந்து கண்டதே
மார்க்சுமா முனிவர் கண்ட மார்க்சியம்,
மார்க்சி யம்ஓர் அறிவுக் கருவி
அந்த அறிவுக் கருவிஏந் துகவே!

## 12. செவியைத் தருக!

*மானு டத்தின் வளர்ச்சிக் கென்றும்*
*ஐய மிலாத அருந்துணை செவிகளே!*
*செவியறி வுறூஉவாய்ச் செப்பிய தோர்க!*
*உடலுறு பொறிகளில் செவியெனும் உறுப்பே*
*மறுதொழில் செய்யாது ஒரேதொழில் செய்யும்!*
*உடன்பா டானவும் கேட்கும் நேரெதிர்*
*இயல்பின தாயினும் கேட்கும் இயல்பாய்*
*அமைந்த செவிகளின் அரியபாங் கறிந்து*
*பயன்கொள் வார்வாழ் வின்பயன் கொள்வார்!*
*செவிநுகர் கனியினும் அமுதமும் ஏது?*
*கூனிபோன் றார்க்குச் செவியினைக் கொடுத்துத்*
*தாழ்ந்து விடாதீர்! தாழ்ந்து விடாதீர்*
*ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்சான் றோர்க்குச்*
*செவியினைத் தந்து புவியினில் வாழ்வீர்!*
*வாழ்வீர் பெருவாழ்வு வாழ்வீர்! வாழ்வீரே!*

## 13. உடலால் உறுபயன்

உயிர்கள் உய்யும் நெறிக்குறு துணையாய்
நுண்கரு விகளுடன் அமைந்தது உடம்பே!
அவ்வுடம் பழியும் இயல்புடைத் தாயினும்
மெய்யெனக் கூறினர் மெய்ப்பொரு ளுணர்ந்தோர்
மெய்ப்பொருள் தேறுத லுக்கொரு கருவியாய்
அமைந்த மெய்யினை அடைந்த மானுடம்
உற்றறி வனஅறிந் துணர்வன உணர்ந்து
உறுபயன் அளிப்பன தேறுதல் அறிவாம்!
ஓடியும் நடந்தும் உறுதொழில் செய்தும்
பொருளினைச் செய்து பலர்க்குப் பொருளென
விளங்குதல் அறிவாம் நலந்தரு கோயில்
வலம்வந் தும்இறை வழிபா டியற்றியும்
உடலினால் உறுபயன் காணல்
அறிவுக் கறிவென அறிதல்நங் கடனே!

## 14. வினாக்களின் பயன்

*உடம்பினில் உள்ள உறுப்புகள் யாவினும்*
*வாயினும் மாண்பு பயப்பதொன் றில்லை.*
*உடம்பினுக் குரிய உணவைத் தேர்ந்தெடுத்(து)*
*ஊட்டி வளர்ப்பது வாயே யாகும்!*
*உயிருறு உணர்வுக் குரிய அறிவினை*
*வினாவுவ தன்வழி விடைபல கேட்டு*
*அறிவினா லாய ஆக்கம் பெறுதற்(கு)*
*உறுதுணை யாகி உதவுதல் வாயே!*
*வாய்க்கு வாய்த்த நற்றொழில் பலபடப்*
*பேசுவ தன்று சிலபே சுதலே!*
*பிறர்வாய் பற்பல பேசிடு மாறு*
*வினாக்கள் எழுப்புக! வினாப்படி களில்தான்*
*வளர்கிற(து) அறிவியல்; வையம் இயங்குகிறது!*
*முந்தையோர் தொடுத்த வினாக்களின் பயனே*
*இன்றைய அமைவுறு இனியநல் வாழ்க்கை!*
*அறிவு தேற அரிய வினாக்கள்*
*தொடுக்கும் வாயே தொடர்ந்துநீ வாழ்கவே!*

## 15. மூக்கு

அன்றொரு நாளில் சண்டை வந்தது
சேரிக் குப் பத்தில்! சேற்றினை வாரி
வீசிக்கொண் டதுபோல் பேசிக் கொண்டனர்
ஒருவன், போடா உன்வா சனையே
ஆகா தென்றான்! ஆம்!மா னுடத்தின்
அகவுணர் வுகள்மணம் வீசு கின்றது!
உயர்மண மும்உயிர்க் காற்றும் வாழ்கிற
உயிர்க்குறு பயனை விளைத்திட மூக்கே
முதல்துணை! அந்த மூக்கினால் மணத்தின்
இயல்பினை யறிந்து வகைபட நுகர்ந்து
வாழ்தலே வாழ்வாம்! வாழ்வின் அளவுக்
கருவியும் மூக்கே யாம்!அது காட்டும்
வகைமூச் சியக்கமே வாழ்வின் சின்னம்!
உயிர்ப்பின் வழியில் வளியும் பிறவும்
நன்று தீதென அறிந்து வாழ்தலே
மூக்கி னால்பெறும் ஆக்கமாம் அறிவே!

## 16. நன்றாற்றலுள்ளும் தவறுண்டு!

*நாள்தொறும் நலியச் செய்துசா கடிக்கும்*
*நீரி ழிவுநோ யாள னுக்குக்*
*கட்டி பட்ட கரும்புமா காது.*
*நடுக்குறு வெப்பு நோயாள னுக்கு*
*இனிய குளிர்இள நீருமா காது.*
*வெட்கமி லாது தன்னலம் பேணி*
*வாழ்க்கையை வாணிக மாக்கும்மாக் களுக்கும்*
*ஈரமி லாதநெஞ் சுடைக்கய வர்க்கும்*
*தகுதிதே டாமல் தலைமை தேடி*
*அலையும் நிலையி லாக்கய வர்க்கும்*
*நன்றும் இல்லை; நன்றியும் இல்லை.*
*அதனால்,*
*நன்னாற்ற லுள்ளும் தவறுண் டென்ற*
*திருவள் ளுவர்உரை தேறுக! தெளிகவே!*

## 17. துலாக்கோல்

பொருளைக் கொடுப்போர் வாங்குவோ ரிடையில்
நெறிமுறை காத்து நிற்பது துலாக்கோல்!
எடைநிறைக் கல்லும் எடைக்குறு பொருளும்
சமநிலை யாக அமைதல்நல் வாணிகம்!
துலையின் நடுவே உருவம் சிறியதாய்
நிற்குமுள் போன்றது சமூக நீதி!
அந்தமுள் எந்தப் பக்கமும் சாராது
நின்றிடும் தன்மைபோல் அறநிலை நிற்றல்
வாணிகத் திற்கு அழகுஇவ் வையக
வாழ்வியல் கூட்டுற வாகஆ யதுவே.
கணவனும் மனைவியும் அமைந்த குடும்பம்
கூட்டுற வாகும் கூடிவாழ் இருவரும்
சமநிலை பேணல் உறவினுக் கழகு!
ஒருவரோ டொருவர் உணர்வுடன் கூடி
உலகியல் நடத்துதல் உயர்தோ ழமையாய்
அமைந்த அழகிய கூட்டுற வாகும்!
ஒருவர்மற் றொருவர் நலனை நாடுதல்
நடுநிலை சார்ந்த நலக்கூட் டுறவாம்!
எவரே யாயினும் அவரை மனிதராய்
மதித்துஅவர் கருத்தையும் செவிப்புலன் மடுத்து
ஆய்வுசெய் தொருநிலை யாய்நின் றெடுத்த
நல்லதோர் முடிவே நாட்டுக்கு நல்லது!
நடுவாய் என்றும் நிற்றலே
நலத்தின் சால்பென நவிலவும் படுமே!

## 18. அடக்கமுடைமை

*அறம்சால் மூத்தோர் அருளிய முதுமொழி*
*அடக்க முடையோ ராதலே உயர்தனி*
*அறமென மொழியும்! அடக்கக் குணத்தினை*
*அடிமைத் தனமெனக் கருதுதல் வேண்டா:*
*அடக்க மெனும்போற் றரும்பெரும் அணி, பயம்*
*என்னும் தீமையில் தோன்றிய தன்று*
*அடக்கம் பெருமிதத் தின்விளை வாகும்.*
*அடக்கம் அஞ்சா மையின்விளை வாகும்*
*அடக்கம் தெளிவில் பிறந்த துணிவாம்*
*அடக்க முடைய ராதல் அமரரின்*
*விழுமிய நிலையைத் தருவது ஆகும்*
*நனிசுவை கருதிப் பெருந்தீனி தின்னாது*
*அளவறிந் துண்ணின் உடலில்நோய் ஏது?*
*அளவறிந் துண்போர் நலமிகப் பொருந்தி*
*இன்புறல் திண்ணம் இஃதறி வீரே!*
*நுணங்கிய கேள்விய ராக விளங்கி*
*நாவடக் கத்தை நாடொறும் பேணுவோர்*
*பெருந்துய ரெய்தி வருந்துத விலரே!*
*புலன்களின் அடக்கம் அந்தண்மை நல்கும்;*
*புலன்களின் அடக்கமே புலனழுக் ககற்றும்;*
*பொறிகளின் அடக்கத் திற்கிணை ஏது?*
*அடங்குக! அடலே றெனவிளங் கிடுக!*
*அடக்க முடைமை யெனும்அணிக் கீடு*
*இப்புவி யினிலே எதுவுமே இல்லை.*
*அடக்க முடையவ ராகி*
*உலகை அடக்கி உயர்ந்துவாழ் வீரே!*

## 19. ஓட்டை விழுந்த ஓடம்!

*நீலத் திரைக்கடல் அலைகளைப் போல*
*நாளும் பற்பல அலைகளால் உந்தப்*
*பெறும்நினை வில்குழம் பிடும்நீல மேக!*
*வையகம் வாழ்ந்து வெற்றிகள் பெற்றோர்*
*நம்முன் னோடிகள் அவர்தம் நினைவினைப்*
*போற்றுதல் சிறப்புடை வாழ்வின் மரபாம்!*
*பேருல கத்திற் பிறந்தோ ரெல்லாம்*
*ஆற்றலும் ஆளுமை யும்உடை யோராய்*
*ஆகி விடுவ தில்லை! அதாஅன்று,*
*அன்பொடு கூடி அருந்துணை யாகி*
*அர்ப்பணிப் புணர்வுடன் கடமையை ஆற்றிப்*
*பழகிய உறவினைப் பாது காத்திடும்*
*இயல்பின ராதலும் இல்லைஇஃ தறிக!*
*வல்லாங்கு வாழ்தலும் வாழ்வாங்கு வாழ்தலும்*
*வேறு வேறு திறத்தன வாகும்!*
*உற்ற ஆட்சி நலனும் அமைவுற*
*உயர்வாய் அமைந்த உறவுகள் பேணிக்*
*காத்திட வேண்டின் ஒட்டியும் ஒட்டாமலும்*
*உறவாடும் உறவு பயன்த ராது.*
*நாளும் நொந்து நோகின் றவர்களும்*
*நமக்கேன் வம்பு நடந்த வரை, சரி*
*என்ற எண்ணப் போக்குடை யவர்களும்*
*ஓட்டை விழுந்த ஓடம்போன் றவர்கள்!*
*எடுத்த காரியம் எதிலும் ஆர்வம்,*
*உணர்வொடு கூடிய உந்து சக்தி,*
*பொருந்தா ரிடமும் பொருந்தி இயக்கும்*
*புரையிலாப் பண்பு, குற்றம் பொறுத்துத்*

தக்க வாறு திருத்தம் காணல்,
பற்றிய நெருப்பெனப் படர்ந்து கனன்று
உற்ற கடமையைச் செய்தல் ஓயாப்
போர்க்கு ணத்தினைத் தாழாது பெறுதல்
இன்ன இயல்புகள் யாவும் ஆளுமை
இயல்புகள்! இவற்றை ஏற்றுநாம் பேணின்
நமதுஆட் சித்திறன் நனிசிறந் திடுமே!
கோப்புகள் நகர்தல் ஆட்சிக்குத் துணையே!
கோப்புக ளுடன்குறிக் கோளுமுடைய
மனிதனும் மாட்சித் திறன்கள் பலப்பல
கைக்கொண் டாலே காரியம் நிகழும்;
வளமும் கொழிக்கும்; வாழ்வும் சிறக்கும்;
நனிசிறந்து நாளும் வாழ லாமே!

## 20. யாரொடும் பகை கொள்ளற்க!

கவிதை உலகத் தின்முடி சூடா
மன்னனாய் விளங்கும் மகாகவி கம்பன்
"யாரொ டும்பகை கொள்ளலன் என்றபின்
போரொ டுங்கும் புகழ்ஒடுங் கா" தென்றான்!
பகை – நல் அன்பினை அழிக்கும் நஞ்சு!
பகை – உற வதனைக் கெடுக்கும்புல் லுருவி!
பகை – ஒரு தொடர்நிலைத் தீமைஎன் றறிக!
பகைமை கொண்ட பாழ்நெஞ் சுடையோர்
யாதொரு நன்மையும் நாடார்! பகைவழிப்
பெற்றிடும் வெற்றியும் வெற்றிக ளல்ல!
பகைப்பு லத்தில் வெற்றியும் தோல்வியும்
சுழன்று சுழன்று வருதலே இயற்கை!
பகைவன் தனையும் பாரிக்கும் அன்பால்
விழுப்புக ழார்ந்த வெற்றியும் பெறலாம்!
பகையெனப் படுவது போருக்கு ஊற்று!
யாரொ டும்பகை கொள்ளாது வாழ்வீர்!
போரொ டுங்கும் புகழ் ஒடுங் காது!
அமைதிப் பூங்கா வாகும்இவ் வுலகமே!

## 21. நோய்க் கிடங்கு ஆகாதே! 

அழகுற அடுக்கிய கற்களே கவினுறு
மாளிகை யாகி நலமுற வாழ
உதவு கின்றன! உண்மைஇஃ தறிவீர்!
காயும் வெயிலும் கடுங்குளி ரதுவும்
பீழை தருகொசு முதலிய உயிர்களும்
வருத்தா வண்ணம் பாது காப்பது
அமைவுற அமைந்த வீடே யாகும்!
அயர்வினை நீக்கி அமைதி தந்திடும்
உறக்கமும் வீட்டினில் தான்உறும் அறிவோம்!
பயிலறி வாலே வரும்பழக் கங்களும்
வாழும் வாழ்க்கையில் வடிவம் கொண்ட
வழக்கங் களும்தான் வாழ்வாய் அமையும்
சுடாமண் கல்லால் ஆய வீடு
அடைமழைக் குறுதி யாகநிற் காது!
வடிகால் இல்லா வீடு நோயினை
வாவென் றழைக்கும்! வளிபுகுந் துலவா
வீடு வாழ்வுக்குச் சுகமளிக் காது!
பயில்தொறும் பயில்தொறும் வாழ்வினை வளர்க்கும்
பழக்கங் களைக்கைக் கொள்ளுதல், நல்ல
வாழ்வுக் குத்துணை யாக அமைந்திடும்
வழக்கங் களையே வழக்க மாக்குதல்
இன்புறு நலன்கள் யாவும் பொருந்திய
நல்வாழ் வுக்கு நனிமிகத் தேவை!
பணிஎன் பதூஉம் முயற்சிஎன் பதூஉம்
எண்ணிலா இடரையும் துயரையும் தாங்கிச்
செய்வதே யாகும்! இத்தகு வழக்கம்
வாழ்வினைத் தாங்கும் வைரத் தூணாம்!
நாள்தொறும் பொருந்தாப் பழக்கம் தவிர்த்தலும்

நாள்தொறும் பொருந்தும் பழக்கம் ஏற்பதும்
வாழும் வழியெனும் அறிவுரை தேறுமின்!
உடலியல் வாழ்வுக்கு மூச்சுக் காற்றென
உயிர்நல வாழ்வுக் குகந்தது நாளும்
புத்துணர் வைத்தரு நற்கருத் தாகும்!
கற்றும் கேட்டும் அறிதல் வேண்டும்;
நோயோ டொருநாள் தானும் வாழேல்!
நோயே வாரா வாழ்வே வாழ்வு!
நோய்க் கிடந் தாரா வாழ்வே வாழ்வு!
கடின உழைப்பும் காலத் தோடு
பழக்கிக் கொள்ளும் உடலின் வாழ்வும்
கால மாகிய முதற்பொரு ளுடனே
அறிவ றிந்த ஆள்வினைத் திறனால்
உழைத்து ஒண்பொருள் முறையுடன் ஈட்டித்
துய்ப்பன துய்த்து, ஊரும் சுற்றமும்
உவப்ப வாழ்ந்திடின் ஒருநோய் வராது!
இதுவே வாழ்வென இனிதுதே றுகவே!

ரு.XIV.13.

## 22. இனியன தேர்க!

விரிகடல் சூழ்ந்த பெருஞா லத்தில்
வென்று வாழ்ந்த வித்தகர் வாக்கும்
வாழ்வும் புகட்டுவ தியாதெனின் உடல்நோய்க்
குரிய மருந்துப் பொருள்ஒன் றாயினும்
அந்த மருந்தொடு கூட்டும் அனுபானப்
பொருள்வழி மருந்துப் பொருட்பயன் மாறும்.
அதுபோல்,
உரையின் பயன்உரை யளவின தன்(று)அவ்
வுரையினை எடுத்துக் கொள்வோர் உள்ளப்
பாங்கினைப் பொருத்துப் பொருள்மா றுபடும்.
அவ்வழி பயனும் மாறு பட்டிடும்!
என்றிந் நாள்நாம் உண்மை தெளிந்தனம்.
நனிசுவை யுடையது; நன்னலம் தருவது
மலர்த்தேன் ஆயினும் அனுபா னத்தால்
அந்தத் தேனும் நஞ்சாவ துண்டு!
அதுபோல்,
நன்றெனத் தெளிந்து நவிலும்நல் வுரையை
நஞ்செனக் கொண்டு சினம்கொள் வோரையும்
கண்டனம்! யாமறிந்து ஒன்றேனும் தீய
பொருள்படப் புகன்றதும் இல்லை; தீச்சொல்
எடுத்து மொழிதற் கெண்ணியதும் இல்லை!
எனினும் யாம்மொழிந் திட்ட சொற்களில்
யாதே னும்மனம் நின்று உறுத்துமேல்
சொலும்திறன் நமக்கிலை என்பதே உண்மை!
நெஞ்சிற் களங்கம் கொஞ்சமும் இல்லை
இதுமுக் காலும் உண்மை,—தேறுக!
இனியன தேர்ந்து எடுத்துச் சொலும்திறன்

இல்லை நமக்கென் பதுபுல னானது.
இனிவருங் காலத் தினில்அது கற்போம்!
நல்லெண்ணம் உடையீர், நயம்பட உரைப்பீர்!
நம்பிழை அறிந்து, நம் சொற்களை மறப்பீர்!
நமது நெஞ்சம் நன்குநீ ரறிவீர்!
இறந்தார் வாயின் இன்னாச் சொல்லினை
பொறுத்தல் நோன்பெனப் புகலும் தமிழ்மறை
உண்மை தேறி, உரைத்தது இகழ்வெனத்
தாம்நினைந் திட்ட சொற்களைப்
போற்றுதல் வேண்டா எனப்புகன் றனமே!

## 23. இயங்கிக் கொண்டே இருப்பேன்!

நான் தீர்மானித்து விட்டேன்!
கடந்தகாலப் பிழைகளை மறந்து விட்டேன்!
புதிய எதிர்காலத்துக்கே மூச்சும் பேச்சும்!
எதை முதலில் செய்ய வேண்டுமோ
அதை முதலில் செய்வேன்!
என்வேலையை விருப்புடன் செய்வேன்!
என்மன அமைதியை
யாரும் குலைக்க இடங்கொடேன்!
சுய கட்டுப்பாட்டை இழக்க மாட்டேன்!
என்னை வளர்த்துக் கொள்வதில்
காலம் அதிகம் செலவழிப்பேன்!
மற்றவர்களை விமர்சனம் செய்யேன்
அதற்கு எனக்கு நேரமும் இல்லை!
நல்லவண்ணம் சிந்திப்பேன்!
அச்சிந்தனைக்குச் செயலுருவம் தருவேன்.
நல்லதையே எதிர்பார்த்திருப்பேன்
மனிதர்களுக்கு நண்பனாக இருப்பேன்
நல்லதுக்குப் போராடுவேன்!
நல்லவர் பக்கத்தில் இருப்பேன்!
எப்போதும் உண்மையுடையவனாக விளங்குவேன்!
அன்பாக இருப்பேன்!
சந்திக்கும் ஏமாற்றங்களை யெல்லாம்
தூண்டு சக்தியாக ஏற்பேன்
இருள்மேகங்கள் சூழந்தாலும்
அம்மேகங்களுக் கிடையே ஒளியை நாடியே வாழ்வேன்!
சிரித்து மகிழ்ந்து வாழ்வேன்
எதிர்வரும் காலத்தை நோக்கியே வாழ்வேன்!
எப்போதும் இயங்கிக் கொண்டேயிருப்பேன்.
செய்ய வேண்டியவை என்ன?
தீர்மானம் இருக்கிறது!
அந்த முடிவுக்குக் கடின உழைப்பால்
செயலுருவம் கொடுப்பேன்!

## 24. இறைவா! உன்னுடன் வருவேன்!

புத்தாண்டுச் சிந்தனை! பிரார்த்தனை!
ஒவ்வொரு நாளையும் என்னுடைய நாளாக்குவேன்!
ஒருநாளைக் கூட வீணாக்கமாட்டேன்!
முன்னே பார்ப்பேன்! பின்னோக்குதல் இல்லை!
இறைவா! கலகங்களிலிருந்து மீட்டு எடு!
இறைவா! பழிக்குப் பழிவாங்கும்
புத்தியிலிருந்து விடுதலை செய்க!
இறைவா! வேண்டாம் மனக் காழ்ப்பும் கசப்பும்!
காப்பாற்றுக!
இறைவா! எல்லாருக்கும் நட்பாக இருக்கும்
அருளைப் புரிவாயாக!
இறைவா! என் பகைவனுக்கும்
அன்பாயிருக்கும் பண்பை அருளிச் செய்க!
இறைவா! என்றும் பொறுத்தாற்றும் இயல்பினை அருள்க!
இறைவா! பெருந்தன்மையை அருள்பாலித்திடுக!
இறைவா! எந்தத் தவற்றையும்
சடுதியில் உணரும் அறிவினைத் தருக!
இறைவா! தவறுகளை உணர்ந்த வேகத்திலேயே
திருத்தம் காண அருள் செய்க.
இறைவா! உதவும் இயல்பினை வழங்கியருள்க!
இறைவா! தீமையை வெறுக்கக் கற்றுக்கொடு!
இறைவா! தீமையிலிருந்து விலகி
நன்மையை நாடிச் செல்லும் புத்தியைக் கொடு!
இறைவா! மனிதனாக இருக்கும் வலிமையைக் கொடு!
இறைவா! வாழ்க்கைக்குரிய கூலியைத் தரும்
இயல்பு எது? காட்டுக!
இறைவா! வாழ்க்கைக் கணக்கைப் பார்ப்பது எப்போது?
இறைவா! குடிக் கூலியைத் தர உதவி செய்க!
இறைவா! நான் உன்னுடன் நடந்து வருவேன்
கடைசி வரையில் நடந்து வருவேன்!
அருள்பாலித்திடுக!

## 25. ஒரே ஒரு கேள்வி!

*நீ, புகழ் பெற்ற முதாதையர் அல்ல!*
*நீ, பிறவியில் வெற்றி பெற்றவனும் அல்ல!*
*நீ, பிறவியிலேயே எதையும் இழந்தவனும் அல்ல!*
*உன் வெற்றியையும் தோல்வியையும்*
*உனது விளையாட்டே முடிவு செய்கிறது!*
*உனது வாழ்க்கையின் போக்கு*
*உன்னுடைய பழகும் பாங்கில் இருக்கிறது!*
*உன்னுடைய தலைமுறைகளில் அல்ல!*
*ஒரு தலைமுறைகள் நிறத்தின் புள்ளிகளைக் கூட்டினால்*
*உனது பெற்றோர் உனக்குரிய இரத்தத்தைத் தரவில்லை!*
*உனது ஓட்டமே புள்ளிகளைக் கூட்டுகிறது!*
*உன்முன்னோர் எங்கிருந்தார்கள் என்பதல்ல கேள்வி!*
*நீ எப்படி இருக்கிறாய் என்பதே கேள்வி!*
*உன் முதாதையர் வாழ்நிலைக்கும்*
*உன்வாழ்நிலைக்கும் உள்ள இடைவெளியே*
*காலம் தந்த பரிசு! வரலாற்றுக்கு ஆக்கம்!*
*இந்தத் தலைமுறை*
*உன் முதாதையின் உடுப்பை உடுத்து*
*உலாவரும்படி உன்னைக் கட்டுப்படுத்தாது!*
*உனக்கு ஓர் உடுப்பை உன்முதாதையர்*
*விருப்புடன் தாரார்; இல்லவும் இல்லை!*
*உனது உடுப்பை நீ சம்பாதித்துக் கொள்!*
*உன்முன் உள்ள ஒரே ஒரு கேள்வி*
*"நீ என்ன செய்தாய்?" என்பதேயாம்!*
*அஃதன்றி*
*உன் பாட்டன் யார்? என்று கேட்க மாட்டார்கள்!*

## 26. அறிவறிந்த ஆள்வினை!

*பூவிரி உலகத்தில் அளப்பிலாப் பொருள்கள்!*
*எண்ணிய மக்களுக்காகப் பலப்பல பொருள்கள்!*
*இவையெல்லாம் கடவுளின் சித்தம்!*
*அழகானவை! பயன்பா டுடையவை!*
*உலகை உணர்வோனுக்கு*
*இது அழகும் வாழ்த்துரையுமாகும்!*
*நல்லவன் நல்லதைப் பெறுகிறான்!*
*தீயவன் தீமையையே பெறுகிறான்*
*உலகில் நன்றும் தீதும் இல்லை!*
*உலகைப் பயன்படுத்துவோர் பாங்கிலேயே*
*நன்றும் தீதும் இருக்கிறது!*
*இந்த உலகம் ஒரு கண்ணாடி!*
*ஆம்! சின்னஞ்சிறு உலகத்தின் இருப்பைக் காட்டும்*
*கண்ணாடி!*
*இந்த உலகில் நல்வாய்ப்புகளும் உண்டு!*
*ஆனால்,*
*நிலையிலாத் தன்மை இந்த உலகிற்கு உண்டு!*
*இந்த உலகு விதிமுறைகளினால் ஆனது!*
*கடவுள் வாழ்த்துகிறார்! யாரை?*
*தம்மைத் தாமே வாழ்த்திக் கொள்பவரை!*
*மரங்கள் வளர்கின்றன!*
*ஆனால், வீடுகள் வளர்வதில்லை!*
*உணவு, உடம்பை வளர்க்கிறது*
*ஆனால், உணவு மனிதனை உருவாக்குவதில்லை!*
*மனிதன் தன்னையே தான் உருவாக்கிக்*
*கொள்ளவேண்டும்!*
*கடவுளின் உதவி கிடைக்கும்*
*களிமண்ணை நனைத்துப் போடுவாரும் இல்லை!*
*செங்கற்கள் அதிட்டத்தால் படைக்கப்படுவதில்லை!*
*அயர்விலா அறிவறிந்த ஆள்வினையே*
*மனிதனைப் படைத்துப் பாரினில் உயர்த்தும்!*

## 27. சோலைகள்!

*பாரினைத் தழுவிப் பாதுகாக்கும் சோலைகளே!*
*மண்ணும் மண்ணில் வாழும் மானுடமும்*
*வாழ வகைசெயும் சோலைகளே வாழ்க!*
*எங்கும் பசுமையைக் காட்டி வாழ்க!*
*கண்களுக்குக் குளிர்ச்சியைத் தந்துமகிழ் விக்கிறாய்*
*சிந்தைக் கினிய செவியிற் கினிய*
*குயிலிசை கேட்க வைத்துமகிழ் வூட்டும்*
*சோலையே வாழ்க!*
*உயிர்ப்புக் குரிய உயரிய ஆக்சிஜனை*
*அள்ளித் தரும் சோலையே வாழ்க!*
*தின்னக் காய்களும் கனிக ளும்தரும்*
*பழமரச் சோலைகளே! வாழ்க! வாழ்க!*
*அசுத்தக் காற்றினைக் குடித்துப்பூ மண்டலத்தைத்*
*தூய்மை யாக்கிக் காக்கும்சோ லைகளே!*
*ஓ! ஓ! பசிய சோலைகளே!*
*உங்க ளுக்கொரு வேண்டுகோள்!*
*இப்புவி காக்கும் ஓசானில்*
*ஓட்டை விழுந்துள திந்த ஓட்டையை*
*அடைக்கும் ஆற்றல் நீங்கள் நிகழ்த்திடும்*
*விந்தை மிகுந்த ஒளிச்சேர்க் கைக்கே*
*உண்டு! ஓ! ஓ! உயர்சோ லைகளே!*
*ஒளிச்சேர்க் கையை விரைந்து செய்க!*
*பன்முறை செய்க! பார்காத் திடுகவே!*

## 28. தென்னை

ஓங்கி வளர்ந்து விரிந்துநிற் குமரம்;
வாழ்க்கைக்கு உறுதி பயக்கும் மரம்;
பெற்ற பிள்ளை சோறு போடாது!
வைத்த பிள்ளை சோறுபோடும் என்ற
புகழினைப் பெற்று விளங்கிடும் மரம்!
தாளில் கிடைத்த நீரினை உண்டு
தலையால் குளிர்நீர் தருகின் றமரம்!
நாளுக்கு ஒன்று உணவும் மருந்துமாம்!
சுவையூறும் தின்பண்டம்
எண்ணெய் ஆட்டினாலும் மணமிக்க எண்ணெய்!
கொழுப்புச் சத்துக் குறைவான எண்ணெய்!
குடியிருக்க வீடமைக்கப் பயன்படும் ஓலை!
உத்திரம் கைக ளாகவும் பயன்படும்;
உணர்ச்சி மிகுதியும் உடைய நன்மரம்;
எண்ணிச் சிலமரம் பேணி வளர்த்தால்
பெருஞ்செல்வம் எய்தலாம்!
இங்ஙனம் பெரும் பயனும் புகழும்
உடைய மரம் எது? அதுதான் தென்னை!
தென்னை வளர்ப்போம்! தேசத்தைக் காப்போம்!

## 29. விதியே! விதியே!

*விதியே! விதியே! உனக்குவமை இல்லை!*
*ஆயினும்,*
*உன்னுடைய விளம்பர முகவர்கள்*
*உன்னை ஆகா ஊஊ என்று*
*உன் வலிமையைப் பெரிது படுத்துகின்றனர்!*
*ஆயினும் நின்வலி*
*அயர்விலா உழைப்புடை யாரிடம் செல்லுமா?*
*நாளும் தாழ்விலா முயற்சியுடையார் மாட்டு*
*நின்வலி செல்லு படியா காது!*
*அயர்வும் சோர்வும் சோம்பலும் உன்முன்*
*தாளிட்டுப் பணியும்!*
*விதியே! விதியே! நீ இந்த நாட்டு*
*மக்களைக் கெடுத்தது, போதாதா?*
*இன்னமும் ஏன்திருவிளை யாடல்?*
*வளம் கொழிக்கும் நாட்டில் வறுமை?*
*உனக்குப் பயந்தோர் சிலர்*
*உழைப்புத் தேவியைச் சரணடை யாமல்*
*கண்ட கண்ட தெய்வங் களிடம்*
*சரணடை கின்றனர்!*
*விதியே, விதியே போ! போ!*
*வந்தால் ஆகூ ழாக வா!*
*இல்லை யெனில் வேண்டாம்!*
*துன்பங்களும் துயரங்களும்*
*சாதனைக் குரிய படிக்கற்கள் எனக்கொண்டேன்!*
*சுகம் காணும் விழைவு இல்லை!*
*அறிவறிந்த ஆளுமையே என் செல்வம்!*
*நாட்டிற்கு உழைத்தலே என்தவம்!*

## 30. புத்துயிர்ப்புப் பெறுக!

பாரெலாம் புகழும் வெற்றிகளைப் பெற்றிடுக
முதலில் உன்னை அறிந்து கொள்!
ஓயாது உழைத்திடல் மட்டும் போதாது
சிந்தனை செய்; சிந்தனைக்கெனப் பொழுதை ஒதுக்கீடு
செய்க
சிந்தனை தந்த தகுதிசால் முடிவுகளைப் பயன்படுத்து:
எண்ணி எண்ணித் திட்டங்கள் தீட்டுக.
ஐயப்படுக! ஆயினும் வெற்றியை நோக்கியே உழைத்திடுக.
உன்னையே உனது குறிக்கோளினால் அயர்விலாது
அர்ப்பணித்திடுக
இல்லாத பொழுது இல்லையென்று கூறும் துணிவினைப்
பெறுக.
நாளும் தவறுகளைத் திருத்திப் புத்துயிர்ப்புப் பெறுக.
இடறி விழும் பொழுதெல்லாம் எழுந்து
ஏற்றுத்துடன் பயணத்தைத் தொடங்குக
கடவுளைப் போற்று! மனிதனை நேசி!

## 31. அதிட்டமா?

உருளும் உலகில் அதிட்டங்களை நோக்கிக்
காத்திருத்தலினும்
உயர்வாழ்நிலை அளிக்கும் முயற்சியே பெரிது
அதிட்டமும் சிலபொழுது நல்லன சில செய்திடலாம்.
அதனினும், எண்ணிய திட்டமிட்ட முயற்சி பெரும்பயன்
பல அளித்திடும் என்பதறிக.
அதிட்டம் பயிர் வளர்க்குமா? வீடுதான் கட்டுமா!
தொழில்தான் செய்யுமா?
எழுதுகோல் கொண்டு எழுதுமா?
பட்டமும் பெறாது; பணமும் தராது.
ஆதலால், பயனுள்ள முயற்சிகளைச் செய்க
வெற்றி பொருந்திய வாழ்வாளன் அதிட்டத்தை விரும்பி
நோக்கான்
அதிட்டம் வாழ்க்கையில் பங்கேற்பதைப் பொறாள்
உன் விதிக்கு நீயே தலைவன்
நீயே அதிட்டங்களை அடக்கி ஆள்க.
உன் அதிட்டத்தை நீயே உருவாக்குக.
நீ செய்க உன் அதிட்டத்தை - உன் வாழ்வை!

## 32. கடமையே மூச்சு!

நான் முடிவாகத் தீர்மானித்து விட்டேன்
கடந்தகாலத் தவற்றுக்குக் கழிவிரக்கம் கொள்ளப் போவதில்லை.
எதிர்வரும் சாதனைகளுக்கே முயற்சிகள் அனைத்தும்
வாழ்வில் பல செய்ய எண்ணுகிறோம்:
ஆனாலும், முதன்மையான மக்கட் பணியை
முதலிடத்தில் வைத்து முழுமூச்சுடன்
தாழா முயற்சியை மேற்கொள்வோம்!
நான் மகிழ்வுடன் கடமையைச் செய்வேன்!
நான் என் அமைதியை இழக்கக் கூடிய எதையும்
வாழ்க்கையில் குறுக்கிட அனுமதியேன்!
என் வாழ்க்கை என் கட்டுப்பாட்டில் இருக்கும்
எனக்கு ஏது பொழுது அடுத்தவர்பற்றிப் பேச?
சிறந்ததையே நினைப்பேன்!
சிறந்ததற்கே எனது பணி!
சிறந்ததன் பயனும் அனைவருக்கும் உரிய தாக்குவேன்!
மனிதர்க்கு உற்ற நண்பனாக விளங்குவேன்!
நல்லதன்பக்கமே நிற்பேன்!
உண்மையே எனது வாழ்வு!
அன்பாக இருப்பேன்!
நான் சந்திக்கும் ஏமாற்றங்களை
ஊக்கந்தரும் உயிரூட்டங்களாகப் போற்றுவேன்!
கருமேகங்களிடையிலும் ஒளியைத் தேடுவேன்!
எப்போதும் புன்முறுவல் காட்டி
எதிர்காலத்தை எதிர்நோக்கி
எனது வாழ்க்கையை நகர்த்துவேன்!
எடுத்த முடிவு தோல்வி காணாவண்ணம்
உழன்றும் உழைப்பேன்!
கடமையே மூச்சு! பணியே வாழ்வு!

## 33. சுமைதாங்கி

"ஓ... மனிதனே!
உன்னைத் தாங்கி நிற்கிறது உன் கால்கள்!
பூமி உன்னையே தாங்கிக் கொண்டிருக்கிறது!
ஏன் தலைகுனிகிறாய்?
தலைகுனிந்து தாழ்ந்து நிற்கும் நிலையில்
முயன்று முடிப்பனவெல்லாம் தெரியாது.
நிலம்நோக்கிக் குனிந்த தலை விண்மீன்களைப் பார்த்தல்
கூடுமா?

துணிவு பெறுக! எழுந்து நின்றிடுக!
துணிவுடன் எழுந்து நடக்கத் தொடங்கியவுடன் –
அதிசயம்!
உனது சுமை நீ நினைத்தவாறு கனமாக இன்மையை
உணர்வாய்?

அதோ, பார் அண்டை வீட்டினை!
எத்தனை எத்தனையோ சிக்கல்கள்:
அவனால் வாழமுடிகிறது என்றால் உன்னால்
வாழமுடியாதா?

முடியும்! வாழமுடியும்! தேவை, துணிவு!
உனக்கு நீயே கழிவிரக்கப்படாதே!
கழிவிரக்கம் கொள்பவர் எவரும் வாழ்ந்திலர்
துணிவுடன் எழுந்துநில்! அறை கூவல்களை ஏற்றிடுக!
வரும் பொறுப்புக்களைப் பொறுமையாய் ஏற்றிடுக:
சுமைதாங்கியென வாழ்ந்து
வையகத்திற்கு உரிமையாகுக!

## 34. மானுடச் சிறப்பு

யாவையும் தந்து தண்ணளியுடன் காக்கும்
திண்மையுடைய நிலம், உழுதலால் – வெட்டுதலால்,
ஏற்படும் துன்புறுத்தலைத்
தாங்கியே காயும் கனியும் நல்கிடும் பெருமையைப்
பொறை என்றது குறள்!
இந்த உலகின் நியதியில் துன்பமும் ஒரு பகுதி.
யாவரும் இத்துன்ப நியதியின் வழிப்பட்டேயாதல்
வேண்டும்
துன்புறுவோரின் அனுபவமும் அதன் எதிர்விளைவும் ஒரு
படித்தன்று
சிலர், துன்பத்தினை ஏற்று உழப்பெறும் நிலம்போல
புடத்தில் வைத்த பொன்போல ஊனும் உயிரும் உணர்வும்
பக்குவமடையப் பெறுவர்;
சிலர், வன்கணாளர் ஆவர்.
செடியில் பூத்துக் குலுங்கும் மலர்க்கு, சிறுபனித் துளிகள்
அழகூட்டும்
அதுபோல,
உருத்து வந்தூட்டும் துன்பமும் வாழ்க்கைக்குப் பொலிவூட்டும்.
துன்புறுதல் இரக்கத்தைப் பெற்றுத்தரும்;
நன்றிப்பெருக்கினைத் தரும்
உண்மை உலகில் ஈர்த்து நிறுத்தும்.
நல்ல மனிதனுக்கு வருந்துதல் தேவை!
வருந்துதலின் வழியன்றி வலிமைக்கு ஏது வாயில்?
ஆதலின், வருந்துதலும் நனி சிறப்புடைய மகிழ்வே!
துக்கமும் நல்லன படைத்திடும் வளமார் வாயிலே!
துக்கம் – துயரம் கண்டு வருந்துவானேன்?
வாழ்வை இயக்கி இன்புறு நலன்களாக
மடைமாற்றம் செய்வதே மானுடச்சிறப்பு!

## 35. சோதனை — சாதனை!

*"மானுடம் தோன்றியநாள் தொட்டு,*
*வருத்தும் வலித் துன்பத்திலேயே வளர்ந்து வந்திருக்கிறது.*
*வலியும் நோயும்கூட உடற்பாதுகாப்புக்கே யாம்.*
*வலியும் நோவும் உணர்த்துவது என்ன?*
*எங்கு நடக்கிறாய்? எதன்மீது நடக்கிறாய்?*
*சிதறிக் கிடக்கும் கற்களின் குவியல் மீதா?*
*படர்ந்து வளரும் பசுமைப்புல் மீதா?*
*என்றுணர்த்திப் பாதுகாக்கத்தான்!*
*இயற்கை பரிவுடன் அருளிய பாதுகாப்பே*
*வருந்தும் வலியும் நோவும் என்பதறிக.*
*உயிர்ப்புடன் உலாவரும் வாழ்வில்*
*பெரும்பொருள் இழப்பு, – நட்டோர் பிரிதல்;*
*உள் நின்று உறவாடியோர் உறு பகையாதல்;*
*எடுத்துக் கொள்க என இயம்பா நிலையில்*
*இரவலர் வந்து வருத்தம் தருதல் – என்றன்ன*
*வருத்தும் சோதனை வந்துற்ற பொழுதெல்லாம்*
*கற்றவை பலப்பல! உற்ற ஞானமும் உண்டு!*
*சோதனைகளே வாயிலாகத் தெய்வசித்தம் பெற்றதுண்டு!*
*களிற்றடி மிதியும் நீற்றறை வெப்பமுமாய்*
*எடுத்தெழுத முடியாத் துயரம் அடைந்த*
*அப்பரடிகளும்,*
*செங்குருதி சொட்டச் சொட்டச் சிலுவையில் கிடந்து*
*துன்புற்ற*
*ஏசுபிரானும்*
*இந்த உலகை வென்றவர்கள் என்பதை ஓர்க.*
*மகிழ்தலுக்குரிய வித்தாம் சோதனையை ஏற்றிடுக!*

## 36. பழகும் பாங்கு!

"ஐயா மாரே! அம்மா மாரே!
தலைமயிரைப் பிய்த்துக் கொண்டு யோசிக்கிறீர்களே,
என்ன செய்தி? ஏன் இப்படி?
வளரும் குடும்பப் பிரச்சினைகளா?
அண்டை அயல் வீட்டார் தரும் பிரச்சினையா?
பிரச்சினைகள் தோன்றாதிருக்க யுத்தி உண்டு!
யுத்தி வெற்றி பெறப் புத்தி தேவை.
ஆம்! மற்றவர்களைப் புரிந்து கொள்!
பலரையும் புரிந்து கொண்டால் அப்பரிசே
பாங்கறிந்து பழகுதல் ஒருகலை.
புரிந்து கொள்வதிலும் அன்புகாட்டுவதிலும்
சோர்வு உள்ளவரை பிரச்சினைகள் ஓயா!
உறுந்துன்பங்களும் குறையா.
மக்களைப் புரிந்துகொள்! அன்பு காட்டு!
மக்களுடன் மக்களாக வாழ்வீர்!
குற்றங்கள் குறையும்! குணங்கள் பல தோன்றும்
புரிந்து செய்யா அன்பு கருங் கல்லிடை பயிர்போல
புரிந்தும் செய்யும் அன்பு நஞ்சையில் பயிர்போல,
புரிந்து கொள்க! பழகுக!"

கு-XIV-14.

## 37. உன்னையே நீ ஆள்!

*ஓ, மனிதனே...!*
*இந்தப் பரந்த உலகம் உன் வசப்பட வேண்டுமா?*
*அதற்கு ஒரே வழி, உன்னை நீ ஆளுதல்!*
*ஊரெலாம் அடக்கி ஆள ஆசைப்படுகிறாய்!*
*ஏன்? உன் நடையைக் கூட முறையாக ஆளுகிறாய்*
*ஆனால், உன்னை ஆண்டு கொள்வதில்லை!*
*உன்னை நீயே ஆண்டு கொள்கிறாயா?*
*பொறிகளின் மீது தனியரசு ஆணை செலுத்தும் நாளே*
*வாழும் நாள்!*
*நீ, நீயேயான பிறகு உன் காலம் உன்வசம்*
*காலந்தொறும் நிற்பாய்*
*அன்றே உனது வெற்றிகளும் தொடங்குகின்றன!*
*உனக்கு நீ உரிமையாகிவிடின்*
*உலகம் உன்னுடையது.*

# 38. நேர்வழி

*சாலையில் செல்ல வேண்டிய பேருந்து தடம் மாறுகிறது*
*சாலையில் விருப்பம்போல் நடைபோடுபவன் மீது*
*பேருந்து மோதல்! சாவு!*
*ஏன்? தலைவிதியா? இல்லை! இல்லை!*
*சாலை விதி தப்பிடின் சாவேதான் வரும்!*
*அதுபோல,*
*வாழ் வெனும் பயணம் நேரிய நல்வழியில் நடந்தால்*
*வளம் உண்டு; புகழ் உண்டு; அழிவே இல்லை!*
*வரலாறு சோதித்து உயர்த்திக் காட்டிய மாந்தர்*
*நீதியொடு பொருந்திய நேர்வழியில் வாழ்ந்தோரே யாவர்*
*சரியான வழியிருக்க சாமர்த்திய வழி ஏன்?*
*தவறே செய்யினும் பிறருக்குக் கேடு செய்யும்*
*பழிபடு செயல் செய்யற்க!*
*கடவுளிடம் முறையிட்டதற்கெல்லாம் விடை கிடைக்குமா?*
*விடை கிடைக்கும்!*
*எப்போது?*
*நல்லதுக்கு வாழ்வு கிடைத்தால் விடை கிடைக்கும்!*
*நன்மையே கடவுள் – சொர்க்கம்!*
*நன்னெறியதனில் செல்க! சேமமுற வாழ்க!*

## 39. நம்பிக்கை!

*நம்பிக்கையே வாழ்வின் எரிபொருள்*
*நம்பிக்கை வை!*
*நல்லன என்று நம்பு! உண்மையெனக் கருது!*
*நல்லனவற்றில் எதிர்பார்ப்புப் போதாது!*
*நம்பிக்கை என்ற தடத்தின் வழியில்தான்*
*நல்லன நடந்திடல் வேண்டும்!*
*ஐயங்கள் ஐராவதம் ஏறத்துணை செய்யா!*
*ஊசலாட்டங்கள் உலகை வென்றதில்லை!*
*நம்பிக்கையோடு எதிர்காலத்தை நோக்கு:*
*நரகமும் சொர்க்கம் ஆகும்:*
*நம்பிக்கையின்மை சொர்க்கத்தையும் நரகமாக்கும்!*
*நம்பிக்கையே வாழ்வு!*
*நம்புக! நம்புக!*

## 40. சுதந்திரம்!

*"சுதந்திரம்" பிறப்புரிமை!*
*சுதந்திரம் என்ன சுக்கா? மிளகா?*
*காசுகள் கொடுத்து வாங்க, கடைச்சரக்கா?*
*சுதந்திரம் என்பது மனிதனின் படைப்பு!*
*இம்மண்ணில் சுதந்திரமாக வாழ்வோரே*
*உரிமையுடைய மனிதராவர்*
*சிறைப்படுகிறான்! அவனே சிறப்படைகிறான்*
*தனக்குரிய சிறைக் கூடத்தைக் கட்டுபவனும் அவனே!*
*துரதிர்ஷ்டமாகச் சிறைப்படவும் செய்கிறான்!*
*ஏன்?*
*அவன் மனச்சாட்சியே சிறையை எழுப்புகிறது!*
*நிலவறைச் சிறையில் நித்தம் கிடந்துழல்கிறான்!*
*மனிதனின் மூச்சுக் காற்று, சுதந்திரம்:*
*அந்தச் சுதந்திரம் மனிதனின் மனச்சாட்சியில் இருக்கிறது!*
*"மனமே நரகத்தையும் சொர்க்கத்தையும்*
*படைத்தளிக்கிறது!" என்ற*
*மகாகவிக் கூற்று ஓர்க!*
*மனச்சாட்சியை நடு நிலையில் நிறுத்துக!*
*சார்புகளைக் கடிந்தொதுக்குக!*
*நல்லனவே எண்ணுக! எண்ணியனவே செய்க!*
*சுதந்திரக் காற்றைச் சுவாசிக்க ஒரேவழி*
*மனச் சாட்சியின் விடுதலையே!*

# 41. கயமை

*வையத்து வாழ்வீர்,*
*தற்காத்துக் கொள்ளுதல் வாழும் வழிகளில் ஒன்று!*
*ஆம்! நம்மை நோயினின்றும் சாவினின்றும்*
*காத்துக் கொள்ளும் பாங்கினைப் போலவே,*
*கொலையிற் கொடியராகிய கயவரிடத்திலிருந்தும்*
*காத்துக் கொள்ளல்*
*விழுமிய வாழ்வுக்குத் துணை!*
*கயவர் – யார்? எவர்?*
*இனியன காணார்; நல்லன கூறார்; இழிசொல்லே*
*சொல்லும் வாயினர்:*
*பழிச் சொல்லே பலகாலும் கூறிச் சிறுமை தூற்றிடுவர்;*
*வளரும் புகழினைக் கெடுப்பர்!*
*தூக்கில் தொங்கும் துன்பத்தினை ஏற்றிடும் அளவுக்கு –*
*மனங்கொள் அளவுக்குச் சிறுமை செய்வர்!*
*இனிப்புச் சுவை காட்டிக் கடுந்துன்பம் செய்வித்தலில்*
*இவருக்கு இணையில்லை!*
*வாழ்க்கையில் தோல்வியும், நிறைவேறா ஆசைகளும்*
*அரித்துத் தின்னும் இவர்கள்*
*மற்றவர்கள் வீழ்ச்சியே தாம் ஏறும் படியெனத் தேறி*
*வீழ்த்துவர்.*
*கயவர்க்கு நல்லதில் மகிழ்ச்சி இல்லை.*
*மற்றவர் துன்புறுதலிலேயே மகிழ்வுகாணும் தூர்த்தர்,*
*உயர்நிலை சார் மனிதர்களுக்குத் துன்பம் தரும் இக்கயவர்,*
*இருபுறமும் கூர்மையுடைய கட்டாரியென*
*ஒருசேரச் செவிக்கும் இதயத்திற்கும் ஏதம் செய்வர்!*
*குண நலத்திற் சிறந்தோர் இக்கயவரைக் கண்டிடின்*

*பதறிப் பறந்தே ஓடிடுவர்; இக்கடையரிடமிருந்தும்*
*ஒதுங்குவர்:*
*கயவரொடு மறந்தும் பழகார்; நட்புரிமையும் கொள்ளார்*
*நல்லோரிடம் நனி சிறந்து பழகுக!*
*வாழும் வழி அறிவீரே!*
*அடுத்தவனைத் தூற்றியவன்*
*உன்னைத் தூற்றவும் செய்வான்! துணிக!*

## 42. மனிதனின் விலை!

"ஓ... மனிதனே!
எல்லாம் உடையவனாகப் பறை சாற்றும் மனிதனே!
எங்கே, சொல்! இன்று உனக்கென்ன விலை!
இன்று உனக்கேது விலை? விலையை நீ கொணரவும் இல்லை
விலையைப் பெறும் முயற்சி செய்யாது
வாழ்நாளை நடிப்பில் நாளும் கழித்து வருகிறாய்!
ஏ... மனிதனே!
உடன் விலையைப் பெறு! வேலைக்காரனாகப் பெறும் விலையல்ல!
தோழனாக இருப்பதற்குரிய விலையுமல்ல.
நம்பிக்கைக்குரியவனாக விளங்குதலுக்குரிய விலையும் அல்ல.
இவையெல்லாம் வாழ்க்கையின் தேவை.
விலையே இல்லையாயினும் சிலர் அறிந்தும் அறியாமலும் விலை தந்து விடுவர்.
இந்த விலை நிலையானதல்ல.
உனக்கென உரிமை பூண்டதொரு விலை தேவை...
உடன் அந்த விலையை அடைக.
மனித உறவுகளில் வீழ்ச்சிகளை அனுமதிக்காதே!
வீழ்ச்சி தரும் உறவின் தொடக்க நிலை – தெரியுமா உனக்கு?
சடச்சடவென, பலநாள் பழகிய உறவும் வீழும்
நன்றி சொல்லலும் உயரிய அன்பில் உறுதியின்மையுமே
மனித உறவு நிலைகளின் வீழ்ச்சிக்கு வித்து!
நம்பிக்கைச் சிதறல்களிலேயே செகம் சிதறுகிறது.
விண்ணிலும் மண்ணிலும் பயனும் புகழும் பெறவேண்டுமா?
காட்டிக் கொடுக்காதே!
உண்மையாக இரு! பழகுநருக்கு உண்மையாக இரு!
உனக்குத் தேவையான ஒருவருக்கு நம்பிக்கையைத் தருக:
அதுவே, உன் விலை!

## 43. அனுபவ முத்திரை!

"காலந்தோறும் வயது வளர்கிறது.
வயது வளரும் சதுரப்பாட்டில்
சந்தர்ப்பங்கள் வந்தமைகின்றன.
சந்தர்ப்பங்கள் அனுபவங்களின் வாயில்கள்
சொந்த அனுபவமின்றி இளமை எதையும் ஏற்காது.
அனுபவங்கள் காலத்தொடு பட்டவை!
நாம் இளையோருக்குப் புத்திசாலித் தனத்தை விற்று
மூடி முத்திரை வைத்தல் இயலாது.
அல்லது நாமேதான் அனுபவத்தின் பயனைக்
குறைத்து மதிப்பிட முடியுமா?
அனுபவங்கள்தானே தத்துவங்களின் சோதனைகள்!
கொள்கைக் குன்றில் ஏறியபடிகள்!
மூத்தோரின் அனுபவங்களில் பல,
இளையோருக்கு,
நகைப்பிற்குரிய கூத்தாகப் புலப்படும்!
அனுபவத்தின் பழுத்த மனத்துச் செய்திகளுக்கு ஈடு
எதுவுமில்லை:
பழுத்த அனுபவக் களமாகக்
கடந்த வயதின் முதிர்ச்சியைக் காட்டு நரைக்கும் மாற்று
இல்லை!
முதிர்ந்த இந்த மூதறிவும் நரையும் கூடிடின்
இரட்டை ஆற்றல் கிடைக்கும்:
இவற்றுடன் ஆர்வமும் பொங்கி எழுந்தால்
காலம். செய்யாதது எது?

## 44. புன்னகை முகம்!

இயற்கையின் சிரிப்பை மலர்களில் அனுபவிக்கிறோம்!
மனிதர்களின் புன்சிரிப்பை முகத்தில் அனுபவிக்கிறோம்!
மனிதனைக் காட்டும் கண்ணாடி, - முகமே!
காலையில் முகத்தில் காணும் பொலிவு
மகிழ்வுகளில் தலையாயது!
நீ, தொடர்ந்து காண இயலாது!
மற்றவர் கண்டு இன்புறுவர்:
பகைவரையும் மாற்றும் நகைமுகம் எங்கே?
நீ, உன் பகைவரினும் முளைபலம் பெற்றிருக்கலாம்!
ஆயினும் என்?
உன் பகைவன் புன்முறுவல் பூத்து
நீ, சிடுசிடுத்த முகத்தைக் காட்டினால்
உன் பகைவனுக்குக் கதவுகள் திறந்திருக்கும்!
உனக்கோ கதவுகள் மூடியிருக்கும்!
சிரிப்பு, இயற்கையான பொழுதுபோக்கு!
சிரிப்பு - தருபவருக்கும் காண்பவருக்கும்
மகிழ்ச்சி நிறைந்த ஓய்வு!
நல்லவண்ணம் நகைமுகம் காட்டி வாழ்பவன்
நண்பர்களை ஆக்கிக் கொள்வான்!
இன்புறு நலன்களுடன் நனிசிறந்து வாழ்வான்!
பலருக்கும் காப்பும் மகிழ்வுமளிப்பான்!
புன்முறுவல் பூத்தமுகம்
இப்புவியில் செய்யாதது எது?

## 45. அழகுக் களஞ்சியம்!

ஆழிசூழ் உலகின் அழகு அளப்பில!
ஓங்கி உயர்ந்த மலைகள்!
உறங்கிக் கிடக்கும் பள்ளத் தாக்குகள்!
சுற்றிச் சுழன்றும் வரும் சமவெளிகள்!
இந்த உலகை வலம் வரும் ஆறுகள்!
நீலத் திரைக்கடல்கள்! நீல வான்!
உருக்கிவார்த்த வெள்ளிக் கட்டியென விளங்கித்
தண்ணிலவு பொழியும் நிலா!
கண்களைச் சிமிட்டிடும் விண்மீன்கள்!
பசும்புற்கள்! வண்ண வண்ணப் பூக்கள்!
சித்திரத்தில் சிறந்த மரங்கள்!
பார்வைக்கு இனிய விலங்குகள்!
கருணை நிறைந்த பறவைகள்!
எவ்வளவு அழகு!
அழகின் களஞ்சியம் இந்த உலகம்!
அழகான இந்த உலகில் உள்ள ஒரே ஒரு ஆபாசம்
மனிதனின் நடத்தையே!
மனிதனும் இயற்கையே!
மனிதன் இயற்கையின் அழகைத் தவறாகப்
பயன்படுத்துகிறான்!
மனிதரில் சிலர் வாழ்வாங்கு வாழ்கின்றனர்.
மனிதன் தன்னையே பிரதிபலிக்கும்
ஒரு கண்ணாடி!

## 46. உலகத்து இயற்கை!

*மாந்தன் மன்பதை உலகை மதிப்பிடுகிறான்*
*அவன்தன் மதிப்பீட்டுக்கு அடிப்படை அவன் மனமே!*
*ஊரவர் பேசுவது அவரவர் மனத்துள செய்திகளே!*
*அண்டை வீட்டார் பயங்கரமானவர்கள் என்று*
*இயம்புநர் ஒருபுறம்!*
*ஐயோ, பாவம்! அண்டை வீட்டார்*
*அனுதாபப்படத் தக்கவர் என்பர் சிலர்!*
*அடுத்த வீட்டிலா? அதை ஏன் கேட்கிறீர்கள்?*
*சுயநலப் பிண்டங்கள் என்று கூறிப் பிதற்றுவர் சிலர்.*
*நல்லவர் ஒருவரை அணுகினால்*
*எங்கும் நல்லவரே வாழ்கின்றனர், எவரும் நல்லவரே என்பார்.*

*உலகம் நந்தம் உணர்வின் பிரதிபலிப்பே!*
*எங்கும் நல்லவர் இல்லை என்றான் துரியோதனன்!*
*எல்லாரும் நல்லவரே என்றான் தருமபுத்திரன்!*
*இதுவே, உலகத்து இயற்கை!*

## 47. மனோ நிலை!

*தாயின் பாலைச் சுவைத்து மகிழும் மழலை*
*தாயின் மார்பகம் இனிய சர்க்கரை வைத்திருக்கிறது*
*என்றெண்ணுதல் இயற்கை!*
*ஆனால்,*
*தாயின் மார்பகத்தில் சர்க்கரை ஏது?*
*மழலையின் மகிழ்வில் மகிழும்*
*தாயின் பரிவே இனிப்புச் சர்க்கரை;*
*இனிமையின் இருப்பிடம் எது?*
*துன்பத்தின் இருப்பிடம் எது?*
*மனோ நிலைகளின் படைப்பே இன்பமும் துன்பமும்!*
*மனோ நிலைகள் இந்த உலகினைச் சார்ந்திருக்கின்றன*
*பயனுள்ள வாழ்வினை நடாத்த*
*ஆளுமையும் நகைமுகமும் கூடிய*
*மனிதனாக வளர்க!*
*உன்றன் மனோநிலைகளை அமைவுற நிறுத்துக!*
*இனிமையும் தூய்மையும் நிறைந்த*
*மலரென ஆக்குக, நின்மனத்தினை!*

## 48. வாழும் நெறி

வரலாறு கற்றுத் தரும் பாடம் ஒன்றுண்டு.
அளவில் கூடிய தீமையுடன் கூடிக் குலவினால்
குறைவான தீமையே புலப்படுகிறது.
என்னெனில் மனத்தின் மாயை?
பலரும் ஏற்றதால் சில தீமைகள் தேசிய மயமாயிற்று!
அதனால்–தீமையும் இல்லை என்ற கருத்து உருவாகியதால்
மரியாதையும் தோன்றலாயிற்று
இன்றைய கையூட்டினைப் போல!
அசுத்தம் – அழகு, நன்மை – தீமை ஆகியவை
பழக்கத்தால் நிர்ணயிக்கப்படுகின்றன
நாம் தீமையை என்று மாற்றினோம்!
சிலபடிகள் இறக்கி வைத்திருப்போம் – அவ்வளவுதான்!
நமது சுற்றுச் சூழல், நாம் ஏற்றொழுகிய தீமையையே
ஏற்று நடக்குமாறு செய்திடும் ஆற்றல் வாய்ந்தது
முடிவாக நடப்பதென்ன?
எந்தத் தீமையை வெறுத்து ஒதுக்கினோமோ
அதே தீமையை ஏற்று நடக்கும் நிலைமைக்கு
வந்திடுவோம்!

நாம் அத்தீமையை எடுத்துக் கொள்வதில்
புதுமைப் பொலிவையுண்டாக்கிச் சமரசம் காண்கிறோம்!
ஆயினும்,
மரணப்படியில் காலூன்றி விட்டோம் என்பது நினைக.
தீமையுடன் கூட்டு; தீமையை மன்னித்துத் தீமையைத்
தழுவி வாழ்தல்

தீமையைச் சார்ந்து
அப்பழக்கமே பழக்கமாகக் கொண்டு வாழ்தல்
இயற்கையாகி விடும்.

ஆதலால்,
தீயனவற்றை வெறுத்து ஒதுக்குக:
நல்லனவற்றை விடாது சிக்கெனப் பற்றிடுக
இதுவே வாழும் நெறி.

## 49. எது புகழ்?

ஓ... மனிதனே!
உன் நிழல் உன்னைத் தொடர்ந்து வரும்படி செய்ய
முயற்சி செய்கிறாயா?
இம்முயற்சி வீண்!
நட கதிரவனை நோக்கி நட!
நடந்து கொண்டே இரு! நின்நிழல் உன்னடியில்
தொடரும்!
புகழினை விரும்பி ஓடாதே!
புகழினை விரும்பித் தேடினால் நடிக்க வேண்டியிருக்கும்!
ஆனால்,
புகழுக்குரிய தகுதியோ இல்லை!
உண்மையும் பணிவும் புகழுக்குரிய பண்புகள்!
தன்னலமின்மை தரணியில் புகழினைச் சேர்க்கும்!
உன்னையே, நீ நினைந்து புகழினைப் படைத்துக்
கொள்ளாதே!
அழகும் மணமும் விரிக்கும் மலரனையது புகழ்!
புகழ், தேடினால் கிடைக்காது!
தேடிப் பெறுவது புகழன்று!
மானுடத்தை விரும்பு! உண்மையாக விரும்பு!
அடக்கமாக அணைத்து அவர்தம் நலனுக்கு முயலுக!
இம்மண் சிறக்கும்!

## 50. ஒத்துணர்வு!

ஒத்துணர்தல், இரக்க உணர்வு இவை இரண்டும்
இந்த வையகத்தின் உயிர்ப்புக்களாகும்!
அடிநிலை மனத்தின் செயல், ஒத்துணர்தல்!
விரிந்த இதயத்தின் செயற்பாடு ஒத்துணர்தல்!
அடுத்தவர் தேவைகளை உணர்தல்
ஒத்துணர்தலின் விழுப்பம்!
அடுத்தவர் அல்லால் எதுவாயினும் துடைப்பது
ஒற்றுணர்வாரின் உயரிய செயல்பாடு
மனித குலத்தின் வாழ்வுக்கு இரக்கம் தேவை!
எல்லாரும் ஒத்த அறிவு பெறுக!
உருவத்தில் பலரேயாயினும் இதயம் ஒன்று பெறுக!
அன்பு காட்டுக! இரக்கம் காட்டுக!
கருணைநலமும் நயந்து காட்டுக!
வையகம் வளர வழி, ஒத்துணர்தலேயாம்!

## 51. மனித மதிப்பீடு!

ஓ... மனிதனே!
நீ யார்? உனக்குரிய மதிப்பென்ன?
ஓகோ, உன் மதிப்பீடா?
உனக்கு நீயே செய்து கொண்ட மதிப்பீடா?
"சகல கலாவல்லவன்", "நினைத்ததை முடிப்பவன்"
இது உன் மதிப்பீடா?
நாள்தோறும் முகம் பார்க்கும் கண்ணாடி
இவை உனக்கு உண்டு என்று ஒத்துக் கொள்கிறதா?
இல்லை! இல்லை!
கண்ணாடி காட்டுவதை நாம் நம்ப விரும்பவில்லை!
மதிப்பீடு யார் செய்வது?
உன்னோடு வாழ்கிறவர்கள் உன்னை மதிப்பிட வேண்டும்
உன்காலத் தலைமுறை,
உன்னைத் தேவையென்று விரும்பி ஏற்க வேண்டும்.
நீ யார்? உன்னை ஏற்று அங்கீகரிப்பவர் யார்?
உன் உறவினர்: உன்னைச் சுற்றித் திரியும்
பொறுக்கித் தின்னிகள்!
இதற்கா இவ்வளவு தம்பட்டம்!
புவியை இயக்கும் புண்ணியர்
உன்னை ஏற்கும் நாளே, நீ வாழும் நாள்!

ஞ-XIV-15.

## 52. தாமதம்!

ஒத்திப்போடும் கலையால் விளைவது தாமதம்!
தாமதத்தால் விளைந்தது என்ன?
உணர்ந்தது உண்டா?
தாமதத்தின் விளைவால் இழந்த இழப்புக்களை
எண்ணிப்பார்த்தது உண்டா?
தாமதம் தங்கியுள்ள இடத்தில்
எதிர்காலம் என்ற ஒன்று இல்லை என்பதை
ஓர்ந்து உணர்ந்தது உண்டா?
ஏன்?
தாமதத்தில் காலநியதிகளே இல்லை!
சென்ற காலமும் இல்லை; நிகழ்காலமும் இல்லை!
எண்ணுக! எண்ணித் தெளிக!
இன்று, வார்ப்புத் தங்கமென வாய்த்தநாள்
நாளையோ – வாய்த்தால் வெள்ளி
நாளை மறுநாள் பாசம் பிடித்துப்
பல்லிளிக்கும் பித்தளை!
அதற் கப்பால் இயலாமைதான்! இயலாமையேதான்!
இன்று நேற்றாக மாற நெடிது நாழிகையாகாது!
இன்று மனிதன் நிற்கும் களிமண்
தூசியாகிப் புழுதியாவது இயற்கை!
தேறுக! தெளிக!
எதையும் ஒத்திப் போடாதீர்!

## 53. தேடும் மனிதனாய் நீயே ஆகுக!

*"அன்றொரு நாள்!"*
*ஏசுபிறப்பதற்கு ஈரிரண்டு நூறு ஆண்டுகளுக்கு முன்*
*டயாஜிக்ஸ் என்ற அறிஞன்*
*நகர்ப்புறத்துத் தெருக்கோடியில்*
*பட்டப் பகலில் கைவிளக்குக் கொண்டு*
*எதையோ தேடினான்! தேடினான்!*
*என்ன தேடுகிறாய் என்று கேட்டனர் – இதைப்*
*பார்த்தவர்கள்!*
*"ஒரு மனிதனைத் தேடுகிறேன்!" என்றான் அறிஞன்:*
*அன்று தேடப்பட்ட மனிதன், இன்னமும் அகப்படவில்லை:*
*மனிதனைத் தேடும் முயற்சி தொடர்கிறது!*
*ஆயினும் என்? மனிதன் காணப்பட்டானில்லை!*
*உலகில் பலகோடிபேர் வாழ்ந்தும்*
*ஒரு மனிதனைக் காணோம்!*
*உடல் உருத்துப் பருத்து வளர்ந்து நின்றாலும்*
*ஆன்மாவில் முதிர்ச்சி வேண்டாமா?*
*மனிதம் – மனிதப்பண்புகள்,*
*குவலயத்தை ஈர்த்தணைத்திடும் குணங்கள்,*
*கொள்கையில் உறுதிப்பாடு, பயனீட்டத்திற்குப்*
*பலியாகாமை,*
*திண்ணிய நெஞ்சம், கொண்ட குறிக்கோளில் உறுதி,*
*வாழ்நாள் முழுதும்*
*அன்பின் சார்பில் இயங்கும் பெருவாழ்வு –*
*உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை*
*நன்மை என்று விளங்கும் நலம் சார்ந்த பெருவாழ்வு*
*யாரிடம் உண்டோ, – அவன்*
*அந்த ஒரு மனிதன் எங்கிருக்கிறான்?*
*ஏன் தேடுகிறீர்கள்?*
*தேடும் முயற்சியிலும் வாழும் முயற்சி எளிதல்லவா?*
*ஏன்? நீயே அந்த ஒரு மனிதனாக*
*வாழ்ந்திடக் கூடாதா?*

## 54. கவலை விடு!

ஓ.... மனிதனே!
கன்னத்தில் கைவைத்துக் கலக்கத்துடன் உட்கார்ந்து
உருக்குலையும் மனிதனே!
என்ன வந்தது? என்ன கவலை உனக்கு?
ஏழரையாட்டைச் சனி வரப்போகிறதா?
அந்தச் சனியன் பல துன்பச் சுமைகளைத் தருவான் என்று
இப்போதே நம்பிக் கவலைப்படுகிறாயா?
துன்பக் கற்பனை செய்கிறாயா?
ஓ... மனிதனே!
அன்றாடம் ஆயிரம் ஆயிரம் துன்பங்களைச் சந்திக்கிறாய்!
இது போதாதா?
இனிவரும் துன்பம் பற்றியும் எண்ணி ஏங்குவானேன்?
எதையும் ஏற்றுத் தீர்வு காணலாம்!
ஆயினும்,
கற்பனைத் துன்பத்தின் முன் என்ன செய்ய இயலும்?
நிழலுடன் போராடி எய்ப்பதுதான் மிச்சம்!
வாழ்பவருக்கு ஒருபோதும் துன்பம் வராது!
வந்ததூஉம் இல்லை
வாழ்க்கை வளமாக,
துன்பங்கள் தொல்லைகள் பற்றிக்
கற்பனை செய்யாது வாழ்க!

## 55. சிரிப்பே மருந்து

*“சிரித்து மகிழ்தலுக்குரிய வாய்ப்பு வந்துழி*
*இழத்தல் ஆகாது.*
*சிரிப்பு, மனிதனை அறிமுகப்படுத்தும் சாதனம்!*
*சிரிப்பு, மனித உலக நோய்களின் மீது*
*கொள்ளும் வெற்றியாகும்.*
*உனக்கு நீயே சிரித்துக் கொள்ள முடிந்தால்*
*அது உன் இயலாமையை வெற்றி கொள்ளும்*
*சிரிப்பாகும்!*
*சிரிப்பு, ஒரு நல்ல மருந்து!*
*வாழ்க்கையின் களைப்பு நீக்கும் மருந்து*
*சிரிப்பேயாகும்!*
*சிரிப்பு, முறுக்கேறிய நரம்புகளைத் தளர்த்திவிட்டு*
*வலிமையைத் தந்து கடமைகளைச் செய்ய*
*உறுதுணையாய் அமைவது ஒப்பற்ற சிரிப்பேயாம்!*
*மருந்துகள் பலவற்றிலும் சிறந்த மருந்து*
*சிரித்து மகிழ்தலேயாம்!*
*மருந்து நோய் நீக்கும்!*
*சிரிப்போ இதயத்தின் நோய் நீக்கும் மருந்து!*
*மகிழ்ச்சியும் கூட!*
*அலுப்புக்களிலிருந்து காப்பதும்*
*சிந்தைக்கு இதமளிக்கும் சிரிப்பே!*

## 56. விழித்தெழு!

*"அருமை நண்பனே!"*
*எழு! விழித்தெழு!*
*நல்வாழ்வு வேண்டுமா?*
*உடன் எழு; விழித்து எழு!*
*விழிப்புணர்வுடன் இந்த உலகைக் காண்க! கேட்க!*
*நல்லவை கேட்க!*
*இங்கும் அங்கும் பயணம் செய்க!*
*பயன்பல அடைவாய்!*
*எந்த மனிதனும் சோம்பலால் உயர்வை அடைந்ததில்லை.*
*அடைய முடியாது!*
*சோம்பேறி நல்வாய்ப்புக்களுக்கு உறங்குவான்!*
*உறங்கிக் கொண்டே இருப்பான்!*
*அவன் திறமைகளும் தூங்கும்:*
*தூங்கும் பொழுது விழுகிறான்!*
*நிலாவும் தூங்குகிறது! சில பொழுது தூங்குகிறது!*
*ஆனால்,*
*நிலா எழுந்து உலா வந்தால்*
*பெரும்பயன் உண்டு! ஆதலால், விழித்தெழு!*
*வெற்றி பொருந்திய வாழ்க்கையை நடத்த*
*நனி உதவி செய்யும் விழிப்புணர்வு!*
*ஞாலத்தில் சிறந்த துணை விழிப்புணர்வு!*
*விழிப்புணர்வுடன் இரு! உயர் மதிப்புடன் வாழ்!*

## 57. பொறுப்பும் அலட்டலும்!

அருமை நண்பனே!
பொறுப்பேற்றுக் கொள்!
ஆனால், அலட்டிக் கொள்ளாதே!
பணிகளில் ஊக்கம் மிகுதியும் காட்டு!
பொறுப்பேற்றுக் கொண்டவற்றை
அக்கறையுடன் ஆர்வத்துடன் செய்க!
ஆயினும், இயன்றவரை அமைதியாக இரு!
சிக்கல்கள் தீர்வுக்கு என்றும்
பரபரப்பும் பதற்ற நிலையும் உதவியதில்லை!
பரபரப்பும் பதற்றமும்
மேலும் மேலும் சிக்கல்களைத் தோற்றுவிக்கும்!
அலட்டிக் கொள்ளுதல் மூளையில் அமுக்கத்தை
உருவாக்கும்!
மனத்தின் கண் மூடிப்போகும்!
அலட்டிக் கொள்ளுதலிலும் துன்பம் யாதுளது?
வேற்றுமைகள் சிக்கல்களைக் காண்பதில்லை!
அலட்டலே சிக்கல்களைப் பிணைக்கின்றன!
ஆனால்,
பொறுப்பும் அலட்டலும் ஒருசேரப் பயணம் செய்யா.
அதா அன்று,
உன் பணியைத் திறமையுடன் செய்க.
நம்பிக்கையோடு இரு! கடவுளிடம் அடைக்கலம் புகுக!
எவ்வளவு முடியுமோ அவ்வளவும் செய்க!
ஆனால், எதையும் அலுப்புடன் செய்யாதே!
அழியா மனிதன் என்றும் செய்வான்!
நேற்றுச் செய்ததிலும் கூடுதலாகவே செய்வான்!

## 58. அழியா மானுடம்!

*"மானுடம் அழியாது! அழியாது!"*
*மானுடம் அழியாதென்னும் உணர்வே!*
*அடுத்துவரும் வாழ்க்கைக்குரிய நம்பிக்கைக்குச்*
*சுவையூட்டுகிறது!*
*இன்று, வீழ்நாள் படாமை நன்றாற்றி*
*வாழ்தல் வேண்டும் என்று விரும்பு!*
*நாளை வரும் வாழ்நாளில் நல்லவண்ணம் வாழ்ந்திடலாம்!*
*மீண்டும் ஒருவாழ்வு இல்லையெனில்*
*இந்த வாழ்வு எதற்காக?*
*காய் கனிகளும் கால் நடைகளும்*
*மானுடத்திற்குப் பயன்படும் நிலையோடு வாழ்ந்து*
*முடிகின்றன.*
*எல்லா இயற்கையும் மறைகின்றன.*
*கால்நடைகள் பிறக்கின்றன; சாகின்றன!*
*மானுடம் தோன்றி அழிவதா?*
*மானுடத்திற்கு அழிவற்ற நிலை இல்லையேல்*
*இயற்கையின் கடின உழைப்பிற்கு*
*எல்லையற்ற பயன் கிடைக்காது!*
*உலகத் திட்டம் நம்பிக்கையை இழந்து*
*மாபெரும் தோல்வியாகி விடும்.*
*ஆதலால், மானுடம் அழிவில்லாதது!*
*இன்று மட்டும் அல்ல; என்றும் அழிவில்லாதது.*
*அழிவிலாத மானுடம் வாழ்க வென்று*
*கூறுவோம்!*

## 59. உணர்ச்சித் தூண்டல்!

*மனிதர்கள் பலவீனங்களில் சமமானவர்களே!*
*மனிதர்களிடமெல்லாம் நீக்கமற இருப்பது பலவீனமே!*
*உணர்ச்சித் தூண்டல்களுக்கு இரையாகாத*
*இறையாண்மை உடையார் எவர்?*
*ஆயினும்*
*உணர்ச்சித் தூண்டுதல்களே*
*பலத்தையும் குணத்தையும் தருகின்றன!*
*உணர்ச்சித் தூண்டல்கள் இல்லையேல்*
*உலகேது? உலகத்தின் இயக்கமேது?*
*உணர்ச்சித் தூண்டுதல்களே மனிதனை*
*நற்குணங்கள் உடையவனாக்கிப் புடம் போடுகிறது!*
*தரத்தில் உயர்த்துகிறது.*
*உணர்ச்சித் தூண்டல்களை வெற்றி கொண்டு*
*விளங்குபவனே போராளி!*
*வெற்றி கொள் போராளி!*
*தன்னையே வெற்றி கொண்ட*
*தரணி புகழ் தகைமையாளன்!*

## 60. காலம்

*காலம்தான் சிக்கல்களுக்குத்*
*திருத்தமான தீர்வுகள் காணும்!*
*இன்று தரும் தீர்வு மறுக்கப் படலாம்!*
*ஆனால், நாளை வேறுநிலை....*
*காலம் மாறுகிறது; காலண்டர்கள் மாறுகின்றன.*
*சந்தர்ப்ப சூழ்நிலைகளை மாற்றுகின்றன.*
*குருதி கொட்டும் புண்ணுக்குக் காலம் ஒருமருந்து!*
*காலமே, முறிந்து போன நட்புகளை இணைக்கும் தூதுவன்!*
*காலமே, நலம் சேர்க்கும் மருந்து!*
*காலமே, இழப்பை ஈட்டமாக்கும் சாதனம்!*
*காலம், கண்ணீரை வற்றச் செய்யும்!*
*காலம், நரம்பு மண்டலத்தை நிலைத்தன்மை*
*உடையதாக்கும்!*
*காலமே, தைரியத்தைப் புதுப்பிக்கும்!*
*கூர்ந்து கவனி!*
*குளிர்காலம் கடக்கிறது! வசந்தம் வருகிறது.*
*பருவகால மாற்றங்கள் வழி காலண்டர்கள் தரும்*
*படிப்பினையை ஓர்க!*
*காலம் உனக்கென வைத்திருக்கும் திருப்புமையம்*
*உன்னளவில் உண்டு – நீட்டிக்க!*

# 61. சிந்தனை செய்க!

ஒருநாள் ஒருவன் மூடுபனியின் மீது
அதற்கென்று மனம் என்ற ஒன்று இல்லாதிருந்தான்!
விழிப்புணர்வுடன் தெரிந்து கொள்!
உன்னைச் சுற்றி என்ன நடக்கிறது!
உன்னால் புரிந்து கொள்ள முடியவில்லையே!
தேடு! ஆழமாகத் தேடிக் கண்டுபிடி!
நெடிய நோக்குடன் பார்!
அயலவருடைய ஆலோசனையைப் பெறு!
சிந்தனை செய்க! சிந்தனை செய்க!
தொகுத்தும் வகுத்தும் ஆய்வு செய்க!
அறிவுபூர்வ மான முடிவுகளைப் பெறுவாய்!
சிந்தையில் தெளிவு மனிதனை மனிதனாக்குகிறது!
தெளிவு, நல்லவனை மேலும் நல்லவனாக்குகிறது!
பாதுகாப்புக்கு உத்தரவாதம் தருகிறது.
தவறாகப் புரிந்து கொள்ளுதல் குற்றமல்ல
புரிந்து கொள்ளாமலே இருப்பதை விட
ஒருங்கிணைந்த சிந்தனைப்பார்வை தேவை:
பொருள்களை அறிக! நிகழ்வுகளை உணர்க!
தெரிந்து கொள்ளுதல் செயலுக்கு முதற்படி
தெரிந்து கொண்டதைவிட எதுவும் செய்ய இயலாது.
அறிவுச் சார்பிலாத முடிவுகள்
குருட்டுத் தனமான ஊகங்களே!
எதற்கும் ஆகாதவை
அறிந்தவைகளிலிருந்தே காரணங்கள் தோன்றுகின்றன
அறிக! தெளிக!
விழிப்புணர்வுடன் அறிக! செயற்படுக!

## 62. நாடகமேடை

இது ஒரு நாடக உலகம்!
அவரவர் வேடப் பொருத்தப்படி நடிக்க வேண்டும்!
அப்போதுதான்,
ஆரவாரமான வரவேற்புக் கிடைக்கும்!
நாடகம் பார்ப்பவர்கள் பலநாள்களுக்கு
முட்டாள்களாக இருப்பதில்லை!
ஆதலால், இன்றோ நாளையோ
போலிகள் அரங்கிலிருந்து அகற்றப் படுவர்!
வாழ்வெனும் நாடகம்
நெறிமுறைகளைக் கடந்தது;
நாடகமேடைப் புனைவுகளை அப்பட்டமாகக் கடந்த
உண்மையானது.
நாடக அரங்கின் பார்வையாளர்களான
நியாய இதயம் கொண்டவர்கள் நிலையில்
வாழ்வெனும் நாடகத்தில்
நடிப்பவர்களுக்கு அங்கீகாரம் இல்லை
நீ எப்படி இருக்கிறாய்! அப்படியே இரு!
மற்றவர்களைப் போல் நடிக்காதே!
வாழ்வெனும் நாடக மேடை
உண்மையையே ஏற்கிறது!

## 63. செவிச் செல்வம்!

*செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம்!*
*மதிப்புயர் வுடையது அது!*
*மற்றவர்சொல் கேட்பதும்*
*மற்றவர் வாயுரை கேட்பதுமே உயர்வு!*
*அயலவர் கூறும் செய்திகளைக் கேட்பதே*
*நண்புடையார் பலரைப் பெறுதலுக்குரிய வழி!*
*அழுது வடியும் முகத்துடன்*
*அடைபட்ட செவியுடன் கேட்டால்*
*அயலவரை வெற்றிகாண இயலாது!*
*பேசும் நாவினும் கேட்கும் காதுகள்*
*நண்பர்கள் பலரைத் தரும்!*
*சில இடங்களில் நீ கேள்!*
*பல இடங்களில் நீ கேட்க வேண்டிய*
*கட்டாயமும் தோன்றும்!*
*கேட்கும் பழக்கம் தரும் பயன்கள் பலப்பல!*
*எல்லாரும் பாராட்டுவர்!*
*செல்லா இடத்தும் செல்லும் செல்வாக்கு!*
*இதமான அன்பும் ஞானமும்*
*இன்னபிறவும் நல்குவதால்*
*செவிச் செல்வம் செல்வமே!*
*மற்றவர்க்கு உன் காதைக் கொடு!*
*அவர்கள் ஈடாக இதயத்தைத் தருவார்கள்!*
*புகழோடு கூடிய செல்வம் தரும், கேட்டல்!*
*அறிவும் விரிவடையும்!*
*கேட்கவும், பேசுவதைக் குறை!*
*கேட்கப் பழகுக!*

## 64. தனிமை வேண்டாம்!

*தனிமை, வெறுமையானது!*
*தனிமை, துன்பமானது!*
*தனிமை, வாழ்தலுக்கு இசைந்த பொருத்தப்பாடு இல்லை!*
*நெறிமுறை உணர்த்தும் நிலையும் இல்லை!*
*எச்சூழ்நிலையிலும் தனிமையை அனுமதித்து*
*நாளை ஏமாற்றுதல் ஆகாது!*
*தனிமையைக் கடக்க வழி என்ன?*
*நீ, உன்னை நேசி!*
*தனிமையிலும் மகிழ்வாக இருப்பாய்!*
*உன் வாழ்க்கை வரைபடத்தை வரை!*
*அவ் வரை படத்தை உற்றுப்பார்!*
*நீ, உன் வாழ்க்கை வரை படத்தை*
*உற்று நோக்கும் போது*
*நீ, செய்ய வேண்டுவன சில இருப்பதை அறிவாய்!*
*அறிந்ததைச் செய்!*
*நல்லபுத்தகங்களை நல்ல கூட்டாளிகளாகப் பெறுக!*
*நீயே, உன் சுயநலச் சுவர்களை*
*இடித்துத் தள்ளு!*
*எங்கெங்கு எப்போதெல்லாம்*
*உன் இருப்பு தேவையோ*
*அங்கெல்லாம் தவறாமல் இரு!*
*நட்பு சார்ந்த கூட்டமைவில்*
*இதயத்தை அன்பால் நிரப்பு!*
*தனிமை பறந்தே போகும்!*

## 65. பொறுத்தாற்றுக!

கால்கள் இரண்டும் இல்லாத ஒருவர்
ஓடும் பயிற்சி கற்றுத்தர வந்தால்
என்ன நடக்கும்?
பொறுத்துக் கொள்!
தவறுகளைப் பொறுத்துக் கொள்!
ஆம்! நம் ஒவ்வொருவரிடத்திலும்
இந்தத் தவறுகள் உள்ளன.
இரண்டுபேர் விளையாடினால்
ஒருவர்தானே வெற்றிபெற இயலும்!
வெற்றி வாய்ப்பே திறமையின் அளவு கோல்கள்!
திறமை உடையரேனும் சிலபோது தோற்பது உண்டு!
நீ, அடுத்தவனை உதைத்துத் தள்ளினால்
அவனுடைய மனக் கதவுகள் உனக்குத் திறக்கப்படாது!
பொறுப்பும் பொறுத்தாற்றும் பண்பும்
அமையாமல் வாழும்
எல்லா மனிதரிடத்திலும்,
உன்னிலும் மேலானவரிடத்திலும் தாழ்ந்தவரிடத்திலும்
அடக்கமாகப் பேசு!
மேலானவர்களை உளமாரப் புகழ்ந்து பேசு!
தாழ்ந்தவர்களை அணைந்துக் கொள்!
அப்போது உலகம் உனக்கு உடன்பட்டு
உன்னை அணையும்!

## 66. தாய்!

சின்னஞ்சிறு பாப்பாவின் வினா—
எங்கே உன் வீடு?
மழலையிடம் சிறுவன் தந்த விடை –
எங்கே தாய் இருக்கிறாளோ, அதுவே வீடு!
ஆம்! தாய் நற்பண்புகளின் வைப்பிடம்
வீட்டை உருவாக்கித் தருபவள் தாய்!
தாய்! அம்மம்ம! எவ்வளவு கடமை உணர்ச்சி!
ஈ, கொசு மொய்க்காமல் காக்கும் இரவுக்காவல்
தன்னலமறுப்பின் அடையாளம் தாய்!
கண்மணியின் கண்ணீருக்கு
முதலுடன் வட்டி கூட்டிய கண்ணீர்!
அந்த அணைப்பில்தான் எவ்வளவு மகிழ்ச்சி!
வேண்டுவன எல்லாம் வழங்குபவள் தாய்!
வறுமை நிறைந்த வீட்டையும்
பெருமைக்குரிய தாக்கும் பெற்றிமை,
தகைசால் தாயின் பெற்றிமை!
எளிமையும் அர்ப்பணிப்பும்
தாயிடமிருந்து வெளிப்போந்த பண்புகளே!
தாயுள்ளத்தில் எப்போதும் 'ஒருமை' இல்லை;
பன்மை உணர்வே ஆட்சி செய்யும் இதயம்;
தாய் இருந்தால் வீடு! அதுவே மகிழ்ச்சி!
மூவுலகிலும் போற்றப் பெறும் சொற்கள் மூன்று:
சொற்கள் வேறுவேறு ஆனாலும்
பொருளும் பயனும் ஒன்றேயாம்:
தாய், வீடு, விண்ணகம்,
இம்மூன்றுமே அச்சொற்கள்
இவற்றுள்ளும் தாயே
போற்றி அனுபவித்தற்குரிய அரிய இன்பம்!

## 67. இயங்கலே வாழ்க்கை!

"ஞாயிறு திரிதரு ஞாலந் தன்னில்
வெற்றி பொருந்திய வாழ்வு வேண்டின்
செயலே தேவை! செயலுறு மனிதனே
வெற்றி பெறுவான்!
முதலில் நீ எழு! தொடங்கு செயலினை!
நற்செயல் தொடக்கமே பாதி வெற்றியெனச்
சான்றோர் கூறினர்!
மூலையில் இருந்து உறங்கும் மனிதனைவிட
நடக்கும் மனிதனுக்கு ஆற்றல் அதிகம்!
உட்கார்ந்தே பொழுதைக் கழிக்கும் மனிதன்
எழுந்து நிற்பானாகில் இருமடங்கு
ஆற்றலை அடைந்து மண்ணிற்குத் தந்து நிற்கிறான்!
நிற்கும் மனிதனைவிட
நடைபோடும் மனிதனின் நடையில்
எண்ணில் பலமடங்கு ஆற்றல் கூடுகிறது!
மனிதனின் ஆற்றல் நாற்றிசையும் பரவிப்
பாரினை இயக்கி வளர்க்கும்:
உட்கார்ந்தே வாழும் மனிதனின் ஆற்றல்
மிகமிகக் குறைவு!
எழுந்து நடந்தால் வாழ்க்கை தொடங்குகிறது
ஆற்றலும் இருமடங்கு கூடுகிறது!
நடந்து பணிகள் செய்வா னாயின்
அவன் ஆற்றல் பலமடங்கு வளர்கிறது!
மிக உயர்ந்த மனிதன்
பேச்சில் மிதமாக இருப்பான்!
ஆனால், ஆற்றலை விஞ்சிய செயல்புரிவான்!
பாங்குடன் பலபணி செய்தலே
பாரினில் வெற்றி பொருந்திய
வாழ்வுக்கு வழி.

கு.XIV.16.

## 68. நாள்!

அன்றொரு நாள்
விவசாயி ஒருவன் மருத்துவ மனையில்
வாழ்வா? சாவா? போராட்டத்தில் கிடந்தான்!
ஒருநாள் உணர்வுநிலை அவனுக்கு வந்தது:
உடன் அவன் எழுப்பிய வினா
இது என்ன பருவகாலம் என்பது
மருத்துவத் தாதி மழைக்காலம் என்றாள்;
மழையும் பெய்கிறது என்றாள்;
உடன் நோயில் கிடந்த விவசாயி
இது மழைக்காலம் நான்சாக மாட்டேன்
இது உழவுக் காலம் என்றான்!
ஆம்!
நம் எல்லோருக்கும் இது உழவுக் காலமே!
இந்தக் காலம் ஒன்றே நம்மை
ஒருங்கிணைத்து வைத்துள்ளது!
இந்த நோக்கில்
இன்றையநாள் நமது நாள்!
நாளையும் கூட இன்று வந்தால்
நமது நாளாகும்!
நாளை என்று நாளைத் தள்ளாதீர்!
இன்று வாய்த்த நாளை வாழ்வாக்குகவே!

## 69. கேட்கவும் கேட்கவும்!

*"காலமே எல்லா வற்றிற்கும் மையம்!*
*கேட்கவும் பேசவும் காலந்தேர்தல் நன்று!*
*நீ, பிறர் சொல்வதைக் கேட்க விரும்பாவிடில்*
*பிறர், நீ சொல்வதைக் கேட்பார்களா?*
*ஆம்! நமக்கு நம்பிக்கை யில்லாத ஒன்றைப்*
*பிறர் சொல்லும்போது கேட்பது கடினம்தான்!*
*ஆயினும், கேட்டுத்தான் ஆக வேண்டும்!*
*இல்லையெனில் பிறர் உன் பேச்சைக் கேட்பார்களா?*
*பேசு! மற்றவர்களும் பேசட்டும்!*
*எல்லாருக்கும் பேச உரிமை கொடு!*
*பிறர் பேசுவதைச் சீற்றமும் சினமும் இன்றி*
*நீ கேட்பின் பிறர் உன் பேச்சை*
*மரியாதை – வந்தனை செய்து கேட்பர்!*
*பெருந்தன்மை என்பது எவர்பேசுவதையும் கேட்பதே!*
*சுதந்திரச் சிந்தனையாளன்*
*வால்டேர் வாய்மொழி கேள்!*
*"உன்னுடைய பேச்சில் ஒருவார்த்தை கூட*
*எனக்கு உடன்பாடில்லை!*
*ஆயினும் உன்னுடைய சொல்லும் உரிமைக்கு*
*உயிர் கொடுத்தும் போராடுவேன்!"*
*என்ற அமுதமொழி தேர்க!*
*படைப்பிலும்*
*பேசும் வாய்க்குக் கதவுகள் உள்ளன;*
*கேட்கும் செவிகளுக்குக் கதவுகள் இல்லை;*
*என்பதனையும் எண்ணுக!*
*கேட்கவும்! கேட்கவும்! கேட்கவும்!*
*பேசுக!*

# 70. இலட்சிய நடை!

இனிய நண்ப,
ஏன் தயங்கி நிற்கிறாய்?
களைப்பா? சோர்வா? பயமா?
அல்லது,
உன் கட்டுக்குள் திரிந்த சுயநலம்
வெளிப்பட்டு உன்னை ஆட்சி செய்கிறதா?
அல்லது
தீமையின் தீமையாகிய – பணியினிடையில்
மனநிறைவு வந்துவிட்டதா?
ஏன் நிற்கிறாய்? ஐயோ, பாவம்!
சாலை வழிப்பயணம் மேற்கொள்ளும்போது
நாய்களைச் சந்திப்போம்!
குரைக்கும் நாய்களைச் சந்திப்போம்!
ஆனால், நாய்களுக்குப் பின்னால் செல்வோமா?
நாய்கள் பின்னே சென்றால் நாய்களைப் பிடிக்கலாம்.
ஆனால், சென்றடைய வேண்டிய ஊருக்குப் போகமுடியாது.
அதுபோலத்தான்
நம்மை விமர்சிப்பவர்கள்; புழுதி வாரித் தூற்றுபவர்கள்!
அவர்களைக் கண்டு அஞ்சினால்...
அவர்கள் பாடு அவர்களுக்கு!
நமது குறிக்கோள் திசையில்
நாம் சோர்விலாது நடந்திட வேண்டாமா?
இலக்கை அடையும் வரையில்
இடையீடின்றி நடக்க வேண்டும்! வா, வா!
எதுவும் மந்திரத்தில் நடக்காது
செயலே இலக்கை அடையும் வழி!
ஒரு மனத்துடன் கடமைப் பிடிப்புடையவர்காள்
வருக, வருக! செயலே செய்க!

## 71. வீடே அரண்மனை!

*வீடு எது? சுவரும் கூரையும்*
*மட்டுந் தானா வீடு? இல்லை, இல்லை!*
*மனத்தின் கண் சொர்க்கத்தை ஆக்கல் வீடு!*
*பால்நினைந் தூட்டும் தாயின் உறவு உள்ளது வீடு!*
*வாழ்க்கைப் போராட்டத்தின் களைப்பை நீக்கி*
*இதம் அளிப்பது வீடு!*
*அமைதி தழுவிய ஓய்வளிப்பது வீடு!*
*உலகத்தின் கதவைச் சாத்தி*
*இன்பக் கோட்டையாக விளங்குவது வீடு!*
*வீட்டில்தான் வலிமையற்றவர்களும்*
*உணர்வும் வலிமையும் பெற்று வாழ்கின்றனர்!*
*இந்தப் பரந்த உலகத்தில்*
*ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு*
*உளம் கனிந்த உறவினராகி*
*வாழும் இடம் எது? அது ஒரே ஓர் இடம்தான்!*
*அதுதான் வீடு!*
*சராசரி மனிதன் –*
*முடிசூடா மன்னனாய் விளங்குவதும் வீட்டில்தான்!*
*அவன் மனைவி இராணி*
*குழந்தைகள் சிற்றரசர்கள்!*
*எங்கே வீட்டில்தான்!*
*அதுதான் இன்ப வீடு!*

## 72. தேடல்!

*அடிவானத்திற்கு அப்பால்*
*தங்கப் புதையல் பானை என்று*
*பலர் சொல்லக் கேள்வி!*
*இதை யார் எடுக்க இயலும்?*
*சிலர் முயன்றால் சாதிக்கலாம்!*
*கால் கடுக்க, பல நூறு காதங்கள் நடந்து*
*தோண்டும் முயற்சி தொடக்கம்!*
*மீண்டும் மீண்டும் தோண்டுதல்!*
*ஆயினும், தங்கக்குடம் தென்படவில்லை!*
*மனிதனின் தாகம் வளருகிறது!*
*தாகம் வளர்ந்ததால் முயற்சி தொடருகிறது!*
*அடிவானத்தைத் தொடும் முயற்சியிலேயே*
*எல்லையற்ற மகிழ்ச்சி!*
*தங்கம் வேண்டுமா, தொடங்குக முயற்சியை!*
*தங்கம் கிடைக்காமல் போனாலும் நீ தங்கமாவாய்!*
*வாழ்க்கையின் சிறந்த பயன்,*
*தேடுவோருக்கேயாம்!*
*வாழ்க்கை யென்பதற்கே பொருள்*
*தேடல்! தேடல்! தேடல்!*

## 73. தாயின் நோன்பு!

இப்பேருலகிற்குப் பெண்ணளிக்கும் கொடை
உயர்வற உயர்ந்த தாய்மையே யாகும்!
தாய், ஆற்றல் மிக்க அன்பால்
கடவுளின் படைப்புக்கே பயனும் புகழும் சேர்க்கிறாள்!
கடவுள் படைக்கலாம் மனித உருவினை!
இயங்கு புலன்களை, பொறிகளைக் கொடுக்கலாம்!
ஆயினும்,
பொறிகளுக்கும் புலன்களுக்கும்
நெறிப்பட இயங்கும் ஆற்றலை வளர்த்து
மனிதனைப் படைப்பவள் தாயே!
தாயின் நோன்புக்கு ஈடேது?
எண்ணரிய தவங்கள் இயற்றினாலும்
பெற இயலாத எழுச்சியை,
தாயின் இதயத்தில் எழும் தோத்திரமும்
உதட்டின்வழி ஒலிவடிவமாக எழும்
இசைப் பாடலும் தரும்.
உடலாலும் மூளையாலும் திறம்பட உழைத்து
மானுட வாழ்வு வாழமுடியும் என்று
உறுதிப் படுத்துகின்றாள்
தாய்தன் மகவுக்குச் சிறிது சிறிதாகத்
தனது உயிரைத் தருகிறாள்.
ஒருபுதிய உயிரை – புதுவாழ்வினை
புகழ்மிக்கு வளர்ந்த வாழ்வினை உருவாக்குகிறாள்!
தாய்தன் குழந்தைகளுக்கு
வையம்புகழ் வடிவம்! தருகிறாள்!
அவ்வழி, நாடுகளுக்கு வடிவம் தருபவள் நற்றாய்!
தாயின் தகுபுகழ்ப் பணியையே
எதிர்காலம் சார்ந்திருக்கிறது!

## 74. தாய்க்கும் உண்டோ ஓய்வு!

*தாய் வேலை செய்கிறாள்! வேலை செய்கிறாள்!*
*தாய் தொடர்ந்து வேலை செய்கிறாள்!*
*வேலையா செய்கிறாள்!*
*இல்லை, இல்லை செய்வது வேலை!*
*ஆனால், விருப்பத்துடன் புனித வேள்வியெனச்*
*செய்கிறாள்!*
*ஆம்!*
*தாயின் இலட்சியம் இன்பக்களிப்பும்*
*அமைதியும் மகிழ்வும் நிறைந்த வீட்டைக் காண்பது!*
*வீட்டை மண்ணகத்தின் சொர்க்கமாக்குகிற வரை*
*வேலையினின்றும் நிற்கமாட்டாள்.*
*அது அவளின் நோன்பு!*
*பாடும் பறவை வானம்பாடி*
*காலையில் மெல்லப் பறக்கும்!*
*முன்னிரவு வரையில் திரிந்து வேலை செய்யும்!*
*ஏன்?*
*தனது குஞ்சுகளை ஊட்டி வளர்க்க*
*இருநூறுக்கு மேலான தடவைகளில்*
*குஞ்சுகளுக்கு உணவளித்துக் காக்கும்!*
*கருப்புக் காகம் பதினேழு மணிநேரம்*
*வேலை செய்து தன் குஞ்சுகளுக்கு*
*நூறுதரம் உணவளிக்கும்!*
*நமது வீட்டில் ஆற்றமிக்க தாய்*
*நாட்காலையில் எழுகிறாள்! இரவில் ஓய்வு எடுக்கிறாள்!*
*பறவைகளைப் போலப் பாடுபடுகிறாள்!*
*அவளுக்கு உயர்வான நோக்கம் இருக்கிறது!*
*கணவனுக்கும் குழந்தைகளுக்கும் உழைக்கிறாள்!*
*ஓயாது உழைக்கிறாள்;*
*கைம்மாறு கருதாத, இடையீடு இல்லாத, தியாகம் தழுவிய,*
*உழைப்பின் மறு பெயரே தாய்!*
*தாயின் வேலைக்கு முடிவே இல்லை!*

## 75. வித்தும் மரமும்!

*முகம்பார்க்கும் கண்ணாடிக்குள் தெரியும்*
*உருவம் உன்னுடையதே!*
*ஆயினும் உன் உருவம், உணர்வுகளைத் தந்து*
*ஆளாக்கியது யார்?*
*நீயே வளர்ந்தாயா?*
*ஆம் எனில், நகைப்பே வருகிறது!*
*நானிலத்தில் விதையின்றி மரம் ஏது?*
*ஆலம் வித்து சிறிதே!*
*வித்தினின்றும் முளைத்து வளர்ந்த*
*மரமோ பெரிது!*
*அதுபோல*
*உன் தாய் போட்ட அடிப்படையே*
*வளர்ந்து, நீ ஆனாய்!*
*நீ, உன் தாயைப் போல!*
*"தாயைப் போலப் பிள்ளை!*
*நூலைப் போலச் சேலை!"*
*என்ற பழமொழியை எண்ணுக!*

## 76. அந்த ஒரு பெயர்!...

இந்த வையகம் ஒரு சந்திப்பு!
உற்ற உறவில், ஊரவரில், உலகத்தில் என
எண்ணிப் பலரைச் சந்திக்கிறோம்!
ஆனால்,
நினைவில் நிற்கும் பெயர் ஒன்று
அந்த ஒரு பெயருக்கு ஈடான வேறொரு பெயர்
ஏது இந்த உலகில்?
அந்த ஒரு பெயருக்குரியார் யார்?
அவள்தான் தாய்! தாயின் பெயர்!
எண்ணும் பொழுதெல்லாம் இன்பம் ஊறும்!
ஆம்! தாய்தந்த பயிற்சிகள்
நினைவிற்குரிய வாழ்வியல் நெறிகள்!
வெற்றிப்படிகளைக் கடந்து ஏற
தாய்காட்டிய வழி உயர்ந்தது!
தாய் வழியையா காட்டினாள்! வாழ்க்கையையே
காட்டினாள்!
தாயின் இதயத்து அன்பில் கிடைத்த
ஆரா அரவணைப்பில் கிடைத்த பாதுகாப்பு
இனி எப்போது கிடைக்கும்?
வாழ்க்கைப் போராட்டத்தில்
தாயை நினைவு கூர்க!
அவள்தம் பிரார்த்தனை நினைவு கூர்க!
வளர்வாய்! வளர்வாய்!

## 77. தைரியம்!

*காய்ச்சிய இரும்பு எஃகாதல் உண்மை!*
*எஃகு அதனில் வலிமையுடையதில்!*
*உன் இதயமும் உறுதி வாய்ந்ததாக*
*இருக்க வேண்டுமா?*
*பயமில்லாத மனச்சாட்சியைப் பெற முயலுக!*
*அச்சமில்லாத அகநிலை வாழ்விற்குத்*
*தைரியம் தந்து வாழ வைக்கிறது!*
*வாழ்க்கைப் போராட்டத்தில்*
*தைரியத்துடன் போராட*
*விழிப்புள்ள காப்புணர்வு தேவை!*
*தன்னைத் தானே விமர்சித்து வாழ்பவர்*
*அயலவர் கண்டனத்துக்கு ஆளாவதில்லை.*
*பேராண்மையுடன் கூடிய மனச்சாட்சியுடையவர்கள்*
*ஓடி ஒளிய வேண்டியதும் இல்லை!*
*ஒளிக்க வேண்டியதும் இல்லை!*
*ஆனால், அவன் அனைவர் மாட்டும்*
*ஒருகண் வைத்திருப்பான்!*
*உறுதியும் தைரியமும் உடையவர்கள்*
*பயமற்ற வாழ்க்கை நடத்தலாம்!*
*அவர்கள் மனச்சாட்சி திசையில் வாழ்பவர்கள்!*
*உன் தரப்பில் உறுதியாக இரு!*
*நீ செய்வதைச் சலனமின்றிச் செய்க!*
*மற்றவர்களை நடத்திய பாங்கில்*
*தவறில்லை என்ற திடமுடன் இரு!*
*அப்போது தைரியம் கிடைக்கும்!*
*நீ, நிற்பாய்!*
*எந்தச் சூழ்நிலையிலும் நிற்பாய்!*

## 78. ஒல்லிக்காய்!

ஞாலம் திரிதரு ஞாயிறுடன்
இந்த உலகம் முழுவதற்கும்
உறுநலம் செய்வதில்
நேர்நிற்பது நிகரற்ற அன்பே!
உருவத்தால் தேங்காய்தான்
ஆயினும் என்? உள்ளீடு இல்லாத ஒல்லிக்காய்!
அதுபோல,
உள்ளீடு இல்லாத மனிதனும்
மனிதப் பிறப்பே!
ஆயினும் முழுமனிதன் அல்ல!
மனிதனின் உள்ளத்தில் ஆர்வங்களைக் காட்டி
எண்ணற்ற நலன்களைக் கூட்டித் தந்து
கற்பனைக்கு எட்டாத ஆற்றலைத் தந்து
உடன்வந்தோ ரெல்லாம் நிற்க
நெடுந்தூரம் பயணம் செய்தான்!
படைவீரனுக்குரிய தைரியத்தோடு
அன்பு, அவதூறு, அவமானங்களைக் கடந்தும்
வெடிகுண்டுகளைத் தாங்கியும் பயணம் செய்க,
மாலை வெயிலின் இதம் சுகம்தரும்.
தூறலில் நனைதலால் கிடைக்கும் புத்துணர்ச்சி கிடைக்கும்.
அன்பு – நீண்டகால விளக்கு!
அன்பு – கூரிய கருவி!
அன்பின் முத்தங்கள் இனிமையானவை:
அன்பின் அனுபவகாலம் குறுகியதே!
அன்பின் மொழி அன்புடையோருக்கே விளங்கும்!
இப் பேரண்டத்தில்
அன்பின் மொழிக்கு ஈடு ஏது? இணை ஏது?

## 79. மனிதன் கிடைப்பானா?

இன்றைய தேவை மனிதன்!
மானுடத்தைப் பற்றி அலைக்கழிக்கும் அவலங்களை
அடியோடு அகற்றிப்
புதியதோர் உலகம் செய்ய மனிதன் தேவை!
தன்னையே தெரிந்து தன்னையே ஆளாத
மனிதக் கூட்டம் என்ன செய்ய இயலும்?
உண்ணவும் உறங்கவும் சாறும்?
நமக்குத் தேவை மனிதன்!
உலகவர்முன் நிற்கக் கூடிய மனிதன் தேவை!
இந்த உலகம் திருந்துதலுக்கு உரியதன்று!
உலகைப் புதுப்பிக்க வேண்டும்!
துறைதோறும் புதுவடிவம் தந்தாக வேண்டும்!
இதனைச் செய்யக்கூடிய மனிதன்தேவை!
புதியதோர் உலகைச்
செய்து முடிக்கும் மனிதன் தேவை!
புதியதோர் உலகம் அமைக்கும் பணி எளிதன்று!
பழைமையின் போர்க்குரல் கேட்டுப்
பின் வாங்காத பேராண்மையுடைய மனிதன் தேவை!
நெஞ்சில் உறுதியும் போர்க்குணமும் உடைய
மனிதன் தேவை!
உலகத்தைத் திருத்துவோனை உலகம் விடாது!
உலகத் தொல்லைகளைத் தரும்!
இடர்ப்பாடுகளின் இடையில் நொறுங்கிப் போகும்
மனிதன், ஐந்து:
என்ன செய்வான் பாவம்!
புதிய சமுதாய அமைப்புக் களத்தில்
பலவீனன் களத்தை இழக்கிறான்!
தன்னையே இழக்கிறான்!
ஐயோ, பாவம்! உலகம் இழப்பைச் சந்திக்கிறது!
இன்றைய தேவை மனிதன்!
மனிதன் கிடைப்பானா?

## 80. சமூக பலம் – மனிதன்!

நமது காலத்தின் தேவை 'மனிதன்!'
ஆம்!
பலவீனத்திலிருந்து பலம் உருவாவதில்லை!
ஒப்பற்ற மானுட சமுதாயம் தோன்ற
மனிதன் தேவை!
ஒப்புயர்வற்ற உலகத்தின் ஆட்சியைக் காண
மனிதன் தேவை!
தன்னை ஆளத் தெரியாத
அவலச் சிக்குப் பிடித்த
இருகால் விலங்குகள் என்ன செய்ய இயலும்?
நமக்குத் தேவை மனிதன்!
இந்த உலகத்தின் முன்னே நிற்கக் கூடிய
மானிடன் தேவை!
இந்த உலகத்தைப் புதுப்பிக்கவும்
புத்துருவம் கொடுக்கவும்
ஒரு மனிதன் தேவை!
'முடியும்' – எனும் மனிதன் தேவை!
'கூடும்' கொள்கையுடைய மனிதன் தேவை!
செய்து முடிப்பதையே
குறிக்கோளாகக் கொண்ட மனிதன் தேவை!
ஒருபொழுதும் பின் வாங்காத
பெருந்தகை தேவை!
பலவீனனுக்கு வாழ்க்கைப் போர்க்களத்தில்
ஏது மன உறுதி?
உலகம் அவனை உதைக்கும் பொழுது
வளைந்து நொறுங்கிப் போவான்!

பலவீனனுக்கு நெருக்கடிகளைத் தாங்கும்
வலிமை இல்லை; உறுதி இல்லை!
அவன் தன்னுடையதை இழக்கிறான்!
தன்னையே இழக்கிறான்!
அவனுடைய இழப்பு, உலகத்தின் இழப்பு!
நமது காலத்திற்குத் தேவை
பலமான மூளை! உயர்ந்த இதயம்!
உண்மையான நம்பிக்கை!
எப்போதும்
உழைப்புக்கு ஆயத்தமான கைகள்!
இவனே மதிப்புயர் மனிதன்!

## 81. இடும்பைக்கு இடும்பை!

*வாடிய முகம் ஏன்? நெஞ்சில் கவலை பெருக்கி நோவது ஏன்?*
*நாளை வரும் துன்பம் கருதியா?*
*அதற்கு ஏன் இன்றே கவலை?*
*நாளை துன்பம் வரும்போது பார்த்துக் கொள்ளலாம்!*
*துன்பம் உனைவந்தடையாத நிலையில்*
*அதனை வரவேற்று இடும்பைப்படுவது ஏன்?*
*சிலபோது மனிதர்கள்*
*இடும்பைகளுக்கிடையே கிடந்து அல்லலுறலாம்!*
*ஆயினும், துன்புறுவது சில நாளே!*
*துன்பத்தின் முடிவில் இன்பம்!*
*எப்போது?*
*இடும்பையை நினைந்து கவலைப்படாது தமது கடமைகள் மேல் சென்றால்*
*அவன் மௌனம் சாதித்தால் இடும்பை அவனை விலகிச் செல்லும்!*
*இடும்பைகளை உருவாக்குகிறவன் இடும்பைக்குள்ளேயே வாழ்கிறான்!*
*அது அவன் பழக்கம்!*
*இடும்பையை வரவேற்று அதற்குள் புகுவதில்*
*அவனுக்கு நிகர் அவனே!*
*அமைதியை உருவாக்குகிறவர்களுக்கு எப்போதும் அமைதி!*
*ஏன்? அவனுக்குத் தெரியும் எப்போது பிணக்கு வரும்*
*இடும்பைகள் வரக் கூடும் என்று!*
*அவன் காவல் நாய் போல உறங்குவான்*
*உள்ளே மீறி ஒன்றும் நிகழ்ந்து விடாது!*
*உன்னுடைய அமைதி இழப்பே இடும்பைகளைத் தரும்!*
*கவலற்க! கடமைகள் மேற் செய்க!*

## 82. ஆடும் நாற்காலி!

தாய்க்குப் பலப்பல பணிகள்!
மழலைகள் வீட்டிற்கு வெளியே செல்லாது
பாதுகாக்கப் படுதல் வேண்டும்!
தாய் என்ன செய்தாள்?
ஆடும் நாற்காலி ஒன்றினைக் கண்டுபிடித்தாள்!
ஆடும் நாற்காலியில் மழலைகள்!
கனவுகளையும் துன்பங்களையும் மறந்தாள்!
மழலைகளுக்கு ஒழுக்கம் வளர்ந்தது!
மழலைகள் உயர் எண்ணங்களுக்கு உரியவரானார்!
இதயத்தின் இரக்கம் விரிவடைந்தது!
உறுதி மொழிகள் காப்புறுதியாயின!
படுக்கையிலும் அமைதியாக உறங்கினாள்!
ஆடும் நாற்காலி பல கலைகளின்
வகுப்பறையாக,
விரிவுரை மண்டபமாக
நூலகமாக
இன்னபிறவாகப் பயன்பட்டது!
ஆடும் நாற்காலியின் சிறப்பை
எடுத்துக் கூற மொழிகள் ஏது?
புவிக்கோளமே சிறந்த பள்ளிக் கூடம்!
தாயே உயர் ஆசிரியர்!
தாய்தந்த ஆடும் நாற்காலியே
கற்கும் பாடம்!

௫.XIV.17.

## 83. ஆத்ம சோதனை!

*நாளும் பல நற்செயல்களை*
*நல்லவை பெருகி வளரச் செய்க!*
*இந்த உலகம் பலவற்றாலும் ஆனது!*
*ஆனாலும், இந்த உலகில் பலர் உள்ளனர்*
*தீமைகள் செய்ய!*
*நீ இன்றியே தீமைகள் செய்வர்!*
*இருள் உண்டாக்க எண்ணற்றவர்கள்!*
*அவர்களுக்குள் நீ நாளும் நன்மைசெய்க!*
*நீ ஏன் தனித்து விளங்கக் கூடாது?*
*ஒளிமிக்க புகழுடன் விளங்கக் கூடாது?*
*நாளும் நற்செயல் செய்திடின்*
*சிந்தனையும் செயலும் குணமும் சிறக்கும்!*
*இந்தப் பேருலகில்*
*நன்மைக்கும் தீமைக்கும் இடையே*
*ஓயாது போர் நடந்து வருகிறது!*
*தீய வரிசையை நினைத்தல் ஆகாது!*
*நன்மையும் தீமையும்*
*இந்த உலகத்திற்குத் தந்திடும்*
*வடிவத்தினைப் பார்!*
*உலகம் உருப்படியாவது, எதனால்?*
*சிந்தனை செய்க!*
*உன் வழியைத் தேர்வு செய்க!*
*அவ்வழித் தடத்தில்*
*தொடர்ந்து செல்க! செய்க!*
*இரவு படுக்கப் போகும் முன்*
*ஆத்ம பரிசோதனை செய்து கொள்!*
*"நான் நன்றே செய்துள்ளேன்"*
*என்ற முடிவுக்கு வந்தால்*
*வாழ்கின்றாய்! வையகத்தை வாழ்விக்கின்றாய்!*

## 84. போலியை வெறு!

நடிப்பு, நடிப்பேயாம்!
உருவாக்கும் உணர்வினை நடிப்பு தராது!
திறமையான நடிப்பு நம்பிக்கையைத் தரலாம்!
நாடகத்தால் நடித்து விளையாடல்
ஊரவரை ஏமாற்றவேயாம்!
ஆரவாரமான நடிப்பு!
இந்த உலகம் உண்மை உணருமாயின்
உண்மையை விரும்புமாயின்
போலீசுக்கு ஏதுஇடம்?
நடிப்பு நல்ல தோற்றம் காட்டும்!
ஆயினும்,
ஆட்டுத்தோல் போர்த்த புலியேயாம்!
நல்லன பேசுவர்!
சொல்லிய சொல்லைப் பேணார்!
காட்சிக்கு நல்லவிதமாய்க் காட்டுவர்:
ஆயினும்,
காசு பண்ணும் குறியே குறி!
இது தவறு! நடிப்பு நல்லதாக இயலுமா?
போலி உண்மையாதல் உலகில் இல்லை;
சூது மனிதனின் சிந்தனை, சுயநலத்தையே சுற்றும்!
நடிப்பவர் நடிக்கலாம்!
இதயக் கலப்பில்லாத சொற்கள் சொன்னாலும்
சொல்லப்படாதவையே!
சொல்லொடு செயல் இல்லையாயின் அது ஒரு
பாசாங்கேயாம்!
ஆரவாரமின்றி நடந்த நல்லன என்றும் நிலைத்து நிற்பன!
செயல் இல்லாதவையெல்லாம் நடிப்பேயாம்!
கொலையும் செய்யலாம்! முட்டாளாகவும் வாழலாம்!
ஆயினும் நடித்தல் தீது!
எக்குற்றம் செய்யினும்
நடித்தல் செய்ய வேண்டாம்!

## 85. குணமும் குற்றமும்

இந்த உலகம் பெரியது! பெரியது!
எண்ணற்ற சிலைகள் நிற்கின்றன!
ஆனால்,
குற்றமே காணும் கனவானுக்குச் சிலை இல்லை!
கனவான்!
அவருடைய குறிக்கோள் என்ன?
கண்கள் இரண்டும் குற்றங்களையே காணும்!
உள்ளவாறல்ல!
குற்றத்தைப் பெருக்கியே காண்பர்!
குற்றத்தையே தூற்றும் சின்னப்புத்தியும் உண்டு;
விவரம் காண்பது, குற்றம் காண்பது
இவ்விரண்டும் வேறுபட்டவை!
விவரங்கள் காணும் மனமுடையவர்
குற்றமும் குணமும் காண்பர்!
மனிதன் குறைகள், உடையவனே!
ஆயினும்,
மாந்தர் பலரிடம் குற்றங்களைவிடக்
குணம் கூடுதலாகவே உண்டு!
எழுதும் வெள்ளைத்தாளில் ஒருபுள்ளி வை!
அட்டுக் கறுப்பு!
அக்கறுப்பைச் சுற்றி வெள்ளை நிறப்பரப்பு மிகுதி!
மனிதன், மனிதனைப்
பாரபட்சத்துடன் பார்க்கிறான்!
அன்புச் சகோதரனாகப் பார்ப்பதில்லை!
அதனால், குற்றமே காண்கிறான்!
குற்றங்கள் காணற்க!
குற்றங்களை மறந்து விடு!
குணங்களையே காண்க! போற்றுக!

## 86. பெருமிதம் பேறு!

உன்னுடைய வாழ்க்கைப் பயணத்தில் உடன்வருவோர் பலர்!
அவருள் துணையாக நிற்பவர் சிலர்!
குற்றங்குறைகளால் தொல்லை தருபவர் சிலர்! இஃது இயற்கை!
அவர்தம் குற்றம் குறைகளை, பிழைகளை நீ ஏற்கும் வகையால்
வாழ்க்கையின் வெற்றியும் இன்பமும் அமைந்து கிடக்கிறது!
உன் வாழ்க்கை எப்படி? குறைவிலா நிறைவா, என்ன?
உன் குற்றங்களை, பிழைகளை நீ சுட்டா எரித்து விடுகிறாய்?
தற்சலுகையுடன்,
"தவறிப் போய்விட்டது; என்ன செய்வது?"
என்றுதானே நீ, சமாதானம் செய்து கொள்கிறாய்!
ஏன்?
அயலவரிடம் நியாயப்படுத்தவும் செய்யவில்லையா?
அதுபோலவே, மற்றவர் குற்றங்களையும் கருதுக!
உன்னுடன் இருப்பவரில் பலர்
பச்சை மண் பானைகள்!
உன்சினம் கண்டு உள்ளம் உடைந்து போவர்!
யாருடைய உள்ளமும் உடைந்துபோகச் செய்யாதே!
அவர்களுக்கும் நன்றே செய்க!
பாதுகாப்புணர்வு தந்திடுக!
அவர்தம் வளர்ச்சிக்குத் தடையாக இராதே! உதவி செய்க!
குற்றச் சாட்டுகளுக்கு முந்தாதே!
அவர்தம் உள்ளப்புண் ஆற்ற, விரைந்து தொழிற்படுக!

*உறுதியும் மரியாதையும் முரண்பாடுடையன அன்று!*
*உறுதி பேணுக! மதிப்புடனும் நடத்துக!*
*நயத்தொடு பொருந்திய நெறியில் குற்றத்தினை*
*உணர்த்துக!*
*பெரும்பாடுறு நிலையிலும் பெருமிதம் பேணுக!*
*அன்பு காட்டுக! அணைத்து அழைத்துச் செல்க!*
*உன்சொல் வெற்றி பெறாது போனாலும் கூட*
*உன் பண்பு பாராட்டப் பெறும்!*
*நல்ல தலையணையில் தலை வைத்துத் தூங்கிய*
*சுகம்போல*
*வாழ்க்கையில் நலந்தரு சுகத்தை அனுபவிப்பாய்!*

## 87. நீரில்லா ஆறு!

*நண்பனே!*
*தென்பெண்ணை ஆறு பார்த்திருக்கிறாயா?*
*ஆறு என்று பெயர் தண்ணீர் இல்லை!*
*"நதியின் பிழையன்று; நறும்புனலின்மை"*
*என்றான் மானுடன் கம்பன்!*
*அதுபோல் வாழ்க்கையில்*
*இன்பமும் உண்டு; துன்பமும் உண்டு!*
*நன்றும் உண்டு; பிழையும் உண்டு!*
*ஏமாற்றங்களைக் கண்டு கசப்புணர்வு அடையாதே!*
*நல்ல வண்ணம் ஏமாற்றத்தை ஏற்றுக் கொள்!*
*நம்பிக்கையுடன் ஏமாற்றத்தை ஏற்றுக்கொள்!*
*ஏமாற்றங்களிலும் சில தவிர்க்க இயலாதவை!*
*சூழ்ந்துவரும் கருமேகம் முழுதும்*
*நீர்த்துளிகளா என்ன?*
*ஈரப்பதமே இல்லாத மேகங்களும் உண்டு!*
*தண்ணீர் இல்லாத ஆறுகள் உண்டு!*
*உண்மைக்கு மாறான நம்பிக்கைகளும் உண்டு!*
*எந்தச் சூழ்நிலையிலும் களத்தினின்றும் அகலாதே!*
*எந்தச் சூழ்நிலையிலும் வெகுளாதே!*
*நம்பிக்கைக்குரிய காரணங்கள் இருக்கின்றன!*
*நாள்தோறும் கதிரவன் படுதலும் எழுதலும்*
*காண்கின்றனம்!*
*ஆதலால், நீ ஏமாற்றங்களிலிருந்து மீளமுடியும்*
*நம்புக! நம்பிக்கை உடையோர் கெட்டதில்லை!*
*வெற்றிக்கு உகந்த நிலையில்*
*உன் திட்டங்களை மாற்றுக!*
*போராடு! வெற்றி உறுதி!*

## 88. முதலீடு!

ஞாயிறு திரிதரு உலகினில்
எண்ணற்ற உயிர்கள்...!
நாம் எதனை விரும்புகின்றோம்?
பிணம் தின்னிக் கழுகுக்கு
அழுகிக் கிடக்கும் இறைச்சியிலேயே நாட்டம்!
உயர் ஒழுங்கு சார்ந்த வாழ்க்கைக்குச்
சான்றாக விளங்கும் தேனீக்கு நாட்டம்,
தேன் சொட்டும் மணமலர்களிலேயே!
நாம் எதை விரும்புவது?
கழுகையா? தேனீயையா?
நாம் எதைத் தேடுகிறோமோ அது நம்மைத் தேடும்!
நன்மையை நன்னெஞ்சுடன் ஏற்காமல்
அஞ்சிப் பாதுகாப்பு நாடி ஓடினால்
பாதுகாப்பும் பயனற்றுப் போகும்!
சிலர், நன்மையே அடைகின்றனர்
ஏன்?
முன் அவர்செய்த நன்மை முதலீடாகிப்
பயன் திரும்புகிறது! அவ்வளவுதான்!
நன்மை செய்க! நன்மையின் பயன்
இன்றோ நாளையோ வந்துசேரும்!
நலம் பலபெற எண்ணாதே!
எழு! விழிப்புநிலை அடைக!
சுறுசுறுப்பாக நன்மை செய்ய முயலுக!
அந்த நன்மையே உனக்குத் திரும்ப வரும்!
அருமந்தப் பொறுப்பை ஏற்கும்
நன்மையே சிறந்த முதலீடு!
அதனிற் சிறந்த முதலீடு
எதுவும் இவ்வுலகில் இல்லை!

## 89. விதிமுறை வாழ்வு!

வாழ்க்கைச் சக்கரம் சுழல்கிறது!
ஆம்!
நாம் அமர்ந்துள்ள வாழ்க்கைச் சக்கரம் சுற்றுகிறது!
நமது வாழ்க்கைச் சுற்றுக்கு நாமே பொறுப்பு!
மகிழ்வுந்து செலுத்தும்போது
ஒருகாலால் செலுத்துதற்குரியது ஆக்ஸ்லேட்டர்
மற்றொரு காலால் வேகத்தைத் தடைப்படுத்துதற்குரியது
பிரேக்!

அதுபோலவே வாழ்க்கையையும்
அமைத்து நடத்தத் துணிக!
நமக்குத் தேவை எழுச்சி; விழிப்பு!
எழுச்சியும் விழிப்புணர்வும் உந்து சக்திகள்!
வாழ்க்கைப்பாதையில் கிடக்கும் கற்கள் எத்தனை!
எத்தனை!

நமது வாழ்க்கைப் பயணம் சந்திக்கும்
விபத்துக்களுக்கு நாமே பொறுப்பு!
வாழ்க்கையின் இலக்கில் தடம்மாறாது செலுத்து!
ஆன்றோர் காட்டிய திசையில் செலுத்துக!
வாழ்க்கையென்பது தன்னிச்சையன்று!
விதிமுறைகளுக்கு இசைந்ததே வாழ்க்கை!
வாழ்க்கையின் விதிமுறைகளைக் கடைப்பிடி!
வாழ்க்கையைக் கவனமாகச் செலுத்து!
உனது நன்மைக்காகவே கவனம் தேவை! ஓடுவது நீயே
ஒரு நொடிப் பொழுதேனும் உன்வாழ்க்கை கட்டுப்பாட்டை
மீறாதே!

அழிவாய்! அழிக்கப்படுவாய்!

*வாழ்க்கையின் திசைமாற்றும் கருவியை*
*எத்தனைதடவை சுற்றியும் என்ன பயன்?*
*உணர்விழந்தார்க்கு நெறி ஏது? புலம் ஏது? தடங்கல் ஏது?*
*உன் கட்டுப்பாடே உன்வாழ்வு!*
*உன் வாழ்க்கையின்மீது உனக்குள்ள கட்டுப்பாடு நெகிழின்*
*அழிவாய்! இது உறுதி!*
*உன்னை நீ ஆள்: உன்னை நீ வெற்றிகொள்!*
*அதன்பின், எண்ணற்ற வெற்றிகளைக் குவிப்பாய்!*
*புகழொடு வாழ்வாய்!*

## 90. அகக் கோலம்!

புரவலன் போலும் தோற்றம்!
தோற்றத்தினால் ஆவது என்?
தோற்றமே ஏமாற்றும் சாதனமாகலாம்!
பசிய புல்தரை
புதை குழிகளை மூடிக்கொண்டு இருப்பதைப் போன்றது!
நல்ல பசுமைத் தோற்றத்துடன்
கொப்பு, கிளைகளுடன் விளங்கும் மரத்தில்
எந்த நொடியிலும் விழுவதற்குரிய
அழுகிய பகுதியும் உள்ளே உண்டு!
இனிய பழக்கங்கள் தோலுக்குரிய பூச்சைப் போன்றது!
தோலைக் கிழித்துப் பார்த்தால்
மனத்தைக் குமட்டும் கசப்புணர்வைக் காணலாம்!
பரந்தமுகம்! பரந்த இதயத்திற்குச் சான்று அல்ல!
சுத்தமான உடம்பு, சுத்தமான வாழ்க்கையைக் காட்டாது
பிரார்த்தனைகளை முணுமுணுக்கும் வாய்
பிரார்த்தனை செய்யும் இதயமும்
பெற்றிருக்கும் என்பதற்கு ஏது உறுதி?
ஆடைகள் அமைச்சரை உருவாக்குவதில்லை;
ஆடைகள் பார்வைக்கு நன்றாக இருக்கலாம்!
ஆனால்,
ஆடைகள் மனிதனை உருவாக்குவதில்லை!
வாழ்க்கைக்கு அழகு தேவை!
எந்த அழகு தேவை?
புறஞ்சுவர் கோலம் செய்யும் அழகன்று!
அகத்தைக் கோலம் செய்யும் அழகே, அழகு!

## 91. காலத்தின் கட்டாயம்!

*என்னுயிரே! என் அறிவே*
*பொறுமை போற்று!*
*நீ பொறுமையை இழப்பின்*
*உன்னை இழக்க நேரிடும்!*
*உனது கூட்டாண்மை, நம்பிக்கை*
*மேலும் உத்தரவாதம் வெற்றியைத் தரும்!*
*பொறுத்தாற்றும் நெறி வெற்றியோடு பொருந்தியது!*
*பொறுத்தாற்றும் நெறி வெற்றிகளை நல்கும்!*
*பொறுத்தாற்றும் போக்கு உற்பத்திக்குத் துணைசெய்யும்!*
*'பட்டுப் பூச்சிகள்' உண்ணும்*
*மலபரி – தழை பட்டாகக் கூடிய தருணத்தில்*
*பட்டாதல் போல*
*பொறுத்தாற்றும் பண்பும்*
*உரிய காலத்தில் உன் தேவையைப் படைத்தளிக்கும்!*
*பொறுத்தாற்றும் பண்புக்குப் பலபடிகள் உண்டு!*
*கடமைகளைச் செய்து, கலங்காது காத்திரு!*
*வாழ்வெனும் செய்குன்றின் மீது ஏறு!*
*இயற்கை காத்திருந்து தன் வழியைச் சென்று சேர்கிறது!*
*மனிதனின் பொறுமை ஆற்றலுக்கு அணி!*
*பொறுமை!*
*யார் காலத்தின் கட்டாயத் திற்குக்*
*கட்டுப்படு கிறார்களோ*
*அவர்களுக்கே உலகம் உரியது!*

## 92. மூடத்தனம்!

ஏ, மனிதனே!
உன் சுதந்திரத்திற்கு உலைவைக்கும்
மூடத்தனத்திற்கு அடிமையாகாதே!
மூடத்தனம் புதியன எண்ண இடங்கொடாது!
மூடத்தனமே சிந்தனைப் புலனை மூடும் கருங்கல்!
மூடத்தனம் தேவதைகளை மண்டியிடச் செய்து
கேலிக்குரிய பொருளாக்கும்!
மூடத்தனம் காட்டும் உயர் தேவதை
உண்மையில் உயர் தேவதையன்று;
தேவதைகளை நம்பிக் கிடப்போர்
உலகில் வெற்றி கண்டதில்லை!
மூடத்தனம் உடையாரைச்
சூதுள்ள பூனைகூட வெற்றி கொள்ளும்!
பூனை குறுக்கே ஓடினாலே முடிந்தது கதை!
ஏற வைத்த ஏணிகூட மூடத்திற்கு உதவாது!
உடைந்த கண்ணாடிபோல் வாழ்வர்!
மூடத்தனத்தில் முடங்கிக் கிடப்போர்
வாழ்க்கையின் சிக்கல்களுக்குத் தீர்வு காணார்!
அகட விகடத்தில் காண முயல்வர்
குல்லாவிலிருந்து எலியை இழுப்பார் போல
ஐயோ, பாவம்!
மூடத்தனத்தில் மூழ்கிக் கிடப்போர்
எவருக்கும் உதவியாக இரார்!
அவர்கள் அவர்களுக்கே உதவி!
மூடத்தனத்தின் முழு விளைவு நிர்வாணமான சுயநலம்!
இன்னமும் பூர்வ குடிகளின்
நம்பிக்கைகளைச் சுமந்து வாழ்வதா?
சிந்தனை செய்க! மூடத்தனம் அகற்றுக!
புதிய சிந்தனையுடன் வளர்க! வாழ்க!

## 93. புதுப்பித்தல்!

*ஞாயிறு திரிதரு உலகில்*
*எத்தனை எத்தனை பருவங்கள்!*
*பருவங்கள் தோறும் புதுமைகள்!*
*வாழ்க்கை பல்வகையாக அனுபவிப்பது*
*உணவுக்கு மணமூட்டும் மசாலையைப் போல*
*வேறுவேறு துய்ப்புகள் வாழ்க்கைக்கு மணமூட்டும்*
*ஒரே வகையான பணி*
*வாழ்க்கைத் தேக்கத்தின் விளைவைக் காட்டும்;*
*ஏன் எண்வகை அனுபவங்களைத் தேடக் கூடாது!*
*சோறு உணவுதான்! ஐயமில்லை!*
*ஆயினும்,*
*நொறுக்குத் தீனி அவ்வப்பொழுது தேவையில்லையா?*
*வாழ்க்கையை வகைவகையாக*
*வாழ்தலும் அனுபவித்தலும்*
*வாழ்க்கையைப் புதுப்பித்தலாம்!*
*வாழ்க்கைக்குப் புதுப்புது ஆடை அனுபவங்கள்!*
*வேறு வேறு பொழுது போக்குகள்!*
*விவாத அரங்கில் புதிய புதிய செய்திகள்*
*ஊர்பல சென்று காணல்*
*ஆகியன*
*துக்கத்திலிருந்து மீளும் வாயில்கள்*
*இந்த உலகம் வேறு வேறு காட்சிகள் அமைந்தது*
*இந்த உலம் பூணும் புதுமைகள் பலப்பல!*
*நீ ஏன் களைப் படைகிறாய்?*
*இந்த உலகத்தை அனுபவி! மகிழ்க!*

## 94. ''இசம்'' கள்

நண்பனே!
இந்த உலகில் எத்தனை எத்தனை 'இசம்' கள்!
எண்ணற்ற 'இசம்'கள் இருந்தாலும்
உன் வாழ்க்கையை மிகுதியும் பாதிக்கும்
'இசம்'கள் இரண்டே என்பதை உணர்க!
ஒன்று நம்பிக்கையைச் சார்ந்த 'ஆப்டி மிசம்!'
பிறிதொன்று அவ நம்பிக்கையைச் சார்ந்த 'ஸ்பெசிமிசம்!'
இவை இரண்டுமே உன்னால் உருவாகுமேயன்றி
இயற்கையுமல்ல; நியதியுமல்ல!
அன்று மில்டன் சொர்க்கமும் நரகமும்
மனிதனின் மூளைப்படைப்பு என்றான்!
அதுபோல,
வெற்றியும் தோல்வியும் உன்படைப்பேயாம்!
உன் மூளையே வெற்றியைப் படைக்கிறது!
தோல்வியும் உன்மூளையின் படைப்பே!
நாம் நினைப்பது போலச் செய்யலாம்!
சில நேரங்களில் செய்ய முடியாமலும் போகலாம்!
வெற்றி பொருந்திய வாழ்க்கை அமைவுடையார்
உடன்பாடும் ஆக்கமும் பொருந்திய
வழியிலேயே சிந்திப்பர்; செயல்படுவர்!
வாழ்க்கையில் தோல்விகளைத் தழுவும் தன்மையை
எதிர் மறையாக எண்ணுவர்! ஐயோ, பாவம்!
மானிடசக்தியில் நம்பிக்கைக்கு இணை ஏது? ஈடு ஏது?
முன்னேறும் சிந்தனையுடையான்
வாழ்வின் ஆக்கத்திற்குரிய வாயில்கள் உள்ளன என்பான்!
அவ்வழியில் முயற்சி செய்வான்!

*நியதிகளும் நெறிகளும் அறிந்து செய்வான்!*
*சிலபொழுது மெதுவாகப் போகலாம்!*
*எல்லையை அடைதல் ஒருதலை உண்மை!*
*வெற்றி பொருந்திய வாழ்வு வாழ விரும்புபவன்*
*கதிரவனையே தேடுவான்! நிழலைத் தேடான்!*
*நம்பிக்கையிலும் உயர்ந்தது எது?*
*இந்த உலகில் வாழும் மாந்தனுக்கு*
*நம்பிக்கையே உலகம்! உயிர்!*

## 95. அர்த்தமுள்ள வாழ்வு!

*சாவதற்கோ வாழ்வு? இல்லை! இல்லை!*
*மரணமிலா வாழ்வில் நம்பிக்கை வை!*
*ஆக்கவழி நோக்கோடு வாழின்*
*வாழ்க்கையில் பிழைகள் பல ஏற்பட்டாலும்*
*ஒரு நாளும் வாழ்நாள் வீணாகாது!*
*ஆயினும், வாழ்க்கைப் பயணத்தில் நாள்கள்*
*வீணே கழியாமல் பயன்படுத்தப் பெற்றது என்ற*
*மன நிறைவு பெறலாம்!*
*வாழ்க்கையின் மாலைப்போது வரும் பொழுது*
*ஒருநாள், நீ உன் வீட்டின் அருகில்*
*இன்று உன்னுடைய நாள்! பயன்படுத்துக!*
*இந்த நாள் நன்றாகவோ, தீயதாகவோ*
*கழிந்த பின்*
*இரவில் தங்கு! நாட்காலையில் எழு!*
*எண்ணச் சுமைகளுடன் பயணத்தைத் தொடங்கு!*
*நகர்! நட! விரைந்துநட! ஓடுக!*
*நம்பிக்கையுடனும் நல்லெண்ணத்துடனும்*
*நடைபெறும் பயணத்தில்*
*இலக்கை அடைவது உறுதி! என்றும் இழப்பில்லை!*
*பயணத்தின் வசதிகள் அவசியமே!*
*ஆயினும் பயணவழி முக்கியம்!*
*நம்பிக்கை – தன்னம்பிக்கை*
*வாழ்க்கைப் பயணத்தை உறுதி செய்தல் போல*
*நம்பிக்கை நமது வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக்குகிறது*
*அர்த்தமுள்ள வாழ்க்கைக்குச் சாவு இல்லை!*
*என்றும் வாழலாம்! என்றும் வாழலாம்!*

கு. XIV. 18.

## 96. நண்பன்

நண்பர்களை நண்பர்களாக நடத்துக!
நட்புக்குறுதியாக விளங்குக!
நட்பு வாழ்க்கையின் நிகழ்வுகளைத் தாங்கிக் கொள்க!
நட்பின் போக்கில் நெகிழ்ந்து கொடு!
நண்பருக்கு உண்மையாக இரு!
நட்டோருக்கு எப்போதும் தடையிலாத் தாழ்மைநலம்
பேணுக!
நட்டோர் மாட்டுப் பரிவும் உதவியும் காட்டுக!
எல்லாரும் கைவிட்ட நிலையிலும்
நீ, உன் நண்பனிடம் இரு!
உன் நண்பனுக்கு உதவ முன் வருக!
உன் உதவிக் கரத்தை நீட்டுக!
நட்பைப் பெறவும் நட்பின் சிறப்பை
நாளும் பேணுதற்கும் உரிய நாழிகை இதுவே!
உறவின் வளர்ச்சிக்கு விரைந்து முந்து!
மனமுறிவுகளுக்குப் பின்தங்கு!
நண்பர்களுடன் நெருக்கமாகப் பழகுக!
ஆயினும் நண்பர்களுக்குச் சுதந்திரம் தருக!
கடின கட்டுப்பாடுகளை விதிக்காதே!
நண்பனும் மூச்சு விட வேண்டும்!
உண்மையான நட்பு நயம்பட விளங்கும்!
சுதந்திரமான மூச்சு கூட உண்மையான நட்புக்கு இல்லை!
நீ வேறு; நண்பன் வேறல்ல!
இருவரும் ஒருவரே யானமையே நட்பு!

## 97. நீ, நீயேதான்!

*ஏ, மனிதனே! நீ! நீ!*
*நீ, எப்படி இருக்கிறாய்?*
*உன் மனத்தில் என்ன வைத்திருக்கிறாய்?*
*அவையே விடை உன்னுடைய சிக்கல்களுக்கு!*
*உன்னுடைய சிக்கல்களுக்குத் தீர்வு*
*உனக்கு வெளியே இல்லை! இது உண்மை!*
*உன்னுடைய சிக்கல்களுக்குத் தீர்வு*
*உன் உள்ளத்திலிருந்து வரவேண்டும்!*
*உன் சிக்கல்களுக்குத் தீர்வு காணக்கூடிய தகுதியை*
*உன் உள்ளத்தில் பெற்று வளர்க!*
*உன் சிக்கல்களுக்கு ஏற்ற மருந்தை உள்ளத்தே வை!*
*உன்னுடைய உள்ளமே உன்னை நெடுந்தூரம் எடுத்துச் செல்லும்!*
*உன்னுடைய மூளை கோட்டைகட்டவும் செய்யும்*
*அக்கோட்டையை அழிக்கவும் செய்யும்*
*ஏ, மனிதனே!*
*ஹெலன் ஹெல்லர் வரலாற்றைப்படி!*
*இயற்கை, அந்த மாதரசியைப்*
*பிறப்பில் பொறிகளை இழக்கச் செய்தது*
*பிறவிக் குருடு; கேளாக் காதுகள்! வாய் பேசா ஊமை!*
*ஆனால், அவளே அரிதில் முயன்று பட்டதாரியானாள்!*
*ஹெலன் ஹெல்லரின் சாதனை*
*உடல் ஊனமுற்றோர் இடையில் ஊக்கத்தைத் தந்தது!*
*அவள்தம் புகழும் நின்று நிலவுகிறது!*
*நீ, காற்றில்லா அண்டவெளியில்*
*தூக்கி எறியப்படவில்லை!*
*நீ, உறுதியைத் தேடு! உன்னைச் சுற்றி எண்ணிப்பார்!*
*நீ, நீயேதான்! என்றும் நீயேதான்!*
*எப்போதும் நீ, நீயேதான்!*

## 98. இதயக் குரல்!

ஓ, மனிதனே!
நீ தவறுகள் செய்வதில்லை என்று
உளமார உறுதிபூண்டால்
எல்லாம் நன்றாக நடக்கும்!
கோணல் இல்லாத மனச்சாட்சி பெறின்
கடவுளின் வரைபடத்தைக் கற்பவனாவாய்!
நீ ஒரு குரலாகப் பேசின்
அந்த ஒருகுரல் பல மனிதக் குரல்களை ஒக்கும்!
ஆம்!
ஒரு குரல் உடைய மனிதனாக உலகம் ஏற்கும்!
உலகவர் ஒப்புதல் பெற்ற குரல் -
உரத்த நிலையில் உறுதியாய் ஒலிக்கும்!
உறுதி வாய்ந்த ஒழுங்குமுறை
உன்னுடைய நடைமுறையாக அமையின்
உன் இதயம் நீதியைச் சார்ந்து நிலவும்!
நீ களைப்பு நீங்கிப் புத்துயிர்ப்பு பெறுங்காலை
இன்பமும் அமைதியும் கொண்டு வரும்!
தலைசாய்த்துப் படுக்க
இலவம் பஞ்சுத் தலையணை தேடுவதுபோல
மெல்லிய மனத்துடன் உறங்கிடுக!
மனச் சாட்சியை!
மற்றவர் வசையிலிருந்து மீட்டுக் கொள்க!

## 99. கசப்புணர்வு

*ஏன் கசப்புணர்வு கொள்கிறாய்?*
*என்ன குடியா முழுகிப்போய் விட்டது*
*எந்தச் சூழ்நிலையிலும் உன் வாழ்நிலையைக் கெடுக்கும்*
*கசப்புணர்வை ஏற்க வேண்டாம்*
*வெறுக்கத்தக்கதேயாயினும்*
*இதயப்பாதிப்பே ஏற்பட்ட சூழ்நிலையிலும்*
*அச் சூழ்நிலையை நன்மையால் மாற்றுக!*
*கசப்பு, கசப்பை ஈர்க்கும்!*
*கசப்புணர்வு தனக்குத்தானே உரமூட்டிக் கொள்ளும்*
*உயர்நிலை சார்ந்த அன்பை.*
*நாகரிகம் செறிந்த சீர்மிகு வாழ்க்கையைக்*
*கசப்புணர்வு கெடுக்கும்!*
*கசப்புணர்வுக்குரிய நியாயங்கள் இருக்கலாம்!*
*அவர் நிலைக்கு அதுசரியே என்று வாதிடலாம்?*
*அது உண்மையே யாகுக!*
*உண்மையில்லாமல் போனாலும் போகட்டும்!*
*துன்பம் தொடர்ந்து தாக்காமல்*
*மனிதன் குடிக்கிறான்!*
*குடிமயக்கத்தில் துன்பம் மறந்து போகிறது!*
*வாழ்நிலையில் இன்பம் காணும் உணர்ச்சி*
*ஆனால், இன்பம் இல்லை; உணர்ச்சியின் அளவே!*
*ஆனால், கசப்புணர்வு கொண்ட மனிதனிடத்தில்*
*எந்த சென்மத்திலும் மாற்றம் ஏற்படுத்தாது!*
*வேண்டாம் கசப்புணர்ச்சி!*

## 100. கானல் நீர் தாகம் தீர்க்குமா?

*ஒற்றுமை வேண்டும்; ஒருமைப்பாடு வேண்டும்!*
*ஆயினும் உதட்டளவில் ஒற்றுமை கவைக்கு உதவாதது!*
*நோக்கத்தால் ஆர்வத்தால் வேறுபட்ட மனங்களின்*
*ஒற்றுமை வெறும் மாயைத் தோற்றம்!*
*ஒற்றுமைக்கு இணக்கங்கள் தேவை!*
*உடன்பட்ட போக்குகள் தேவை!*
*ஒத்த கொள்கையுடைய வளர்ந்த மூளைகளே ஒன்றுபடும்!*
*இந்த உலகில் இது அபூர்வம்!*
*உடல் கீழ்த்திசை நோக்கிப் பயணம் செல்கிறது!*
*மனமோ எதிர்த்திசையாகிய மேற்கு நோக்குகிறது!*
*ஒற்றுமைத் தோற்றம் போதாது!*
*அது வெறும் கானல்நீர்!*
*கானல்நீர் தாகம் தீர்க்குமா என்ன?*
*நல்லிணக்கம் இல்லாத ஒற்றுமையால் பயன் என்ன?*
*வீணை இருக்கிறது! வீணைவாசிப்பவனும் அருகில் உளன்*
*ஆனால் வாசிக்கத்தான் மனம் இல்லை!*
*வீணைமட்டும் என்ன செய்யும்?*
*வீணைவாசிப்பவன் விருப்பத்துடன் வாசித்தால் தானே!*
*இனிய இசை கேட்டு மகிழலாம்!*
*இசைக் கருவியில் 'கீச் கீச்' ஒலி கேட்டால்*
*இப்போதோ சிலபொழுதிலோ அது ஒடிந்து*
*பயனற்று போகப் போகிறது என்பது நிச்சயம்!*
*ஒற்றுமைப் பண்புகள் இல்லாத ஒற்றுமை*
*ஒன்றுக்கும் ஆகாது; திருப்தியில்லை!*
*கருத்தொற்றுமையுடன் கூடிய ஒற்றுமை*
*மனநிறைவைத் தரும்; மகிழ்ச்சியைத் தரும்!*
*மற்றவர் கருத்தைக் கேட்டுப்பெறும் பாங்கு ஒற்றுமைக்கு அடித்தளம்*
*குஞ்சுப் பறவைகள் கூட்டுக்குள் ஒன்றுபட்டு வாழ்கின்றன!*
*ஆனால், நமது குழந்தைகளோ?*
*எழுதிக் காட்ட வேண்டுமா?*

## 101. எண்ணித் துணிக!

எவர்கூறும் எதையும் உள்வாங்காதே!
உள்ளத்திற்குள் எதையும் அனுமதிக்காதே!
முன்பே நமது உள்ளத்தில் அடைபட்டுக் கிடப்பன
ஆயிரம் ஆயிரம் செய்திகள்!
உள்ளத்தில் கிடப்பன உறுதிபெற
உற்றுழி உதவுவார் தேவை!
நல்லன தோன்றலாம்! ஆயினும்
நாம் நினைக்கிறபடி நாம் புத்திசாலியல்ல!
நல்லது தீயது கண்டு விலக்க
நமது புத்திசாலித்தனம் போதாது!
நாம் இருக்கவேண்டிய நிலையில் இல்லையே!
நல்லவர்களே கூடக் கூறலாம்!
ஆயினும் நம் நலனுடன் வேறுபடலாம்!
அவர் கூறுவதைப் பற்றிப் பேசுக! சிந்தனை செய்க!
இறைவன்முன் நிகழ்த்தும் பிரார்த்தனையானாலும்
நல்லது – தீயது காட்டும்படி இறைஞ்சுக!
அவர் கூறியன நினைந்தே உறங்குக!
விழித்து அசைபோடுக! ஆயினும்
உள்ளத்தில் விழுங்கி விடாதே!
அவர்தாமும் கூறும் செய்தி
நினக்கு நலம் பயக்கும் எனத்
தேறித் தெளியும் வரை கொள்ளற்க!
எவர் உரையும் எண்ணற்பாற்று!
எண்ணித் துணிக! துணிந்து தொழிற்படுக!
இதுவே வாழும் நெறி!

## 102. சுருங்கப் பேசு!

வாழ்க்கை சுருங்கியது; வாழும் நாள்கள் சிலவே!
இச்சில நாளும் செயலுக்குப் பயன்பட வேண்டும்!
உயிர்க்கு ஊதியம் தேடவும் பயன்படவேண்டும்!
ஆதலால்,
செய்திப் பரிமாற்றங்களில்
பெரும் பொழுது போக வேண்டாம்!
சுருக்கமாகப் பேசுக! சுருக்கமாக எழுதுக!
ஒரு சிறு துண்டுத்தாளில் எழுதக்கூடிய செய்தியை
முழுநீளத் தாளில் சுற்றி வளைத்து எழுதுவானேன்?
பேசிப் பேசிப் பொழுது கழிப்பதேன்?
திரும்பத் திரும்ப "விழா" "விழா" என்று பேசுவதேன்?
சொல்லும் செய்திக்குத் தொடர்பில்லாத செய்திகளைச்
சொல்லுவதில் யாது பயன்?
சுருக்கமாகப் பேசவேண்டுமா? சிந்தனை செய்க!
சிந்தித்தலும் சிந்தித்த செய்திகளைச்
சிலசொல்லி விளக்குவதும் உயர்திறன்!
உயர் இலக்கியப் படைப்பெல்லாம் சுருங்கியனவே!
ஔவையார் செய்த ஆத்திசூடியும்
வான்புகழ் வள்ளுவன் செய்த குறளும் ஓர்க!
சுருக்கமாகப் பேசு! முடித்துப் பேசு!
நீண்ட நாள் வாழவேண்டுமா? சுருங்கப் பேசு!

## 103. எதையும் முன்னே பார்!

கவலைகளைக் குழியில் போட்டு மூடு!
அப்படி மூடினால் பல சாவுச் சடங்குகள்
செய்ய வேண்டி வராது!
கவலைகளைக் குழியில் புதைப்பது எப்படி?
உலகத்தைக் கொல்லாமல் கொன்று அழிக்கும்
கவலையை வெற்றி கொள்வது எப்படி?
வாழ்க்கைச் சிக்கல்கள் வந்துறும் பொழுது
எரிச்சல் கொள்ளாதே! தீர்வுகாண முயலுக!
தக்கார் அறிவுரையைத் தேடிப் பெறுக!
எப்போதும் எதிர்வரும் திசையையே பார்!
பின்னோக்கிப் பார்க்காதே!
படைப்பிலே கண்கள் முன்னே பார்ப்பதற்குத்தான்!
பின்னே பார்ப்பதற்கல்ல!
உன்முன்னே பார்க்க ஏராளமானவைகள்!
வழித்தடம் முழுதும் வாய்ப்புகள் பல்கி உள்ளன!
தடைகளை, உன் மூளைகளிலிருந்து அகற்றுக!
அத்தடைகளைச் செயலற்றவை யாக்கு!
பயணம் இனிதே நிறைவுறும்!
உன் இடர்ப்பாடுகளை மதிப்பீடு செய்!
அந்த இடர்ப்பாடுகளைக் கடந்து செல்லும் ஆளைத்தேடுக!
வெற்றிக்குரிய வாயில்களை நாடுக!
உன் வாழ்க்கையின் சிக்கல்களை
வரும் முன்பே வரவேற்புக் கூறாதே! எதிர்கொண்
டழைக்காதே!
உன் வாழ்க்கையில் சிக்கல்கள் மேவி வரும்பொழுது
ஏற்று எதிர்கொண்டு தீர்வுகாண்க!
நாள்தோறும் வரும் சிக்கல்களுக்குத்
தீர்வுகாண நாள் போதவில்லை!
இன்று ஏன் நாளையப் பற்றிய கவலை?
துக்கத்தைப் போட்டு அமுக்கு! காப்பினைத் தேடுக!
கவலையை மற! வாழும் வழி இதுவே!

## 104. பொய் போக்கி வாழ்!

உண்மை பேசுதல் வசதி – சுகம்!
பொய் பேசுதல் தொல்லை!
ஒரு பொய் பல பொய்களை ஈன்றெடுத்து
உறங்கா நிலையை உருவாக்கும்!
உண்மையைப் பேசினால் மறக்கலாம்!
ஆனால், பொய்யோ மேலும் மேலும்
கண்டவாறெல்லாம் கேட்புகளை உருவாக்கும்!
அப்பட்டமான உண்மைக்கு மறைப்புகள் தேவையில்லை!
பொய்க்கு மறைப்புகள் தேவைப்படும்!
சொன்ன பொய்யினைப் பாதுகாக்கப்
பல்வேறு முயற்சிகள் தேவை!
பொய் வசதியுள்ளது போலத் தெரியும்!
ஆனால், பொய்க்கு வன்மப் புத்தியும்
பொய், பொய்யாகாமல் காக்க
நீங்கா நினைவாற்றலும் தேவை!
பொய், பொய்யென அறியப் பெற்றால்
ஆயிரம் ஆயிரம் இழப்பு!
உண்மையே பேசுக!
பொய் தேவை இல்லை!
குற்றத்திற்குப் பொய் தேவைப்படலாம்!
பொய் சொல்லிக் குற்றத்தை மறைப்பதற்குப் பதிலாக
வளர்ந்துவரும் பொய்களுக்குப் பதிலாக
உண்மையே பேசிப் புகழொடு வாழ்க!

## 105. வேண்டாம், தற்புகழ்ச்சி!

*கூவாத சேவல்; சிறகடித்துப் பார்க்காத சேவல்!*
*சேவல் சண்டைக்கும் தகுதியிலாது*
*கொழுத்து வளர்ந்த சேவல்!*
*எது எது இல்லையென்றாலும்*
*அதன் சதைக்காக ஏலம் போகும்!*
*கழுதை தான் கத்துவதன் மூலம்*
*விண்மீன்கள் உதிர்கின்றன என்று கூறலாம்!*
*ஆயினும் என்?*
*இந்தப் பேருலகில்*
*தற்புகழ்ச்சி எதையும் சாதித்தது இல்லை!*
*கேட்டதெல்லாம் கொடுக்கும் கடவுளிடத்திலும்*
*எதையும் பெற்றதில்லை!*
*தற்புகழ்ச்சிக்குத் தான்*
*இல்லாதது எது என்று தெரியாதே!*
*இன்றே புகழ்ந்து பேசி முடித்துக்கொள்ளும்!*
*நாளைக்கு என்று எதுவும் வேண்டாம்!*
*எப்படிப்பட்ட முடக்குவாதம்? வறட்சி? பகடித்தனம்?*
*உன்னை மக்கள் மதிக்க வேண்டுமா?*
*உன்னைப்பற்றிப் பேசுவதை நிறுத்திக்கொள்!*
*தற்புகழ்ச்சி பயனற்றது*
*வேண்டாம்! வேண்டாம்!*
*தனக்குத் தானே அடங்கு!*
*மண்ணில் மறைந்து ஓடிவளர்ந்து*
*மரங்களைச் செழிக்கச் செய்யும் வேர்களைப்போல*
*சமுதாயத்தின் வேர்களாகுக! வேர்களாகுக!*

## 106. நேற்று, இன்று, நாளை!

*நாளும் நாள்கள் கழிகின்றன!*
*ஓடிய நாள்களில்*
*உரிமைப்படுத்திக் கொண்ட நாள்கள் எத்தனை?*
*எத்தனை?*
*கடமைகளுக்குக் காலம் ஏது? வயது ஏது?*
*இன்றைய நாள் உன்னுடைய நாளாக ஆகுமா?*
*அல்லது உன்னிடமிருந்து*
*எனக்கே உரியநாள் தட்டிப் பறிக்கப்படுமா?*
*ஏன்?*
*நான் முயன்றால் இந்த நாளை*
*எனது வாழ்நாளாக உரிமைப்படுத்தலாம்!*
*இன்றைய நாளைப் பயன்படுத்தும் வகையில்*
*எனது பார்வை – பழக்கம் தொடங்கினால்*
*இன்றைய நாள் என்னுடைய நாளாகும்!*
*இல்லையெனில் இந்த நாள்*
*வம்புக்காம்! வழக்குகளுக்குமாம்!*
*தூர்த்தரும் கூற்றுவன் தூதரும் தட்டிப் பறிப்பர்!*
*நாளை உரிமைப்படுத்த*
*மூச்சுவிட்டால் போதுமா?*
*அல்லது சாகாமல் இருந்தால் போதுமா?*
*வாய்த்த இன்றைய நாளை வாழ்முதலாக்க*
*அயரா முயற்சியின் மேற்செல்க!*
*இன்று இளையாள் என்றும்*
*நாளை மறுநாள் மூத்தோள் என்றும்*
*பலபடக் கூறி உன் ஆள்வினைக்குத்*
*தடைகூறும் பயனில் உரைகளுக்குச்*
*செவிப்புலனைத் தராதொழிக!*
*அசைவில் முயற்சிக்கு வயதுகள் வரம்பல்ல!*
*நாள் வரும் போகும்; அந்த நாள்களை மூலதனமாக்கி*
*உரிமைப்படுத்தலே எனது பிறப்பின் பயன்*
*படைப்பின் பாங்கு!*

## 107. உன்னை மாற்றிக்கொள்!

*உன்னுடன் இருப்பவர்தம் குற்றங்களை*
*குற்றங்களின் விளைவாகிய குறைகளை*
*பழக்க இயல்பால் காணும் குறைகளை*
*எடுத்துக் கூறுவதைத் தவிர்த்திடு!*
*ஓடும் வண்டிகளின் சக்கரங்கள்*
*பழுதுறின் ஒலிக்கும்!*
*ஓடும்பொழுது ஒலிக்கும் சக்கரங்கள்*
*கிரீஸ் கூடுதலாகவே கேட்கும்!*
*ஆயினும் என்? சிலநாள்களில் ஓடாது நின்றுவிடும்!*
*அதுபோல, பணிகள் செய்யும் பாங்கில்*
*குறைகள் சொல்லிப் பழகுவார்*
*காலப்போக்கில் பணிசெய்யும் கவினுறு திறமையை*
*இழப்பர்*
*உன்னால் மாற்ற முடியாததைப் பற்றிப் பலபடக் கூறி*
*என்ன பயன்*
*எந்த மனிதர்களுடனும் ஒத்துப் போதல் பயன்மிகுதி!*
*குறை கூறுவதால் பயனே இல்லை!*
*ஒத்துப்போ! உன்னை மாற்றிக்கொள்!*
*எந்தச் சூழ்நிலையையும் இசைந்ததாக ஆக்கிக்கொள்!*
*இந்த உலகத்தின் தட்ப வெப்பங்கள்*
*மாறி மாறி வருகின்றன!*
*உடலுக்கு ஒத்து இன்பம் தராத*
*கடுங்கோடையும் கடுங்குளிரும் கூட*
*வரத்தான் செய்கிறது:*
*நாம் என்ன கோடையின் வெப்பத்தையா மாற்றுகிறோம்?*
*அல்லது கடுங்குளிரைத்தான் மாற்ற முயலுவோமா?*
*இல்லை! இல்லை!*
*நமது உடைகளை மாற்றுவதன் மூலம்*

*பருவ காலங்களின் பாதிப்புகளிலிருந்து*
*தக்க பாதுகாப்புச் செய்து கொள்கின்றோம்*
*இதுவே வாழும் முறை!*
*ஒத்துவராதவர்கள் மீது புகார் கூறுவதனால்*
*அற்ப மகிழ்வு தோன்றலாம்!*
*ஆனால் நமக்காக மழைபெய்து விடுவதில்லை!*
*அதுபோல*
*எல்லாம் உனக்கிசைய நடக்காது; நடந்து விடாது!*
*ஒத்துப்போ! ஒத்துழைத்துப்பார்!*
*அல்லது உன்னை மாற்றிக்கொள்!*

## 108. தந்தை

புலவர் புகழும் புறநானூறு
சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடன் என்று
அறமுரைத்தது அன்று!
ஆம்! ஒருவன் வாழ்க்கையை உருவாக்குவதில்
தந்தையின் பங்கு பெரிது!
ஒருவனின் வாழ்நிலைகள் தோறும்
தந்தையின் கொடை பொதுளுதல் இயல்பு!
ஆதலின்,
தந்தையின் சிறப்பு
பணிகளும் பணிகளிடைப் பெறும் பெயர்களும்
பலப்பலவாகும் என்று மேலைநாட்டார் குறிப்பர்.
அழிவில் செல்வம் உடையராயின் – "தந்தை!"
கழனி உழுது விளைவிப்பாராயின் – "pa"
என்றழைப்பர் மக்கள்!
தொழில் நுட்பம் தேர்ந்த தந்தையாயின் "pop"
என்றழைத்துப் பூரிப்பர் மக்கள்!
விளையாட்டுத் துறையில் வல்லவராயின் papa
என்றே அழைத்திடுவர்!
சமுதாயச் சிற்பியானாலும் papa என்று அழைப்பர்;
இவ்வாறு பலபெயரில் அழைப்பர்.
தந்தை ஒருவரே!
தந்தையே ஊனையும் உயிரையும் வளர்த்திடும்
செல்வ 'அப்பா'!
மனிதனின் வளர்ச்சியில்
தந்தையின் பங்கு அளப்பில!
தந்தை வாழ்க!

## 109. தந்தையைப் போற்று!

*தந்தை அன்பு இதயம் உடையவர்.*
*பெண்ணினும் பெருந்தக்க அன்புடையவர் தந்தை!*
*ஆயினும் தாயைப் போலத் தந்தை*
*தனது அன்பை நிருபணம் செய்ய இயலாது!*
*ஒருவன் வாழ்க்கையில் தந்தையின் பங்கு*
*உறுதிப்பாடுடைய உள்ளம் வழங்கல்;*
*போர்க்குணமுடைய வனாக்குதல்;*
*எதற்கும் எந்தச் சூழ்நிலையிலும்*
*ஆயத்தமாயிருக்கச் செய்தல்;*
*வாழ்க்கைப் போராட்டத்தை மென்மைப்படுத்துதல்!*
*தந்தை புறத்திணை ஒழுக்கம் பூண்டவர்!*
*ஓயாத வாழ்க்கைப் போராட்டம்;*
*ஏன் போராட்டம்?*
*தன்னால் நேசிக்கப் படுபவர்களைக் காக்க*
*வாழ்நாள் முழுதும் போராட்டம்!*
*தன்னால் நேசிக்கப் படுபவர்களுக்காக*
*ஓயாத போர்ாட்டம்!*
*தந்தையின் இதயம் தங்கம்*
*ஆயினும் இந்தத் தங்கத்தை*
*உலகம் காணத் தவறுகிறது!*
*நாள்தோறும் வாழ்க்கைப் போரை*
*நடத்துபவனே தந்தை!*
*அச்சமின்றி*
*உன்க்காக உன்தந்தை போராடியது அதிகம்!*
*தந்தையைப் போற்று!*

## 110. பெற்றோரின் அருமைப்பாடு!

இயற்கை சுழன்று சுழன்று
நாள்தோறும் ஏற்படும்
இழப்புக்களை ஈடுசெய்து வருகிறது!
இயற்கை எப்போதும் தவறுவதில்லை!
குழந்தைகள் பாதுகாக்கப் பெறுதல் வேண்டும்
ஆம்!
குழந்தைகள் மனிதனாகவோ, மங்கையாகவோ
வளரும் வரையில்
தந்தையே பொறுப்புடன் வளர்க்கின்றான்!
ஆனால் இந்த உலகம்
இளமை உருவாக்கம் பெறும் பாங்கை உணர்வதில்லை!
அதனால்,
தந்தையை வளரும் இளைய உலகம்
தன் வளர்ச்சிக்கு ஊறாக உள்ளவர் என்று
எதிர்ப்புணர்வுடன் காண்பதே மரபு!
மக்கள் தந்தை சாகும் வரையில்
அவர்தம் மதிப்புணர மாட்டார்கள்!
ஆனால்,
அவர்கள் தந்தையாகிற போது
தாம் நடத்தப்படும் விதம் அறிகிறபோது
தமது பெற்றோரின்
அருமைப் பாட்டை உணர்வர்.

௬-XIV-19.

## 111. தேய்ந்த சந்தனக் கட்டை!

*தரணியில் சிறந்த தந்தைக்குப் போற்றுதல்!*
*நமது தந்தையிற் சிறந்த வீரர் யார்?*
*தந்தையின் கண்ணீரும் செந்நீருமல்லவோ*
*நம்மை வளர்த்து உருவாக்கியது!*
*நம்மை வளர்த்து வாழ்வித்த தந்தையின் வீரம்*
*செருகளத்து வீரத்திற்கு ஒருபோதும் தாழ்ந்த தன்று*
*இந்த உலகிலிருந்து தப்பி ஓடாமல்*
*பொறுப்புகளைத் தட்டிக் கழிக்காமல்*
*தந்தையாகி என்னை வளர்த்த விவேகம்*
*நாள்தோறும் தந்தையின் தீரமும் திறமும்*
*எண்ணில் அடங்கா! என்னவென்று சொல்வது?*
*தியாகம் எது? அர்ப்பணிப்பு எது?*
*ஒருவர்தம் வாழ்க்கையை மற்றவர்க்காக*
*அர்ப்பணிப்புணர்வுடன் உழைத்தலே தியாகம்!*
*தந்தை இதைச் செய்தார்*
*நாள்தோறும் செய்தார்; பலநாளும் செய்தார்*
*சந்தனக் கட்டை அறைத்து அறைத்துத் தேய்வதைப்போல்*
*தனயன் வளர்ச்சிக்குத் தந்தை*
*தம்மைச் சிறுகச் சிறுக அழித்துக் கொண்டார்*
*வாழ்க்கை என்ன மலர்ப்பாதையா?*
*பொருளீட்டலும் வாழ்வும் நேர்கோடு போல்*
*ஒத்திசைந்து நிற்கவில்லையே!*
*வரவு குறைகிறது; செலவு கூடுகிறது!*
*இந்த இடர்ப்பாடு! மிக்க சூழ்நிலையில்*
*குடும்ப பாரம் தூக்கிச் சுமந்த*
*தந்தையின் வீரம் விளம்பும் தகையதன்று!*
*தந்தையின் நினைவு*
*நமது நீங்கா நினைவாக இருக்கட்டும்!*

## 112. தந்தையும் மகனும்!

இந்தியாவை ஆண்ட சக்கரவர்த்திகளில்
வரலாற்றுப் புகழ்பெற்றவர் பாபர்!
தன் அருமைப் புதல்வன் ஹுமாயூனுக்குத்
தன் உயிரை ஈந்து காக்க முன் வந்த உணர்வு,
உணர்வுக்கு ஓர் எடுத்துக்காட்டு!
தந்தையர் தன்னுயிர் ஈந்தும்
தனயர்களைக் காப்பாற்றும் தியாகம் செய்தனர்!
தனயர்களை நினைந்து நினைந்து குரல் கொடுத்த
தந்தையர்கள் எண்ணிக்கையில் பலர்!
தாய் பிரசவ வேதனையில் கிடந்துழன்ற போது
மருத்துவமனையின் தாழ்வாரத்தில்
தந்தை தவித்துப் புலம்பி நின்ற காட்சி!
மதலை ஒன்று மரணத்தின் நிழலில் வீழ்ந்தது.
அது தொடங்கி நடந்த வாழ்க்கைப் பயணம்
சூழ்கலியாகவே அமைந்தது
வாழ்க்கை வழித்தடத்தில் தனயர்கள் நலங்காத்துப்
பயணம் செய்த தந்தையின் நிகரில் இதயத்துக்கு
ஓராயிரம் இதயங்கள்
நிகரென்று கொட்டு முரசே!
தந்தையின் துயரமே தனயனின் ஆக்கம்
இதுவே உலகத்தின் நியதி!

## 113. நனிபுகழ் வெற்றி!

இடர்களும் துயர்களும் அடர்ந்த
அயர்வுடைய வாழ்க்கையை
அவலம் நீக்கி அன்புகலந்த இன்பம் தருவது
அன்பொடு கூடிய நம்பிக்கையின் பாற்பட்ட
பழக்கங்கள்! வழக்கங்கள்!
நமது பழக்கங்கள் நமது வலிமை!
நம்பிக்கையுறுதி யுடையோன்
சந்தையில் நல்ல விலைக்குப் போவான்!
அவன் செய்யும் பணியிலும்
அவன் ஓங்கி உயர்ந்து நிற்பான்!
நம்பிக்கை சார்ந்த வாழ்க்கை முறைமன்றங்களை நாடாது!
நம்பிக்கை சார்ந்த பழக்கத்திற்கு மாறான
எந்த ஒரு கருத்தையும் ஏற்காது!
நம்பிக்கையின் விலை கூடுதலாக இருக்கலாம்!
உணர்வு கலந்த நம்பிக்கை
நனிபுகழ் வெற்றியைத் தருகிறது!
பயங்களை விட நம்பிக்கை வலிமையானது!
நம்பிக்கை கட்டுப்படுத்தும் வரிச்சட்டம்!
நம்பிக்கை உரத்தகுரல் கொடுக்கும்!
உழைப்புக்கு உயர்த்திய கரங்கள்!
முன்னேறிச் செல்லும் நடை!
நம்புகிறார்கள்! நிற்கிறார்கள்!

## 114. காலக் கடிகாரம்

ஓ, மனிதனே!
உன் வீட்டுச் சுவரில் கடிகாரம் தொங்குகிறது!
அதன் முட்கள் நகர்கின்றனவா? ஓடுகின்றனவா?
கடிகாரத்தின் முட்கள் நகர்வதில்லை.
மெதுவாக நகர்வதாகத் தோற்றம்! முடிவாக ஓட்டமே!
கடிகாரம் ஓடும் ஓசை "டிக் டிக் டிக்"
காதில் விழுகிறதா? விழவில்லையா?
கடிகாரம் ஓடும் ஓசை இசையா, என்ன?
இல்லை! இல்லை!
அது மனிதனைப் பார்த்துத் திட்டும் குரல்!
ஓ, மனிதனே!
எவ்வளவு நேரம்தான் குற்றம் குறைகளையே
பேசித் தீர்ப்பாய்!
வாழ்நாள் ஓட்டைக் குடத்தில் அட்டிய நீரென
ஒழுகுவதை உணரமாட்டாயா?
ஏன்? போதும் போதும் புறம் பேசும் பழக்கமும்
பொல்லாங்கு பேசித் திரிதலும்!
இன்றே இப்போதே நல்லதைச் செய்
காலங்கடந்த பாங்கிலேயே
நன்மை தீமை நிர்ணயிக்கப்படுகின்றன!
இந்த மண்ணில் காலமே சிறந்த பொருள்!
காலமே வாழ்வு! வாழ்வே காலம்!
ஒன்றின்றிப் பிறி தொன்றில்லை!
காலத்தை வாழ்வாக்குக! வாழ்க்கையின் ஆக்கமாக்குக!
வாழ்க்கையைக் காலத்தின் பயனாக்குக!

## 115. தூய்மையே வாழ்வு!

*விநோதமான மனிதர்கள்! விசித்திரமானவர்கள்!*
*ஊரைச் சுற்றுவர்: அழுக்குகளைக் கண்டெடுப்பர்!*
*கண்டெடுத்த அழுக்குகளைப் பூசுவர்!*
*ஆயினும்,*
*அழுக்கை அழுக்கால் சந்திக்கமாட்டார்கள்!*
*உன்னால் அழுக்கை அகற்ற இயலுமா?*
*செய்! அழுக்கை நீக்கு! அழுக்கைத் தூக்கி எறி!*
*அழுக்கைக் காண்பவர் தூய்மையில் ஆர்வலர்!*
*தூய்மைகாணும் ஆர்வம் இல்லையேல்*
*ஏன் ஒருவர்மீது அழுக்கை வாரிப்பூசவேண்டும்?*
*அழுக்குடையார்மீது மேலும் அழுக்கைச் சேர்ப்பதில்*
*யாது பயன்*
*சிறுமை தூற்றுவது குறையே!*
*வெறுப்பின் காரணமாகவும் ஒருவனின் அழுக்கைக்*
*காணாதே!*
*அழுக்கை அள்ளி வீசாதே!*
*நீ வீசும் அழுக்கை அவர் திரும்ப வீசலாம்!*
*அழுக்கை அகற்றப் பாடுபடுக!*
*அழுக்குக் கையுடன் சுத்தத்தைத் தீண்டி*
*அழுக்குப்படுத்துவதனால் யாது பயன்?*
*பிறர்தம் அழுக்குகளை அகற்றுக!*
*தூய்மையே பேசுக!*
*தூய்மையே வாழ்வு!*

## 116. குற்றம் காணேல்!

குற்றங்கள் காண்பது எளிது! ஏன்?
குற்றங் காண்பதில் காண்பவன் மனநிலையே
வெளிப்படும்!

மலர்ந்து மணம்வீசும் பூந்தோட்டத்தில்
பிணந்தின்னும் கழுகுகள் பறந்தாலும்
மணம் நுகரா: அழுகிய பிணம் தேடிடும்!
அதுபோலக் குற்றமே காணும் இயல்புடையோர்
ஒருவர்மீது குற்றம் காணும் முயற்சியால்
பல நல்ல குணங்களைக் காணத் தவறுகின்றனர்
குற்றமே காணும் போக்கு வளர்கிறது!
காணப்படும் குற்றங்கள் காணப்படும் இடத்தில்
உண்மையாக இல்லை!
குற்றம் காண்பவரிடமே குற்றங்கள் உள்ளன!
உதவியும் ஒத்துழைப்பும் தந்து
ஒருவரை வாழ்க்கையில் உயர்த்துவதற்குப் பதில்
குற்றம் காண்பதில் யாதொரு பயனுமில்லை!
குற்றம் காணும் முயற்சியைத் தவிர்த்துக்
குணங்களைக் கண்டு தூண்டி வளர்த்தால்
இருபாலும் பயனும் பண்பும் விளையும்!
குணமே காண்க! குணமே கொள்க!

## 117. சூடான உணர்வு

தலைமை சூடாக இருக்கும்போது
எந்தச் சூழ்நிலையிலும் தலையிடுவது நன்றன்று!
இரும்பு தனது கடினத்தன்மையை இழப்பின்
கூர்மையையும் இழக்கும்!
அதுபோலத்தான் மனிதனும் கடினமான சுபாவத்தை
இழப்பின்
நுழைபுலத்தை இழப்பான்!
எவரும் தமது கடின உணர்வுகளை இழப்பது
கடினமான காரியமல்ல!
வெகுளுதற்குரிய நேரம் கண்டு வெகுளுதல்,
வெகுள வேண்டியதற்காக வெகுளுதல்,
அனைத்தும் அறிந்து வைத்துக் கொண்டு வெகுளுதல்
நன்று!
இது அவ்வளவு எளிதன்று!
பெரிய மனிதர் தம்மினும் எளியாரை நோதல் –
தம் உணர்வுநிலை தவறுதல் பிழை!
உணர்வில் பெரிய மனிதர்
குளிர்ந்த உணர்வுகளைச் சுமந்த மனிதர்
மனித நேயச் சந்தையில் தீவிரமானவர்
பெருந்தகைமை உடையவர்
ஒரு பொழுதும் ஓங்கி அடிக்கமாட்டார்!
சின்னப் பாத்திரம் எளிதில் சூடேறும்!
அது போல, சின்ன மனிதர் எளிதில் சூடேறி விடுவர்!
பெரிய மனிதர்கள் உணர்வு நிலையில்
இம்மியும் எளிதில் வீழார்!
போதும்! போதும்! உணர்வுநிலை இழவற்க!
உணர்வுநிலையைத் தற்காத்திடுக!
செயல் துடிப்புடைய கடின உணர்வில்
நின்று வாழ்க!

## 118. பழியும் பதிலும்!

ஓ, மனிதனே!
நல்ல வேட்டை நாய் தெள்ளுப்பூச்சிகளை
வேட்டையாடுவதில் காலங் கழிக்குமா ?
கழிக்காது! ஆனால்,
வளர்ந்த மனிதர்களும்
அற்பச் செயல்களில் காலத்தைக் கழிப்பர்!
ஓ, மனிதனே!
உன்னைப் பழிதூற்றுகிறார்களா?
உன்னைப்பற்றி இல்லாதன, பொல்லாதன
பேசுகிறார்களா?
அவைகளுக்குப் பதில் சொல்ல முந்துகிறாயா?
வேண்டாம்! வேண்டாம்!
அர்த்தமற்ற பழிச் சொல்லுக்குப் பதில் சொல்வதென்றால்
காலமெல்லாம் போய்விடும்!
உருப்படியாக எதையும் செய்ய இயலாது.
பழி தூற்றலுக்கு விடை எது?
கடமையைச் செய்து முடித்தலே பழிக்குப் பழி!
பழி தூற்றலுக்கு யாதொரு பதிலும் கூறாதே!
செயலே விடை!
உண்மைகள் உலகில் பரவ நீண்டநாள் பிடிக்கும்!
பொய் எளிதில் பரவும்; ஆனால், உண்மை உணரப்படும்!
மதிப்பீடு பெற வாய்ப்புண்டு!
மதிப்பீட்டுலகம் வதந்திகளைப் புறத்தே தள்ளும்!
வதந்திகளைப் புறத்தே தள்ளு!
மனிதனுக்கு எதிராகப் பழிபல கூறினும்
மறைமுகமாகச் சொல்லப்பட்டாலும்
கோள்மூட்டினாலும்
சான்றோர் செவி பொருந்திக் கேளார்!
உண்மை பேசுவோர் நேர் நிற்பர்!
நேர்மையாளர் நெறிமுறை பிறழ்தல்
ஆகாது! ஆகாது!

## 119. தலையாய ஞானம்!

*உன் உணர்ச்சி உன் கட்டுப்பாட்டில் இருக்கிறதா?*
*அல்லது உணர்ச்சி வெள்ளமாகக்*
*கரைபுரண்டு இயங்குகிறதா?*
*உணர்ச்சி - எல்லையிகந்த உணர்ச்சி*
*மனிதனை வீழ்த்தும்!*
*மனிதன் உணர்ச்சிகளைவிட உயர்ந்தவன்:*
*என்ற ஞானம் உணரப்படவேண்டும்!*
*மனிதன் உணர்ச்சிகளை வென்று*
*வாழ்க்கையை அறிவார்ந்த நெறியில் இயக்க வேண்டும்!*
*இந்நிலை மனிதர்க்கு வந்திடின்*
*மனிதன் வளர்வான்! நாளும் வளர்வான்!*
*அவன் உணர்ச்சிகள் வசப்பட்டு விட்டானா?*
*கீழ்மை நிலையை எய்துவான்!*
*நீ தெரிந்துகொள்! நீ யார்?*
*உன் உணர்ச்சிகள் என்ன? என்ன?*
*"தம்மை உணர்தலே தலையாய ஞானம்"*
*என்றுரைத்த மெய்கண்டார் வாக்கு உணர்க!*
*தம்மை உணர்தல் தன்னைக் காணல்*
*உள்ளொளி பெருக்கும்;*
*உள்ளொளியில் பலமும் தெரியும்; பலவீனமும் தெரியும்!*
*உன் வாழ்வுக்குக் கடினமுயற்சி தேவை!*
*நெருப்புச்சுட்ட புண் ஆறும்!*
*நெருப்புச் சுட்ட விரல்களைத் தடவிக் கொடுத்து*
*வறிதே காலம் கழிக்காதே!*
*தீயினைத் தெரிந்து கொள்! தீயை அணை!*
*உணர்ச்சிகளைத் தடுத்து நிறுத்து!*
*ஆறுகளையும் உணர்ச்சிகளையும் தடுத்து நிறுத்தி*
*வேகம் கெடுத்துப் பயன்படுத்த வேண்டும்!*
*உனது நம்பிக்கைகளைக் காக்க*
*நம்பிக்கைகளும் நல்லெண்ணமும் உடையவனாய் இரு!*
*உனது நம்பிக்கைகள் உறுதியாகக்*
*கடினமாக உழைத்திடு!*

## 120. எது சுதந்திரம்?

ஜகத்தில் உயர்ந்த ஜனநாயகத்தைக் காப்போம்!
ஜனநாயக முறைகளைக் காக்க உறுதிபூணுவோம்!
மக்களை நம்ப வேண்டும்!
மக்கள் தங்களைத் தாங்களே கணித்துக்
கட்டுப்படுத்திக் கொண்டு ஆட்சிசெய்து கொள்வோம்
என்ற அசையா நம்பிக்கையே ஜனநாயகத்தின்
அடித்தளம்!
இந்த ஜனநாயகம் புனிதமான தத்துவம்!
வீரர்களின் செங்குருதியில் குளித்து எழுந்த கொள்கை!
மனத் துணிவுடைய மகளிரின் கண்ணீரால் கழுவப் பெற்ற
கொள்கை
இந்த உயரிய ஜனநாயகத்தை
நமது தவறுகளாலும் செயலின்மையாலும்
அழியவிடக் கூடாது!
ஜனநாயகத்தின் வெற்றி மக்களிடத்தில் இருக்கிறது!
மனித சமூகமும் அரசும்
ஜனநாயகத்தின் பிரிக்கப்படாத பகுதிகள்!
தன் கட்டுப் பாட்டில் வளரும் அரசியலில்
தங்களைத் தாங்களே ஆட்சி செய்து கொள்ளும்
அரசைக் கண்டு முறைப்படுத்தும்
ஜனநாயகம் எல்லாரையும் மதிக்கும்!
சமூக மதிப்பீடும் உண்டு; தனிமனித மதிப்பும் உண்டு!
உண்மையான சுதந்திரம் சுதந்திரத்துக்கு இல்லை!
சுதந்திரம் எதற்காக என்பதே கேள்வி!
உண்மையான குறிக்கோளில் சுதந்திரம் அடங்கும்!
சுதந்திரம் பிறருக்குத் தீமை செய்வதற்கல்ல!
சுதந்திரம் பிறருக்கு நன்மை செய்வதற்கே
சுதந்திரத்தின் மறுபெயர் உதவி!
மனிதநேயம் சமுதாயத்தைக் கட்டுமானம் செய்கிறது!

## 121. நல்லதை நாடு!

*நல்லதை நாடு; நல்லவனாக இரு*
*நாட்டின் தலைவனைவிட நல்லவனுக்கே மதிப்பு!*
*நன்மையும் தீமையும் மக்களால்*
*வாழ்வியல் சூழல் நோக்கி வரவேற்கப் பெறும்!*
*நல்லதற்காக நல்லது மக்களை எளிதில் ஈர்ப்பது!*
*ஆயினும்,*
*எந்த ஒரு பணிக்கும் தகுதி*
*அவன் நல்லவனாக இருப்பதும் நல்லது செய்வதுமேயாம்!*
*பாரில் உயர்ந்த மனிதர்கள்*
*எண்ணாமலே, சிந்திக்காமலே பேசுவர்!*
*பெரியவர்கள் உண்மையாகவே பெரியவர்கள்:*
*அவர்களின் சிந்தையும் சொல்லும்*
*ஒரு படித் தாயின!*
*நல்லதையே எண்ணுவர்*
*முடிவிலா நன்மையே குறிக்கோள் எனக் கொள்வர்.*
*எது நல்லதோ அந்த நல்லதையே செய்வர்*
*நன்றும் தீயதாதல் உண்டு;*
*தீயதும் நன்றாதல் உண்டு!*
*ஆயினும்,*
*இருளை அகற்ற ஒளிவிளக்கு ஏற்று!*
*கசப்பானவைகளுக்கு ஈடாக இன்பத்தைத் தருக!*
*நன்மையே நாளும் வளர்ந்தோங்குக!*

## 122. கடவுட் பிரார்த்தனை!

நான் நனிசிறந்த எண்ணங்களுடன்
கடவுளைப் பிரார்த்தனை செய்கின்றேன்
நான் ஒவ்வொரு நாளையும்
எனக்கு உரிமைப்படுத்துவேன்!
ஒரு நாளும் வீணாக அனுமதியேன்!
முன்னோக்கியே பார்ப்பேன்!
பின்னால் பார்க்கவே மாட்டேன்!
இறைவனே! எனக்கு அமைதியைக் கொடு!
என்னை விவாதங்களிலிருந்து விடுதலை செய்!
தீமையே செய்யினும்,
மனக் கசப்பிலிருந்தும்
பகைக்குப் பகை எனும் உணர்விலிருந்தும்
பழிக்குப் பழி வாங்கும் உணர்விலிருந்தும்
என்னை மீட்டெடுப்பாய் இறைவனே!
மக்கள் அனைவருக்கும் நட்பாளனாய்
நயந்து வாழ்ந்திட அருள் செய்க!
என்னைப் பகைப் போரிடமும்
அன்பு செய்யும் இதயம் தருக!
நான் என்னுடைய தவறுகளைச்
சடுதியில் உணரும் திறமருள்வாய்!
கண்ட அப்பொழுதே திருத்தங் காணும்
பெற்றிமையை அருள் செய்க!
பாரில் சிறந்த பரந்த மனப்பான்மையையும்
பாரினில் எவருக்கும் அன்புகாட்டும் தன்மையையும்
உதவிகள் செய்திடும் உத்தம வாழ்வினையும்
அருள் செய்க!
தீமையை வெறுக்கவும்!
நாளும் நன்மையைக் கடைப்பிடித்தொழுகவும்
மனிதனாக வாழும் வலிமையை
அருள் செய்க!

## 123. கவலைக் கடல்!

ஓ, மனிதனே!
நெஞ்சில் கவலை நிதமும் பயிராக்கிக்
கவலைக் கடலுள் மூழ்குகிறாயா?
ஐயோ, பாவம்! வேண்டாம்! வேண்டாம்! எழு!
உன் கவலைகளை ஆழப்போட்டுப் புதைத்து விடு!
ஒரு தடவை கவலையைப் புதைக்கக் கற்று விட்டால்
தொடர்ச்சியாகப் பல கவலைகளைப் புதைக்கலாம்!
பல தாமே புதை குழி நாடிடும்!
மனிதகுலத்தைக் கொல்லும் கவலையை
அறவே விலக்கு!
கவலையின் வாசனையே வேண்டாம்!
உனது சிக்கல்களை ஆய்வு செய்க! தீர்வு காண்க!
கவலை ஒருபோதும் தீர்வு தராது!
தக்கார் அறிவுரையை நாடிப் பெறுக!
அந்த அறிவுரை சிக்கல்களுக்குத் தீர்வுகாணத்
தூண்டித் தொழிற்படுத்தும் என்பதறிக!
முன்னேபார்! பின்னே பார்க்காதே!
உன்முன்னே உள்ள அகன்ற பாட்டையில்
எண்ணில் அடங்கா வாய்ப்புக்கள் உள்ளன!
உன் மூளையிலிருந்து இடர்ப்பாடுகளை அகற்றுக!
இடர்ப்பாடுகள் என்றும் ஏற்கலாகாதவை!
உன்னுடைய இடுக்கண்களைக் கணக்கிடு!
நீண்ட தொலைநோக்கு பெறுவாயாக!
வாய்ப்புக்களும் வெற்றிகளும் வேண்டின்
நெடிய பார்வை தேவை!
உன் சிக்கல்கள் உன் கதவைத் தட்டும் பொழுதே

*பொறுப்புடன் ஏற்றுத் தீர்வு காண்க!*
*இப்படி நடக்குமா? அப்படி நடக்குமா? என்றெல்லாம்*
*ஐயப்பட்டுச்*
*சிக்கல்களுக்கு வரவேற்பு வழங்க வேண்டாம்!*
*கவலைகளுக்கு என்று நாளா இல்லை!*
*எந்தச் சூழ்நிலையிலும் கவலை இடம்பிடித்து விடும்!*
*துக்கத்தைப் புதை! ஆக்கத்தைத் தேடு!*
*கவனம் நிறைந்த அறிவறிந்த ஆள்வினையே*
*வாழ்க்கையின் ஆக்கம்!*

## 124. ஏசுவின் மொழி!

*மதம் கட்டை விரலில் ஏற்பட்ட புண் போன்றது!*
*எப்போதும் அவர்கள் தம்முடைய மதநெறியிலேயே நடப்பர்!*
*அதாவது, மனிதராய் இல்லாமல் மதம் கூறும் வழியே நடப்பர்!*
*சிலர், மனித குலத்தோடு ஒத்ததறிந்து*
*பழகும் பாங்கியலை மாற்றிக் கொள்வர்!*
*மாற்றம், பச்சோந்தித் தன்மையதல்ல; வளர்ச்சியைக் குறிக்கோளாக உடையது.*
*சிலர், மனிதகுலத்தின் உறவு கருதி மதத்தையே விட்டு விடுவர்!*
*பலர், ஒன்றோடொன்று ஒவ்வாத*
*மனிதம் – மதம் இவற்றிடைக் கிடந்து புழுங்குவர்;*
*இதன் விளைவு, எதிர் விளைவு!*
*கடவுளுக்கு நன்றி கூறி விடைபெறுதல்;*
*மாந்தர் வாழும் வீதிக்குச் செல்லுதல்!*
*ஒருபோதும் மனிதகுலத்தோடு பொருந்திவராத மதத்தினை*
*அரைகுறையாகத் தழுவி நிற்றலினும் ஒருசேரக் கைவிடுதலே நன்று!*
*வாழ்க்கையில் அவலமா?*
*உன் வாழ்க்கையின் நிகழ்வுகள் ஒழுங்கில்லாமல்*
*வலவரின் கட்டுப்பாடின்றிச் செல்லும் ஊர்திபோல் நிகழ்கின்றனவா?*
*அஞ்சற்க! இருவழி தீது என்று உணர்க!*
*ஒரே வழி தேர்வு செய்க!*
*உள்ளார்ந்த அன்பளிப்புணர்வே.*
*இருவேறு மனமாகத் திரியும் மனத்தைத் திருத்தி*
*ஒருபாதையில் நடக்கச் செய்யும்!*

ஞாயிற்றுக்கிழமைகள் மனிதனின் அளவீடு சாதனமே!
மற்ற எல்லாக்கிழமைகளிலும் என்ன செய்தாய்? எப்படி
வாழ்ந்தாய்?
என்பதை – மனித மதிப்பீட்டைச் செய்யும் சாதனம்!
"என்பின்னால் எல்லாருமே வரலாம்!
ஆயினும், எவன் தன்னை மறுத்தவனோ?
சிலுவையைத் தாங்கித், துன்புறத் துணிந்தவனோ?
அவனே என்பின் வருபவன்! என்னைத் தொடர்பவன்"
என்ற
ஏசுமொழி இதயத்தில் தாங்குக!
மதத்தினும் உயர்ந்தது மக்கட்பணி!
௫.XIV.௨௦.

## 125. அறம் பிற செய்யாமை

பூவுலகில் பொய் பிறந்த வரலாறு அறியோம்!
எங்கும் பொய்யின் ஆட்சியே!
ஊனும் உயிரும் உருகும் வாசகம் தந்த
மாணிக்கவாசகனாரும்
"பொய்" என்று சொல்ல அஞ்சி
"பொய்யர்தம் மெய்" என்றே மொழிந்தார்!
ஒரு பொய்யைச் சொல்லுவதற்குப் பதிலாக
முகத்தில் காறி உமிழ்ந்து துப்பலாம்!
பொய், சொல்வோருக்கும் ஆபத்து!
பொய், கேட்டோருக்கும் ஆபத்து!
பொய் சொல்லப் பழகின்
பொய்க்கே கொத்தடிமையாய்
உழைத்திட வேண்டி வரும்!
பொய் நிறையக் கோரிக்கைகளை வைக்கும்!
பொய்யை மறைக்க முயற்சிகள் தேவை!
உண்மைக்கு மறைப்பு வேண்டாம்!
பொய்யை மறைக்க நிறையத் தேவை!
பொய்யின் தேவைகள் வளரும்!
பொய்! – தற்காலிகமான வசதி! அவ்வளவுதான்!
பொய் புகலுவதற்கு நினைவு தேவை!
"பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று" என, மொழிந்த
திருக்குறள் தேர்க! தெளிக!

## 126. துணிவும் வலிமையும்

'மனிதன் மனிதனாக விளங்கட்டும்'
மனிதன் மனிதனாவதில் வெற்றி பெறின்
அவனுடைய மனப்போரில் வெற்றி பெறுவான்!
எந்த மனிதனும் விளையாட்டுப் பிள்ளையாக விளங்கி
எதையும் இழக்கலாம்!
அல்லது விளையாடும் குழந்தையாக விளங்கலாம்!
அல்லது பருவம் பூத்துக் குலுங்கும் இளமையாகி
விளையாடலாம்!
எப்படி இருந்தால் என்ன? மனிதனல்ல!
எவன் மக்களுக்குப் பயன்படுவதில்
அடிமையாக இல்லையோ,
அல்லது வெற்று மனிதனாக இல்லையோ, அவன்
துணிவும் வலிமையும் உடையவனாகித்
துன்புறு தொல்லைகளைக் கடந்து நிற்பான்!
உன் இதயத்துக்குள் இரண்டு மனிதர்கள்
கச்சைகட்டிக் கொண்டு போராடுகின்றனர்!
நல்லது வெற்றி பெற்றால்
நீ, உன்னையே காண்பாய்!
நீ, வாழ்க்கைப் போரில் வெற்றி பெறுவாய்!
நீ, மனிதத்தில் வெற்றி பெறுவாய்!
நீ, மனிதனாவாய்!
மனிதம் மேன்மையுறும்
நீ, மனிதனாகிவிட்டால்
மற்றெல்லாம் உன் நிழல்!
இந்த ஞானம் ஞானிக்கு உரிமையுடையது!

## 127. முயற்சியே வெற்றி!

இன்று என்னுடைய நாள்!
எனக்குச் சில இலக்குகளை அடைய வேண்டும்!
கோல் போடாத கால்பந்து விளையாட்டுப் போல
நான் என் இலக்குகளை அடைய வில்லை!
இது உண்மை!
ஆயினும், இலக்குகளை இழந்து வாழ்தல் இயலாது!
இது உறுதி!
கோல் போடாத நிலையில் விளையாட்டை இழக்கலாம்!
கோல் போடாது போனாலும்
திறமையாக விளையாடுவதில் விளையும் பயன் உண்டு!
'நன்றாக விளையாடினான்' - என்ற புகழ் கிடைக்கும்!
கோல் போடாதது அதிர்ஷ்டத்தின் பாற்பட்டது என்று
ஊரார் கூறுவர்!
அதா அன்று,
என் இலக்குபற்றிய பிடித் தளர்வுகளால்
இலக்கு நழுவி விடுமாயினும்
எனக்கு இழப்பு இல்லை! எப்படி?
நான் செய்த முயற்சியின் பயன் நாளின் மதிப்பைவிடக்
கூடுதலாயிற்று.

நான் அடைந்தவை சிலவே!
அவற்றையும் கூடி நிற்பவர்கள் கொச்சைப்படுத்துகின்றனர்;
எனக்கும் உண்மையில் மனநிறைவு இல்லை!
ஆயினும், இந்த முயற்சியும் பிரார்த்தனையும் இல்லாமல்
வறிதே வாழ்நாளைக் கடத்தியிருந்தால்
இன்றுள்ள நிலைக்கும் கீழே தள்ளப்பட்டிருப்பேன்!
முயற்சியுடன் கூடிய வாழ்வின் உள்ளடக்கம்

உண்மையில் வெற்றியே!
ஆதலால், தோல்வியென்பது ஒன்றினைச்
செய்யாமையேயாம்
நாளை முயல்வோம்! வாழ்நாள் முழுதும் முயற்சியின்
முனைப்பிலேயே கழியட்டும்!
முயற்சி வெற்றிகளின் படிகள்!
இன்று, நாளை இடையீடின்றிச் சுழன்று வருவதைப் போல
முயற்சியும் தடம்புரளாமல் அடிமேல் அடியாக அமையின்
வெற்றி உறுதி!

## 128. கடவுளை நம்பு!

*கடவுளை நம்பு!*
*இன்றும் நாளையும் உத்தர வாதம் வேண்டுமா?*
*கடவுளை நம்பு!*
*பயத்திலிருந்து நம்மை மீட்பது கடவுள் நம்பிக்கை!*
*அச்சத்தை ஒழித்து ஆளுமையைத் தருவது கடவுள் நம்பிக்கை!*
*மழை மேகங்கள் நலம் செய்யும்!*
*இரவு அமைதியைத் தரும்!*
*நம்பிக்கை என்ன சொல்கிறது!*
*அடியை எடுத்துவை! அடிமேல் அடியெடுத்து வை!*
*முன்னோக்கி நட! பயிர்களைப் பயிர் செய்!*
*பயிர்களைக் காத்துப் பயன்காண உழைப்போம்!*
*வீடுகளைக் கட்டுவோம்! தொழில்களை விரிவாக்குவோம்!*
*பள்ளிக்குச் செல்வோம்! தொழில்களைத் தொடங்குவோம்!*
*விடியலை எதிர்நோக்குவோம்! திட்டங்களைத் தீட்டுவோம்!*
*திட்டங்களை நிறைவேற்றும் பணியில்*
*உலைவின்றித் தாழாது உழைப்போம்*
*நமக்கு நாமே எவ்வளவு நன்மை செய்து கொள்வோம்!*
*எவ்வளவு இயலுமோ அவ்வளவு செய்து கொள்வோம்!*
*பணிகளைப் பாங்குறச் செய்வோம்.*
*கடவுளிடம் ஒப்படைப்போம்!*
*இந்த வையகத்தில் வாழும் மாந்தருக்கெல்லாம்*
*நன்மை அருள்க என்று*
*இறைவனைப் பிரார்த்திப்போம்!*
*நாள்கள் நம்முடையன! இரவுகளும் அப்படியே!*
*விண்ணகத்தின் செயற்பாட்டில்*
*நாம் தூங்கும்பொழுதும் விளக்குகள் எரிகின்றன!*
*கடவுளே உன்னை நம்புகின்றேன்!*
*என்னை ஒப்படைக்கின்றேன்!*
*என் வாழ்நாள்கள் நின் பொறுப்பில் உள்ளன!*
*வழி காட்டுக! வழி நடத்துக!*

## 129. ஒழுக்கம்!

நீ யார்? உன் பலம் எது?
தனிமனிதனின் வலிமை ஒழுக்கத்தைச் சார்ந்தது!
அடித்தளத்திற் கேற்பவே எழுப்பிய கட்டடம் நிற்கும்;
எவருடைய வாழ்க்கையும் அளவைக்கு வருதல்
நீதி சார்ந்த வாழ்க்கைமுறையே யாகும்!
பலவீனம் பலத்தைக் காக்க முடியுமா?
ஒழுக்கமிலாதார் எவருக்கும் உதவ இயலாது!
நெருக்கடியில் தோன்றும் சில பழக்கங்கள்
ஒழுக்கமாகா:
நெருக்கடி காலத்தில் நீ வெளிப்படுத்துவதே ஒழுக்கம்!
என்றும் நல்லவனாக இருப்பதே ஒழுக்கம்!
ஒழுக்கம் என்பது ஒருநாள் சரக்கல்ல!
பலநாள் எண்ணங்கள்; செயல்களின் திரட்சியே
ஒழுக்கமென உணர்க!
ஒழுக்கம் என்பது ஒன்றல்ல!
ஒழுக்கம் என்பது நீ எப்படி ஆனாய் என்பதுதான்!
நீதான் ஒழுக்கத்தின் ஒரு பெயரால்
விளங்கித் தோன்ற முயலுக!
நீ எப்படி இருக்கிறாய் என்பதே கேள்வி!

## 130. முள்ளும் மலரும்!

வாழ்க்கையைக் கவனமாக நடத்துக!
வாழ்க்கையின் பொறுப்புக்களைக்
கவனமாக ஏற்க வேண்டும்; இயற்ற வேண்டும்!
பொறுப்புக்களில், கவனம் தவறின்
பொறுப்புக்கள் நம்மைத் துரத்தும்!
இன்றையநாள் நம்முடைய நாள்!
தேவையில்லாத பொறுப்புக்களைச் சுமந்து
நாள்களைக் கழிப்பானேன்?
நான் வாழ ஆசைப்படுவது உண்மை!
நான் வாழ்க்கையின் அக்கரைகளைத் தேடுகின்றேன்!
ஆயினும்,
வாழ்க்கையை அலைக்கும் ஆசைகளினாலும்
கனவிலும் இன்னாததாகிய கவலையினாலும்
அழியவிட மாட்டேன்!
அரிப்புத் தொல்லைகளுக்கு இரையாகமாட்டேன்!
என்வாழ்க்கை ரோசாச்செடி போன்றது!
ரோசாவில் மலர்கள் மட்டுந்தானா?
மறைவாக முட்கள் இல்லையா?
அதுபோல என் வாழ்க்கையிலும்
மறைந்துள்ள சங்கடங்கள் தெரிகின்றன!
அதுவாகத் தலைகாட்டும் வரையில்
முட்களை எவர்தொடுவர்! நான் தொடேன்!
விமானப் பயணத்தில் தோளில் மூட்டையைச்
சுமப்பது ஏன்?
வாழ்க்கைப் பயணத்தில் ஏன்கவலைகள்?
துன்பங்களை மற! மகிழ்வோடு முயலுக!

## 131. தந்தைக்குத் தந்தை

*நீ, ஒரு தந்தை!*
*ஆதலால் பள்ளியுமாவாய்!*
*தந்தையாதலும் கல்வியின் பாற்பட்டதே!*
*தனயனைப் படிப்பித்து வளர்த்து*
*தனயன் இதயத்தில் தந்தை இடம்பிடித்தல் வேண்டும்!*
*நற்றிருமகள் ஒருத்திக்குத் தந்தையாகி*
*அணைத்து வளர்த்து இதயந்தழுவி நிற்கும் இன்பம்!*
*கவனமாகப்பார்: தொடர் கண்காணிப்புச் செலுத்துக!*
*வளர்ப்பில் விழிப்புணர்வு கொள்க!*
*தூங்கற்க!*
*தூங்கி, ஒரு எதிர்கால வரலாற்றைப் பாழாக்காதே!*
*தந்தையின் மந்திரமிக்க சொல்லும்*
*தந்தையின் வாழ்நிலை முன் உதாரணமாகவும்*
*பயமற்ற தைரியமும்*
*இளைய தலைமுறையின் மீதுள்ள பிடிப்பும்*
*குழந்தைகளுக்குக் கல்வியாக அமையும்*
*தந்தை குழந்தைகளுக்குக் கற்பிக்கட்டும்*
*குழந்தைக்கு மட்டுமா? தந்தைக்கும் கல்வி தேவை*
*ஏன்?*
*குழந்தையைப் போலத் தந்தைக்கு*
*யார்தான் பாடம் சொல்ல முடியும்?*
*திரு ஏரகத்து அமர்ந்தருள் செய் சுவாமிநாதன்*
*தந்தையாம் சிவத்துக்கு ஓதியதுணர்க!*

## 132. உண்மை சாகாது!

இன்று தாட்சண்யம் காட்டினால்
நாளை வருந்த நேரிடும்!
ஆதலால், உன்னை உண்மைக்கு ஒப்படைப்புச் செய்!
பொய், இன்றைய நாளை வேண்டுமானால்
எடுத்துக் கொள்ளட்டும்!
ஆனால், நாளைய நாளும் பொய்க்கு ஆகக் கூடாது!
உண்மை மட்டுமே நாள்களை எடுத்துக் கொள்ளட்டும்!
உலகம் உண்மையை விட்டு விலகலாம்!
ஆயினும்,
உலகச் சுழற்சியில்
அடுத்த சுற்று வரும் பொழுது
உண்மை மட்டுமே நிலைத்து நிற்கும்!
உண்மை மட்டும் உரிமை ஏற்கும்!
உண்மை அழியாதது;
உண்மைக்குத் தீராத் தொல்லைகள் தந்தாலும் அழியாது
உண்மைக்கு உதைகொடு!
உண்மையை அறுத்துப்பார்
ஏன்? உண்மையைச் சுட்டேபார்!
மின்சார நாற்காலியில் உண்மையை வைத்தாலும்
உண்மை சாகமறுக்கும்; உண்மை சாகாது!
உண்மை அழியாதது; என்றும் அழியாதது!

## 133. பக்திப் புனைவு

*மனிதகுலத்தில் மானிட இயல்பை,*
*நிறைவின்மையை, பூரணத்துவமின்மையைத்*
*தேடிக் காணல் இயற்கையே!*
*பக்திப் புனைவு அதிகமாகுபோது*
*கடந்த காலம் ஐயத்திற்கிடமாகிறது*
*மக்கள் உலகம் ஐயத்தின் வழியிலேயே முடிவெடுக்கும்!*
*செய்யத் தகாதன எல்லாம் செய்துவிட்டு*
*இனிமேல் செய்யக் கூடிய தீமைகள்*
*யாதொன்றும் இல்லையே என்ற நிலையில்*
*பக்திப் புனைவும் பாருளோர்க்கு உபதேசமும்*
*செய்திடலாம்!*

*அவன் திருந்துவானா?*
*அவன் திருந்தினால் சரி! திருந்தாது போனாலும் சரி!*
*அவன் ஒரு பிணம்!*
*பிணத்திடம் குணம் எதிர்பார்க்கலாமா?*
*உயிர்ப்புள்ள மனிதனே வளர்கிறான்!*
*நாளும் மாறுவோம்! வளர்வோம்!*

## 134. பழைமை

*பழைமையை ஏசுவதில் விவேகமா இருக்கிறது?*
*பழைமையைக் கழிப்பதில் அவசரம் ஏன்?*
*பழைமையைக் கழிப்பதில் நிதானம் காட்டுக!*
*பழைய உண்மைகள் உண்மைகள் அல்லவா?*
*பழைய கோட்பாடுகளில் அறிவின் ஆக்கம் இல்லையா?*
*பழைய கொள்கைகளில் அடிப்படை இல்லையா?*
*பழைய கோஷங்கள் எழுச்சிதரவில்லையா?*
*காலத்தால் பழைமை வாய்ந்ததனால் கெட்டதா, என்ன?*
*இன்று பிறந்த புதுமை எல்லாமும் நல்லவைதானா?*
*எந்த ஒரு பழைமையிலும் பொருள் இருக்கும்!*
*அப்பொருளைத் தேட முயலுக!*
*நீக்கும் முயற்சி வேண்டாம்!*
*பழைய வேலைகளைப் பார்!*
*அவை மேலும் மேலும் உயர்ந்து வளர்ந்துள்ளன!*
*நீ, பழைய நிலை எல்லையை அழிக்க இயலுமா?*
*வளரும் இயற்கையின் எழிலைப்பார்!*
*எந்த ஒரு பழைமையும் பயனில்லையேல் நிற்காது'.*
*கால வெள்ளத்தைக் கடந்து நிற்கும் பழைமை*
*பயனுள்ளதே என்று தேர்க!*
*கால எல்லை இல்லாத உண்மையை எண்ணுக!*
*இப்பழைமைகள் புதுமைக்கும் புதுமையானவை!*
*காலம் மட்டுமே அளவுகோல் அல்ல!*

## 135. பொய், பொய்யேதான்!

*அலங்காரம் செய்யப் பெற்ற பொய் புனைவுகளால்*
*பொய் பெரிதாகிறது!*
*தவறுகளுக்கு அணிகலன்கள் பூட்டினால்*
*தவறுகள், தவறுகள் இல்லையாகி விடுமா?*
*நிறைகளைவிடத் தடம்மாறிய தவறுகள்*
*நலம்பல செய்யும் என்று எண்ணுதல் தவறு*
*பொய்க்குக் கோலம் செய்வதால்*
*உண்மையாகி விடுமா?*
*ஒருக்காலும் ஆகாது!*
*பொய், புனைவுகள் பெற்ற போதும் சரி,*
*பெறாத போதும் சரி,*
*பொய், பொய்யேதான்!*
*பொய்யின் ஆயுளும் அற்பமே!*
*ஆதலால்,*
*பொய்க்குப் புனைவுகள் செய்து*
*வாழ்நாளை வீணாக்குவானேன்?*
*பொய்யைப் புறத்தே தள்ளுக!*
*உண்மையே பேசுக!*

## 136. அரிய பண்புகள்!

தந்தையே! கடவுளே! கருணை செய்க!
இன்று வாழ்தலுக்குரிய தைரியத்தைத் தந்தருள்க!
என்னுடைய துன்பங்கள் முன்னால்
நான் கோழையாகி விடாமல்
நிற்க அருள்செய்க!
நான் என் கடமைகளை செய்தலுக்கு
உரிய தகுதி யுடையவன் என்பதை
உறுதிப் படுத்தும் தைரியத்தினை அருள்செய்க!
எது வந்தால் என்ன? வருவன வரட்டும்!
நான் மனிதக் கூட்டத்தின் காலடியில்
ஊர்ந்து செல்லும் புழு அல்ல!
நான் மனிதக் கூட்டத்தின் நடுவில்
உயர்ந்து நிற்பவன்! விளங்கித் தோன்றுபவன்!
நான் தோல்வியின்முன் தலைகுனிவதில்லை!
அப்படியே தோல்வி வந்தாலும் சரி,
பின்னடைவு வந்தாலும் சரி,
எனக்கு இந்தப் பின்னடைவு ஓர் அனுபவமே!
அடுத்த ஓட்டத்திற்குரிய முன் அறிவிப்பேயாம்!
பயம், நம்பிக்கையின் எதிரி!
பயம், ஆர்வங்களின் பகைவன்!
நான் நம்புகின்றேன்; நம்பினோர் கெடுவதில்லை!
கடவுளே! கண்களைத் திறந்துவிடு!
பயமின்றி நடக்க அருள் செய்க!
துணிவொடு கலந்த தைரியமே
வாழ்க்கையின் ஒளி!
உயர்நிலைப் பொருள்!
துணிவு, தைரியம் அழியா உடைமைகள்!
ஆக்கம் அளிக்கும் அரியபண்புகள்!
தைரியம் கொள்! முன்னே நட! முன்னே நட!

## 137. அன்பிற்கு அரண்!

மனித இதயத்தில் இடம்பெற வேண்டுமா?
அதற்குரிய ஒரேவழி வயிறுதான்!
வயிற்றின் வழியே உயர்ந்த வழி!
அதாவது,
வயிற்றுக்குச் சோறிடுவதுதான் அந்த வழி!
இது முக்காலும் உண்மை!
அன்பையே உயிர் மூச்சாகக் கொண்டு
வாழுகின்றோம் என்பதில்
உண்மை இல்லாமலும் போகலாம்!
ஆனால், ஒன்றுமட்டும் உண்மை!
முக்காலும் உண்மை!
எந்த ஒரு பெண்ணும்
பசிக்கும் வயிறுடைய கணவன் இதயத்தில்
இடம்பெற இயலாது!
கணவன் வீட்டை அமைக்கிறான்!
மனைவி அந்த வீட்டைப் பராமரிக்கிறாள்!
கணவன் உணவுக்குரிய பொருள்களைக் கொணர்கிறான்!
மனைவி அவற்றை
உண்டி நாலுவிதமாய் அறுசுவையுடையதாய்ப்
பக்குவமாகச் சமைக்கிறாள்!
இதில் இருவருக்கும் பெருமை உண்டு!
ஒருவரையொருவர் புரிந்து கொள்ளலாம்
இந்த முறையில் ஒருவருக்கொருவர்
மதித்தலும் சார்ந்து வாழ்தலும் நிகழ்கின்றன!
அதனால், நிலையான அன்பு தழைக்கிறது!
மனிதன் அன்பை விரும்புகிறான்! — உண்மை
ஆயினும், மூன்றுவேளை உண்ண உணவு வேண்டுமே!
நீண்டகால அன்பின் செயலாக முத்தமிடுதல் விளங்காது:
ஆனால், சமையல் அந்த இடத்தில் நிற்கும்!
வயிற்றுக்கு இடுதலே அன்பிற்கு அரண்!

## 138. எது சரியானது?

மரம் வெட்டும் தொழிலில்
மரத்தூள்கள் விழும்பொழுது
நாம் மரம் வெட்டி முடிப்பதில் கவலைப்படுவதில்லை.
மரத்தூள்கள் இல்லையெனில்
மரம் வெட்டுதலும் இல்லை! மரமும் இல்லை!
எதிர்ப்பு இல்லையெனில் நிற்பார் யார்?
மனிதனும் இல்லை!
யார் பக்கலில் வேண்டுமானாலும் நில்!
ஆனால், அவன் சரியான வழியில் நிற்கும்பொழுதும் போ!
அவனே தவற்றின் தடத்தில் போகும் பொழுதும்
அவன் பகுதியாக நீயும் போ!
அவனைத் திரும்ப அழைத்து வரவேண்டுமே!
எது சரியானது?
ஆதரிப்பவர் யார்?
எதிர்ப்பவர் யார்?
என்பனபற்றி நினைக்காதே!
புகழையே அளவாக எண்ணி
நிற்பவர் பக்கம் நிற்காதே!
சலனப் புத்தியுடையோன் பக்கம் நிற்காதே!
சரியானது என்றும் நிலையானது!
சரியானது அழிவில்லாதது!
எந்தவழி சீரான வழி?
அறிந்து செல்க!

## 139. வெற்றியின் வாயில்கள்!

*புத்தியைத் தீட்டுக! சூழ் நிலைகளைக் கவனித்துக் கொள்க!*
*அந்தந்தச் சூழ்நிலைக்குத் தகவறிந்து திறமையுடன்*
*சிந்தித்துச் செயல்படுக.*
*காலத்தொடு இயைந்த சிறுபுத்திசாலித்தனம் கூட*
*எதிர்ப்புகளைத் தடுத்து நிறுத்தும்!*
*காலங்கருதிய திறப்பாடுகள்*
*நியாயங்கள் அறியும் புத்திசாலித்தனம்*
*எதிரிகளை அணுகும் பாங்கினையும்*
*உணர்ச்சிமிக்க போக்குகளையும் கட்டுக்குள் அடக்கி*
*வாழ்வு சிறக்கச் செய்யும்*
*மதிநுட்பம் காணும் கண்கள்*
*கேட்கும் செவிகள்*
*சதுரப்பாட்டுடன் நடத்தல் எளிது! மகிழ்ச்சி!*
*செயல்களைச் செய்யும்முறை, சூழ்நிலை—*
*அறிவுக்குத் தெரியும்.*
*இதமறிந்து ஒழுகுதலும் பாடறிந்து பழகுதலும்*
*நூறு நூறாக வெற்றிகளை அடுக்கும்.*
*தடைகளுக்கு வீழ்த்தும் ஆற்றல் இல்லை!*
*வெற்றிப்படிகளில் ஏறத் தடைகள் துணை செய்யும்:*
*மதி நுட்பத்தொடு இயைந்து செய்க!*
*வெற்றிபெறும்! ஏன்?*
*நெகிழ்தலும் விடுதலும் வெற்றியின் வாயில்களை*
*வென்றிடுகிறது!*
*நியாயமாக இரு! சீராக இரு!*
*முனைப்புடன் முயலுக! நாகரிகமாக இரு! தெளிவாக இரு!*
*முயற்சியில் சோர்வடையற்க! மேலும் மேலும் அழுத்தமாக நில்!*
*பொறுமையாக இரு! ஆக்க வழி நில்! உடன்பட்டு உயர்க!*
*கருணையுடன் பெருமிதம் ஏற்றிடுக! நின்றிடுக! ஒழுகுக!*
*பழகும் பாங்கியல் தடைகளைத் தகர்க்கும்!*
*வெற்றிகளைக் குவிக்கும்!*
*நல்லவனாக இரு; வல்லவனாகவும் இரு!*

கு.XIV.21.

## 140. இடர்ப்பாடுகள்!

வாழ்க்கையில் எதுவும் கடினம் இல்லை!
எந்த இடர்ப்பாட்டையும் நாம் சந்திக்கும் வகையில்
எளிதாக்க முடியும்!
இடர்ப்பாடுகள் ஒழுக்க நெறிகளைப் பயிற்றுவிக்கும்;
இடர்ப்பாடுகளைக் கடக்கும் பொழுதெல்லாம்
வலிமை பெற்று வளர்கின்றோம்!
இடர்ப்பாடுகள் நமது வலிமையைக் கூட்டுகின்றன!
இடர்களும் தடைகளும் நமக்கு வாய்த்த தேர்வுகள்!
இவைதாம்
நமது முடிவுகளின் உண்மை நோக்கங்களைத் தேடி
முடிவு செய்கின்றன!
சுடு சூரியன் மரத்தின் வேர்களுக்குப் பயிற்சியளிக்கிறது!
சுழன்றடிக்கும் புயல்
மரக்கிளைகளின் வலிமைக்குச் சான்றளிக்கின்றன!
அதுபோலத்தான் மனிதனும்!
மனிதன் மலையுச்சியில் நிற்கும் பொழுது
அவனுடைய நம்பிக்கைகளும் சீலமும்
சோதனைக்குள்ளாகும்; வளரும்!
இடர்ப்பாடுகள் எழுச்சிக்கு வித்தாகும்!
இடர்ப்பாடுகள் உறுதி இழக்கச் செய்வன அல்ல!
மனித இயல்பு இடர்ப்பாடுகளுக்கிடையில்
வளர்வதேயாம்!
இடர்ப்பாடுகளை எண்ணற்க! எழுக!

## 141. விழு! எழு!

வாழ்க்கையில் வெற்றிதேவையா? எழு!
விழுந்த வேகத்தினும் கூடுதல் வேகத்துடன் எழு!
வாழ்க்கையில் பாதி, எழுந்து நிற்பதில் இருக்கிறது!
கீழே விழுந்து விட்டாயா? விழுந்து கிடக்காதே!
அடிபட்ட பந்து உயர்விசையுடன் எழுவது போல எழு;
விழுந்தது தெரியாமலே எழுந்து நில்! அதுவே வாழ்க்கை!
வாழ்க்கையில் பாதி முடிந்ததுபோல்
வீழ்ந்த இடத்திலேயே கிடந்தால்
வாழ்க்கையில் பாதி போய்விடுகிறது!
பாதி கழிந்தபின் ஏதுமுதல்? ஏது முழுமை?
கதவைத் தட்டுகிறாயா?
கதவைத் தட்டினால் கதவு திறக்கப்படாமல்
ஓடிஆடி அசையலாம்! ஆனாலும் ஆபத்து வந்துவிடாது!
இதயம் பொறுத்தற்கியலாத கடுஞ்சொல்லால்
சுடப்பட்டாயா? கவலற்க!
வாழ்க்கைக்குரிய பிழைப்புப் பணியினை இழந்து விட்டாயா?
முதலீடு முழுகி விட்டதா?
நம்பிக்கை மோசம் போகிறாயா? உடல் நலத்தில்
சீர்குலைவா?
உன்னால் நேசிக்கப்பட்ட ஒருவர் இறந்து போனாரா?
இவற்றில் எதுவாக இருந்தால் என்ன?
எவையாக இருந்தால் என்ன? கவலற்க! எழுந்து நில்!
இவையெல்லாம் தடுமாறச் செய்யலாம்!
உன்னை வீழ்த்த இயலாது! உன்னைத் தேற்றிக்கொள்!
உன்னுடைய உணர்வுகளைச் சம நிலைப் படுத்து!
வாழ்க்கைப் போரைப் புதுப்பித்துக் கொள்!
அலை அலையென வரும் இடர்களைப் புறத்தே தள்ளு!
ஆவேசத்துடன் எழுந்து நில்!
வாழ்க்கைக் களத்தில் நின்று போராடு!
இதுவே எழுச்சியின் சின்னம்! வெற்றியின் வாயில்கள்!

## 142. முழுமை!

பிழைத்தல் ஒரு பொருள் அல்ல!
மனிதன் முழுமையாகப் பயன்படுகின்றானா?
இதுவே கேள்வி!
அடுக்களையில் சமையல் தொழில் செய்வோர்
தேங்காய் துருவினால் முழுமையாகத் துருவுவர்.
எலுமிச்சம்பழம் பிழிந்தால் முழுமையாகப் பிழிவர்.
அதுபோல
மனிதனின் முழுத்திறமும் பயன்படுகிறதா?
ஆழமான உண்மைகளைக் காண, புத்தி பயன்படுகிறதா?
கற்பனைத்திறன் எதிர்வரும் காலம் கணித்தறியப்
பயன்படுகிறதா?
இதயம், நீண்ட துடிப்புக்குப் பயன்படுகிறதா?
கைகளின் விரைவு தொழிலில் காணப்படுகிறதா?
கால்கள் மரங்களில் விரைந்து ஏறுகின்றனவா?
செவிப்புலன் கேட்டறிதலில் ஈடுபடுகிறதா?
நா, நல்லன இனியன பேசுகிறதா?
அன்பு மொழி பேச, நா பழகி இருக்கிறதா?
உணர்வுகளால் அணைந்த நண்பர்கள் உள்ளனரா?
இதயம் தழுவியஅன்பில் திளைக்க நட்பு உண்டா?
கடவுளிடம் பேசி மகிழும் இதயம் இருக்கிறதா?
இவையெல்லாம் மானுடத்தின் அடைவுகள்!
இவையெல்லாம் இருந்தால் மனிதன்!
முழு மனிதன்!
நீ இப்படி இருக்கிறாயா?
நீ, உன்னை முழுமையாகப் பயன்படுத்துகிறாயா?
எண்ணுக!
முழுமையாகப் பயன்படுக! முழுமையாக வாழ்க!
பூரணத்துவம் அடைவாய்!

## 143. முதுமையின் கொடை

இளமை நாள்தோறும் கழிகிறது!
இளமையின் இழப்பை ஈடுசெய்ய
இயற்கை உதவுகிறது!
காலம் செல்லச் செல்ல உடல் இளமையே கழிகிறது!
மூளையோ எதிர்த்திசையில் இளமையுடன் வளர்கிறது
உடலுக்கு மூப்பு! மூளைக்கு இளமை!
இதுவே இயற்கையின் நியதி!
இளமையில் உடல் இயக்கமும் ஆதிக்கமும் மிகுதி!
முதுமையில் மூளையின் பயனும் ஆதிக்கமும் மிகுதி!
மூப்பு ஆழமான சிந்தனையைத் தருகிறது!
நெடிய எதிர்த் திசையைக் காட்டுகிறது!
ஆதலால்!
மூப்புப்பருவம் வீண் அல்ல!
பொற்காலம் என்பதறிக!
நாம் இழந்த நாள்களை வீணாக்கவில்லை!
அறிவார்ந்த அனுபவம் தந்த நாள்கள்தாம் அவை!
கவலற்க! மூப்பு கண்டு அஞ்சற்க!
வாழ்வாங்கு வாழும் பண்பே முதுமையின் கொடை!

## 144. பேணற்க, தற்பெருமை!

ஓ! மனிதனே!
உன் பெருமையை விழுங்கிவிடு!
பெருமையைப் பாராட்டாதே! பேணி ஏற்காதே!
பலருக்குத் தன் பெருமையை விழுங்க இயல்வதில்லை;
அதுமட்டுமா?
இல்லாத பெருமை இருப்பதாகப் பறை சாற்றுவர்!
ஐயோ, பாவம்! ஆடிக் காற்றில் பறக்கும்
எச்சில் இலை ஒத்தவர்கள் இவர்கள்
விழுங்க முடியாத பெருமையா, உரியது?
இல்லை! இல்லை! ஒருபோதும் இல்லை!
நீ உன்னையும் உன்னைச் சார்ந்தவர்களையும்
பேணி அணைத்து அழைத்துச்செல்ல விரும்பாததால்
பெருமையை விழுங்க மறுக்கிறாய்!
குழம்பாதே! குழப்பிக் கொள்ளாதே!
உன் பெருமையை விழுங்கிவிடு!

## 145. தன்னம்பிக்கை

ஓ, மனிதனே!
உன்னை நீ நம்பு!
முதலில் உன்னை நீ இழந்து விடாதே!
நம்பிக்கையுடன் வாழ்க்கையை நடத்துக!
நம்பிக்கையுடன் வாழ்ந்து
வெற்றிகளைக் குவித்த மனிதர்களின்
வரலாறுகள் பலவுண்டு!
குடியே முழுகிப் போனாலும் கவலைப்படாதே!
அமெரிக்கன் ஒருவன்,
வங்கி ஊழலில் சிக்கிச் சீரழிந்து
செல்வமெலாம் இழந்தான்!
அவன் இழந்தது உடைமைகளையே!
உள்ளமாகிய உடைமையை அவன் இழக்கவில்லை!
அவன் பழைய துணிகளைத் தோளில் சுமந்து
வீடு தோறும் கூறி விற்கலானான்!
பின், பழைய துணிகள் விற்பனையை விட்டு
புதியனவிற்கும் கடை தொடங்கினான்
வளர்ந்தான் எண்ணெய் வியாபாரமும் தொடங்கினான்
மீண்டும் பணக்காரன் ஆனான்!
இந்த உலகம் நம்பிக்கை உடையவர்களையே
வாழ்த்துகிறது! பரிசளிக்கிறது!
கடவுளும் கூடத் தன்னம்பிக்கை உடையோரையே
வாழ்விக்கிறான்

ஆம்! மனிதனே!
உன்னுடைய சமயத்தின்.....
தளராத் தன்னம்பிக்கையாகவும் விளங்கட்டும்
தனக்குத்தானே எவன் வாழ்கிறானோ
அவனுக்கே கடவுளும் உதவி செய்கிறான்!
பூட்டிய கதவுகள் திறக்கப்படா!
பூட்டிய கதவுகளைத் திறக்கும்
சாவியாக நீ விளங்குக! வாழ்க!

## 146. வதந்திகள்!

*வதந்திகளை ஆழக்குழி தோண்டிப் புதை!*
*வதந்திகளை நம்பாதே!*
*வதந்திகள் உண்மையானால்*
*நாமனைவருமே சுட்டுக் கொல்லப்பட வேண்டிய*
*குற்றவாளிகள்!*
*ஆனால், நாம் வாழ்கின்றோம்!*
*மேலும் வளமாக வாழ ஆசையும் உண்டு!*
*மக்களின் குற்றங் குறைகள் பற்றி*
*வதந்திகள் உண்டு!*
*தங்கமுலாம் பூசிய தார்க்குப்பாய் போல*
*நன்மையைப் போலப் பரவும் வதந்திகள் பலப்பல!*
*ஆனால், உண்மையில் எந்தப் பாபமும் இருப்பதில்லை.*
*நாம் முட்டாளாக விரும்பினால்*
*வதந்தியை நம்பலாம்!*
*ஆனால் ஒன்று உண்மை!*
*புதைகுழிகள் வதந்திகளைப் பரப்புவதில்லை!*
*வதந்திகளைப் புதைகுழியில் இட்டு*
*மூடிவிட்டால் என்ன?*

## 147. காலமும் கனவும்

நீ நாளும் நினைவாய் நன்னெஞ்சமே!
கழைக் கூத்தாடி குறிக்கோள் பற்றிக் கூறியதை
நீ நாளும் நினைவாய் நன்னெஞ்சமே!
"நான் சூரியனைக் குறிவைத்துச் சுட்டால்
ஒரு நட்சத்திரத்தைச் சுட்டு வீழ்த்துவேன்"
என்ற ஆப்த மொழியை நினைவிற் கொள்!
நீ எண்ணியதை எல்லாம் அடையமுடியாது.
ஆம்! உன் குறிக்கோள் அளவுக்கும்
ஆற்றலோடு செய்யும் முயற்சி அளவுக்கும் உயர்வாய்!
எத்துணையும் ஐயமில்லை!
இலக்கினை அடைதல் விபத்தன்று!
இலக்குகள் இல்லையேல் வெற்றியும் இல்லை!
கனவுகள் வென்றதில்லை!
கற்பனைகள் நடைப்பயணம் கற்றுத் தந்ததில்லை!
ஒவ்வொருவரும் வேணளவு வளரலாம்!
வளர்ச்சிக்குத் தேவை இரண்டு!
ஒன்று, கவனித்துப்பார்! நட!
இரண்டு, உயர் இலக்கினை எண்ணு!
அந்த இலக்கும் உண்மையொடு பொருந்தியதாக
இருக்கட்டும்!
நீ, நினைத்தவண்ணம் ஆவாய்!
நீ, உயர்வற உயர்ந்த குறிக்கோளையே உன்னுக!
அங்ஙனம் இல்லையெனில்
கடிகாரத்தின் அலாரம் சிலருக்கே உதவியாம்!
பலர் அதனால் பயனடைவதில்லை!
உயர்வாகத் தொடங்குக! காலம் கடந்தாலும்
பரவாயில்லை!
ஒரு நேரத்தில் கவனமாக வாழக் கற்றுக்கொள்!
தோல்விகள் பெரிதல்ல; குற்றமும் அல்ல!
ஆனால், உயர் குறிக்கோள் கொள்ளாது
தாழ்வான குறிக்கோளுடையராதல் குற்றம்!
குற்றம் தவிர்த்திடுக! உயர் குறிக்கோள் கொள்க!
காலத்தை வென்று வாழலாம்!

## 148. மனித அடையாளம்

*பயந்து நிற்காதே!*
*இடர்ப்பாடுகளைக் கண்டு கலங்கி நிற்காதே!*
*இடர்ப்பாடுகள்தான் மனிதனை அடையாளம் காட்டுகிறது!*
*மனிதன் எப்படி இருக்கிறான்? எதனால் ஆகிறான்?*
*அறிந்துணர இடர்ப்பாடுகளே துணை!*
*உன் வழியில் கடுமையான தடைகள் வரும்பொழுது,*
*நீ, அவைகளைத் தாண்டி ஏறு! மேலே ஏறு!*
*நீ, உயர் நிலையை அடைய*
*இடர்ப்பாடுகள் படிக்கற்கள்!*
*இடர்ப்பாடுகள் இல்லையேல் நீ ஏது?*
*இது வளர்ச்சியின் இயற்கை நியதி! விதி!*
*வலிமைக்கு வழி இடர்ப்பாடுகளேயாம்!*
*வெள்ளித் தட்டில் சுவைமிக்க உணவு!*
*ஓய்வு நாற்காலியில் ஓய்வு!*
*வீட்டிற்குள்ளேயே அரட்டைக் கச்சேரி!*
*இவை எப்படி மனிதனை உயர்த்தும்!*
*மலைமேல் ஏற அயர்விலா முயற்சி தேவை!*
*மலை முகட்டில் நின்று பார்ப்பதில் மகிழ்ச்சி!*
*கல்லும் முள்ளும் நிறைந்த பாதையில் நடத்தலில்*
*எத்தனை இடர்ப்பாடுகள்?*
*முட்களும் கற்களும் கால் பாதங்களில் பட்டுப்*
*பாடம் கற்பிக்கின்றன!*
*முன் எச்சரிக்கைப் பாடமும் முட்களே*
*கற்றுத் தருகின்றன!*
*இரக்க உணர்ச்சியும் நடைபாதையே கற்றுத்தரும்*
*இவையெல்லாம் கடந்து எல்லையை அடையும் போது*
*பாராட்டுக்கள் குவியும்!*
*அஞ்சற்க!*
*இடர்ப்பாடுகளை எதிர்கொண்டு முன்னேறு!*
*இதுவே வாழ்க்கை!*

## 149. கூண்டுக் கிளி

*மனிதன் எண்ணுதல் வேண்டும்.*
*எண்ணி வாழும் மனிதன் சுதந்திரமாக வாழ்வான்!*
*மனிதன் எண்ணி வாழ்வதற்கே பிறந்தவன்!*
*மனிதனின் அமைப்பும் அப்படியே!*
*மனிதன் எண்ணி வாழ்பவனாக அமைந்தது*
*விபத்தினால் அல்ல!*
*மனிதனுக்குள்ள தகுதியும் திறமையும்*
*அவன் தானே எண்ணமுடியும் என்பதுதான்!*
*மனிதமூளை என்று எண்ணுவதில்லையோ,*
*அன்று அவன் படித்தவனாய் இருந்தாலும்*
*கூண்டிற்குள் அடைபடுகிறான்!*
*சின்னஞ்சிறு கூண்டு!*
*ஆனால், இந்தப் பரந்த உலகம் எண்ணும் மனிதனுக்கே!*
*விண்ணும் மண்ணும் எண்ணும் மனிதனுக்கே!*
*நீ எண்ணவில்லையா? கூண்டிற்குள் அடைபடு!*
*கிளிப் பிள்ளைகளைப் போல் சிலபல பேசலாம்*
*ஆனால், இது வாழ்வாகாது.*

## 150. புத்தக நண்பன்!

மனிதன் யார்? இந்த மனிதன் எப்படி?
அவன் யார்? அவன் குணங்கள் எப்படி?
அறிந்து பழகுவது எப்படி?
அந்த மனிதனுடைய நண்பன் யார்? கூறு!
அவன் விரும்பிப் பிடிக்கும் நூல் எது?
இவ்விரண்டும் காட்டும் அவனை!
எங்கே கவர்ச்சி இருக்கிறதோ
அங்கே விரும்புதலும் நிகழும்
சில இலக்கியங்கள் எடுத்துக் கூறும்
நண்பனைப் போல் அவன் இருப்பான்!
மனிதன் தன்னைத் திருப்திப் படுத்த வேண்டும் என்றே
விரும்புகிறான்!
ஒரு புத்தகம், படித்த திருப்தியைத் தராது போனால்
அப்புத்தகத்தை ஒருவன் படிக்கமாட்டான்:
மனிதன் அனுபவிக்கின்றானா? அல்லது இல்லையா?
அவன் மனித குலத்தின் ஒருபகுதி!
ஒத்த இருமனம் ஒன்றுசேர முடியும்!
ஒத்துப் போகாதவர்கள் தடுமாறுவர்!
எதிர் எதிர்த் திசையில் செல்வர்!
உன் நண்பன் யார்? நீ அவனாவாய்!
நீ விரும்பும் உன் புத்தகங்களைக் காட்டு!
அவை, உன்னைக் காட்டும்!
நண்பர்களைவிட, நன்றாகவே காட்டும்
அவர்கள் எங்களிடமிருந்துதான் வந்தவர்கள்
ஆனால், அவர்கள் நாங்கள் அல்ல!
அவர்கள் நாங்களாக இருந்திருந்தால்
அவர்கள் எங்களுடனேயே இருந்திருப்பார்கள்!
இல்லையே! இதுதான் உலகம்!

## 151. வாழ்க்கையின் மதிப்பு!

*வாழ்க்கை முழுமையாக விளங்க*
*வாழ்க்கையில் இன்பங் கொழிக்க*
*வாழ்க்கை மதிப்புடையதாக அமைய*
*நடப்பதைவிடக் கூடுதலாகச் செய்!*
*செயலை வளர்த்திடு!*
*பெறுவதைக் காட்டிலும் கூடுதலாகக் கொடுத்திடு!*
*வருத்தப்படுவதைவிடக் கழிவிரக்கம் கொள்!*
*பார்ப்பதை விட நோக்கு!*
*அனுதாபப் படுவதை விட உதவி செய்!*
*திருக்கோயிலுக்குப் பலகாலும் போவதை விட*
*வழிபாடு செய்!*
*அதிகமான குழந்தைகளைப் பெறுவதைவிட,*
*பெற்ற குழந்தைகளை வளர்த்திடு!*
*வீடுகள் பல கட்டுவதைவிட*
*ஓர் இல்லத்தை உருவாக்கு!*
*பல மூச்சுக்கள் விடுவதை விட, வாழ்ந்திடு!*
*பல ஆண்டுகள் வாழ்வதைவிட; அன்பு காட்டு!*
*நாம் ஆண்டுகளில் வாழ்ந்து விடுவதில்லை;*
*நாம் செயல்களிலேயே வாழ்கின்றோம்;*
*நாம் மூச்சுக் காற்றில் வாழ்ந்து விடுவதில்லை*
*நாம் எண்ணங்களிலேயே வாழ்கின்றோம்!*
*நாம் வாழ்வது புள்ளிவிவரங்களில் அல்ல;*
*நாம் வாழ்வது உணர்வுகளில்!*
*எவன் அதிகமாகச் சிந்திக்கின்றானோ*
*அவன் அதிகமாக வாழ்கின்றான்;*
*உயர்பண்பே எண்ணுதலுக்குரியது!*
*நல்லனவே செய்க!*

## 152. காரணம் அறிந்து கடமையைச் செய்!

*நிகழ்வுகள் அனைத்துக்கும் காரணங்கள் உண்டு!*
*காரணங்கள் அறிந்து தொழிற்படின்*
*முன்னேற்றம் உண்டு!*
*காரணங்கள் அடிப்படையிலேயே*
*தொழில்கள் நடக்க வேண்டும்!*
*முயற்சியினால் வரும் வெற்றிகளைவிடக்*
*காரணங்களால் வரும் வெற்றி உறுதியானது!*
*காரணங்களுக்கு வடிவம் கொடுப்பது*
*மனிதனின் முன்னேற்றத்திற்கு அடிப்படை!*
*காரணங்களை உணர்ந்தவன் கடமைகளைச் செய்வான்;*
*தன்னையே மாற்றிக் கொள்வான்;*
*உலகத்தையும் மாற்றுவான்;*
*வாழ்க்கைதான் என்ன?*
*காரணங்களும் முயற்சிகளும் கூடியதுதான் வாழ்க்கை!*
*மனிதன் திட்டமிட்டுப் பயிர் செய்கிறான்!*
*மகசூலை அறுவடை செய்கிறான்!*
*மனிதன் கிணறு தோண்டுகிறான்!*
*கிணற்றில் தண்ணீர் எடுக்கிறான்*
*அணைகட்டுகிறான்; ஏரி உருவாக்குகிறான்*
*இவையெல்லாம் மனிதனின் செயல்!*

## 153. மனித உருவாக்கம்

வலிமை பேணுக! மனிதனாகக் காண நிற்பாயாக!
பேணும் பெருந்தகைமைக்கு ஆணி ஆகுக!
உலகில் நிற்பாய்!
உலகம் உன்னை மனிதனாகப் போற்றும்
மனிதன், மனிதனுக்குத்தான் ஒப்பு!
மனிதன் பிறப்பால் அல்ல; வாழ்க்கையால் மனிதன்!
மனிதன் பதவிகளால் அல்ல!
மனிதன் மனத்தினால் ஆகிறான்!
தங்கம் மனிதனின் கையைக் கறைப்படுத்தாது!
பெருமை, மனிதனின் தலையைக் கனக்கச் செய்யாது;
இகழ்ச்சிகள், மனிதனின் இலட்சியப் பயணத்தைத்
தடை செய்யாது;
மனிதனின் முதுகெலும்பு
பயத்தால் முறிந்ததில்லை!
மனிதனின் இதயத்தை ஏமாற்றங்கள் அமுக்கியதில்லை!
மனிதன் இரவும் பகலும்
எங்கும் எந்தச் சூழ்நிலையிலும்
பண்பில் தலைப்பிரிதல் இல்லை!
மனிதன் குணத்தால் உருவாகிறான்
மனிதன், மனிதப் பண்புகளில் சிறந்து விளங்குகிறான்!
மனிதர்கள் பலர் தேவை!

# 154. முடிந்தவரை செய்!

உன்னால் முடிந்த நல்லதைச் செய்!
இயற்கையும் கூட நன்றாகவே செய்கிறது!
ஒரு சிறு மழைத்துளி; ஈரப்பதத்தைத் தருகிறது!
ஒரு விண்மீன், போதிய ஒளியைத் தருகிறது!
மனிதன் உற்பத்தி செய்ய வேண்டியவன்
அவன் எவ்வளவு உற்பத்தி செய்யமுடியுமோ
அவ்வளவுக்கு உற்பத்தி செய்தாலே மனிதனா வான்!
இயற்கை முழு ஆற்றலுடன் செயல்படுகிறது!
மனிதனும் இயற்கையைப்போல் செயல்படவேண்டும்
ஆற்றலுக்கு இசைந்தவாறு வாழ்தலே வாழ்க்கை!
வாழ்க்கையை ஆற்றலுக்குக் கீழ் இயக்குவது தவறு
உன் ஆற்றலுக்கு இசைய நீ வாழ்ந்தால்
இயற்கை நியதிகள் உன்னை உயர்த்தும்!
உன் வாழ்நிலை முயற்சிக்கு ஏற்ப
வாய்ப்புக்களும் வந்தமையும்!
உன் முயற்சியின்மையால் வாய்ப்புக்களை நழுவ விடாதே!
உன் ஆற்றலுக்கு ஏற்ப உழைத்திடுக
கடவுளை நம்பு!
மீதியைக் கடவுள் கவனித்துக் கொள்வார்!
தேவதைகள் வேறு என்ன செய்து விடும்?

## 155. இலட்சிய முயற்சி!

*பயத்தை வெற்றிகொள்! அல்லது அடிமையாக வாழ்!*
*அடிமைச் சங்கிலிகூட, பயத்தைப் போலத் தடையல்ல*
*பயத்தைத் துறந்து துணிவைக் கொண்ட*
*நாடுகள் வளர்ந்து வருகின்றன! வாழ்கின்றன!*
*நமது நாட்டிலோ பயமுறுத்துகின்றனர்*
*மக்களும் பயந்து தொலைகின்றனர்!*
*மக்களாட்சியில் பயம் என்றால் மக்களாட்சிக்குப் பொருள் என்ன?*
*மக்களாட்சியின் பெயரால் வல்லரசு நடக்கிறது என்பதா?*
*இதை நினைந்து நோவதா? அழுவதா?*
*அமெரிக்காவில் கூட பயமிருந்த வரையில்*
*அந்த நாடு முன்னேறவில்லை*
*பயத்தை உதறிவிட்டுத் துணிந்து துள்ளியெழுந்த பிறகே*
*அமெரிக்கா வளர்ந்தது!*
*தோல்வியை எண்ணி அஞ்சி*
*முயற்சியைக் கைவிடும் மாந்தனுக்கு விடுதலை இல்லை*
*வெற்றியும் தோல்வியும் வாழ்க்கையல்ல*
*இலட்சியமும் இலட்சியத்தை அடைய எடுத்த*
*முயற்சிகளுமே வாழ்க்கை*
*பரம்பரைப் பழக்கத்தினை மாற்றப் பயப்பட்டுச்*
*செக்குமாடு ஆவானும் பயங்கொள்ளியே*
*இவனுக்கு, பயத்திலிருந்து விடுதலையும் இல்லை*
*வெற்றியும் இல்லை; வாழ்க்கையும் பாழாகும்*
*நல்லது முன் நில்! நல்லதுக்குப் போராடு!*
*அந்தப் போராளிகள் வரிசையில் முதலில் நில்*
*புவியை நடத்துவோர், பொதுவில் நடத்துவோர் சிலரே!*

௫-XIV-௨௨.

*அச்சிலருள் நீ, நில்!*
*மக்கள் கூட்டம் மதிப்பிழந்து*
*உண்மையும் நல்லதும் கேட்க மறுக்கும் பொழுது*
*அஞ்சாதே!*

*துணிந்து கூறுக உண்மையினை!*
*முதலில் நீ உனக்குத் தலைவனாகுக!*
*தலைவன் ஆகுக; பயந்து ஒளியாதே!*
*ஒளியுடன் வாழ்க!*
*வாழ்க, பயத்தினை வென்று விளங்குக!*

## 156. வாழ்வாங்கு வாழ!

*வாழ்க்கை மிகவும் குறுகியது.*
*ஆனால், வீணாக்க இயலாத பொருள் மதிப்புடையது*
*வாழ்க்கை வாய்ப்புக்கள் நிறைந்தது! மகிழ்ச்சி நிறைந்தது.*
*நிறைநல வாழ்வும் வாழலாம்! எப்போது?*
*வாழ்க்கையின் நொடிகளை வீணாக்காது வாழின்!*
*வாழ்க்கையை அதிருப்தியில் பாழாக்காதே!*
*இம்மியும் நலம்தரா உணர்ச்சியில் வீணாக்காதே!*
*யாரிடமும் சிடுமூஞ்சியைக் காட்டாதே!*
*குற்றமே கூறும் சிறுமை செய்யாதே!*
*எவரையும் வெறுக்காதே! யாரோடும் பகை வேண்டாம்!*
*பழிக்குப்பழி வாங்கும் இழிகுணம் என்றும் வேண்டாம்!*
*குற்றங்காணாதே! குணமே காணமுயலுக!*
*ஊர்க்கதை அளந்து விடாதே! அரட்டை அடிக்காதே!*
*சந்தேகப்படாதே! சோம்பித் திரியாதே! தீயொழுக்கம் புரியேல்!*
*இவையெல்லாம் தவிர்த்திடில் உன் வாழ்க்கை வாழ்வாகும்!*
*வாழ்க்கையை எண்ணு! கணக்குப் பார்க்க உரியதாக்குக!*
*நாள்தோறும் வாழத் தலைப்படு!*
*வாழ்க்கையை வளமாக வளர்க்கும் நிறை நலன்களைப் பெற்று வளர்க!*
*அன்பாக இரு! அன்பை விலை பேசாதே!*
*எல்லா உயிர்களிடமும் அன்பாக இரு!*
*மறக்கவும் மன்னிக்கவும் பழகு! பெருந்தன்மையாக நடந்துகொள்!*
*தகுதியில்லாதாரையும் தகுதியுடையவராக எண்ணிப்பழகு!*
*இலக்கு உடையவனாக இரு! உணர்ச்சிகளை அடக்கு!*

*தொழில் செய்! நம்பு! இதமாகப் பழகு!*
*இவைகளைச் சார்ந்து நீ வாழ்க!*
*உன் வாழ்க்கைக்குப் புதிய காலண்டர் போடுக!*
*உன் வாழ்க்கை கடிகாரத்தால் அளக்கப் பெறவேண்டாம்.*
*இதயத் துடிப்புகளால் அளக்கப் பெறட்டும்*
*வாழ்க்கை சாவை, நோக்கியதே!*
*நாமும் சாகத்தான் வேண்டும்; தப்ப வழியில்லை!*
*ஆதலால், இன்றே வாழத் தலைப்படுக*
*வாழ்க, வாழ்வாங்கு வாழ்க!*

## 157. ஏமாறுதலும் ஏமாற்றுதலும்

ஆய்வு செய்க! கண்டு பிடிக்கவும்!
காரண காரியங்களைக் காணவும்!
உன்னைச் சுற்றி உன் உதடுகளை நோக்கி
சூதுக்காரர்கள், ஏமாற்றுகிறவர்கள்
சூழ்ந்து நிற்கலாம்; திறமையாக நடிக்கலாம்!
ஆரவாரமான பொய்யான அன்புகாட்டி
உனக்குக் கேடே சூழலாம்!
தீயவர்கள் தத்துவப் பேராசிரியர்களாகவும் இருக்கலாம்!
ஆயினும் அவர்கள்
தத்துவங்களுக்குச் சொந்தக் காரர்கள் அல்ல!
அவர்கள் உனது நலன்களைக் காணார்!
உனது பலவீனங்களையே கணித்துப் பழிவாங்குவர்!
தந்திரங்களே அவர்கள் வாழ்வு!
உன்னுடைய நாணயத்துடன்
நாணயமற்றவர் விளையாடுவர்!
பொய்யற்ற வாய்மையைக் கனவிலும் சொல்லியறியர்
உன்னுடைய சத்தியத்தைச் சோதனை செய்வர்.
அவர்கள் அவர்களையே நேசித்துக் கொள்வர்.
ஆனால், கூறுவதோ உன்னை நேசிப்பதாக!
தாமே நம்பாத வேதங்களை ஓதுவர்!
இதுதான் உலகம்! நாடகமே உலகம்!
எவ்ரையும் தேர்ந்து தெளிக!
நாள்தோறும் நாடி ஆய்ந்து நட்புக் கொள்க!
ஏமாளிகள் இருக்கும் வரையில்
ஏமாற்றுபவர்கள் இருப்பர்!

## 158. பரபரக்காதே!

*வாழ்வினைக் கடந்துவரும் நாழிகை தோறும்*
*சிக்கல்கள் வந்த வண்ணம் உள்ளன!*
*நாம் எப்படி*
*இந்தச் சிறிய சிறிய தொல்லைகளைச் சந்திப்பது?*
*ஏமாற்றங்களை ஏற்பது?*
*அன்றாட வாழ்வில் ஏற்படும் பதற்றங்களை*
*எங்ஙனம் சந்திப்பது? தீர்வு காண்பது?*
*முதலில் எதார்த்தவாதியாக இருந்து*
*அவைகளைத் தெரிந்து கொள்!*
*அவைகள் வரட்டும்!*
*அந்தத் துன்பங்களை, ஏமாற்றங்களை*
*உளமார ஏற்றுக்கொள்!*
*அமைதிக்கு அதுவே வாயில்!*
*ஏன்? தீவிரம்கூட ஏற்பதில்தான் இருக்கிறது!*
*இரண்டாவதாக அந்தத் துன்பங்களை ஏமாற்றங்களை*
*அவற்றுக்கு வளைந்து கொடுப்பதன் மூலம்*
*முறியடிக்கலாம்!*
*அமைதியும் இனிமையும் கலந்த உள்ளத்தால்*
*அவைகளின் ஆற்றலை முடக்கு!*
*அவைகளின் மூலம் படித்துக் கொள்*
*தாழ்ந்து உடன்போய் முறியடித்து விடு!*
*இந்த முறையே நீதிசார்ந்தமுறை!*
*எதிர்ப்பதிலும் அழிப்பதிலும் விடச் சிறந்தவழி*
*தகுதி, தீர்வின்பாற்பட்டது!*
*தகுதி, எதிர்த் தாக்குதலில் அல்ல!*
*தலையில் முடியாக முட்புதரே வந்தாலும் பரபரக்காதே!*
*ஆராய்ந்து அடங்கு!*
*ஒருவருக்கும் தீங்கு நினையாதே!*
*வாழ்வியல் நெறி இதுவே!*

## 159. நினைப்பும் மறப்பும்

நமக்கு வரும் அவதூறுகளைக் கடந்து செல்க!
சூடாகவோ, சூடு குறைவாகவோ
உன்னைப் பற்றிய மதிப்பீடுகள் வரும்!
நாம் மற்றவர்களால் துன்புறுத்தப் படுகிறோம்!
மற்றவர்களும் துன்பங்களை மறக்க மறுப்பின்
எப்போதும் கலகச் சூழலிலேயே இருக்க நேரிடும்!
நமது நண்பர்கள் நம்மை இழப்பர்!
இரத்தக் கொதிப்பு கூடும்!
நமது திறமை கீழ்நோக்கிப் போகும்
இவையெல்லாவற்றையும் தவிர்க்க
நமக்கு எதையும் தாங்கிக் கொள்ளும்
பொறுத்தாற்றும் பண்பு தேவை!
இந்தப் பொறுத்தாற்றும் பண்புக்கு வேறுபாடு ஏன்?
எல்லார் மாட்டும் பொறுத்தாற்றும் பண்பு
விரிவடைவதாக!
நாம் எந்த ஒரு நீதியாலும்
துன்புறுத்தப்படமாட்டோம்
அன்பும் நீதியும் துன்புறுத்தும் இயல்பின அல்ல!
நீதியில் சிறந்தோர் துன்புறுத்தார்
அநீதிவான்களுக்கோ நம்மைத் துன்புறுத்தும் உரிமை
இல்லை!
நெறியில் நீங்கியோர் என்று நினைந்து மறந்திடுக!
அவர் மாட்டும் அன்பு காட்டுக!

## 160. ஆற்றலைப் பெறு! வெற்றி வந்தடையும்!

எதிர்ப்புகள் தொடர்ரமாக உள்ளனவா?
அந்த எதிர்ப்புக்களை வெல்ல ஒரே வழி!
உனக்கு நீயே போராடி ஆற்றலைப் பெற்று
வளர்ந்து உயர்க!
எதிர்ப்புக்களையும் கடந்து துள்ளியெழுந்து
உயர்ந்து நிற்கும் ஆற்றலைப் பெற்றுக் கொள்க!
வெற்றியும் தோல்வியும்
உன் தலைமைத் தகுதிக்கு உட்பட்டது தானே!
உன் தகுதி வளர வளர வெற்றி பெறுவாய்!
உன் தகுதி வளராதொழியின் நீ வெற்றிபெற இயலாது!
இந்த உலகமே இடர்ப்பாடு நிறைந்ததுதான்!
மனிதன் கல்வியால் அறியாமையை வெற்றிகண்டு
விளங்கித் தோன்றுகின்றான்!
கடுமைகளைக் கருணையால் வெற்றி கொள்கின்றான்!
சோம்பலிலாத் தொழில் முயற்சியால் வெற்றி காண்கிறான்!
உயர்வு சார்ந்த எண்ணங்களால்
தாழ்வு மனப்பான்மைகளை வெற்றி கொள்கின்றான்!
தீமையை நன்மையால் வென்று விளங்குகின்றான்!
இத்தனை வெற்றிகளும் அவன்
தன்னை வெற்றிபெறுவதில்தான் இருக்கிறது
இதயத்தை உரிமைப்படுத்து! வெற்றி பெறுக!
வெற்றிகள் ஆரவாரத்தில் இல்லை!
வெற்றிகள் மக்கள் கூட்டம் நிறைந்த கடைவீதியிலும்
இல்லை!
வெற்றிகள் அதிகார முடியிலும் இல்லை!
முழக்கங்களிலும் இல்லை!
நீ, உன்னை வெற்றிகண்டு விளங்கும் ஆற்றலிலேயே
உள்ளது.
உன்னை அறிக! உன் குறைகளைக் களைக!
எழுந்து நில்! அறிவை விரிவு செய்! அகண்டமாக்கு!
ஆற்றலைப் பெறு! வெற்றி வந்தணையும்!

## 161. புத்தகக் கருவூலம்!

புத்தகங்கள் ஒப்பற்ற கருவூலங்கள்!
சென்ற தலைமுறையோடு உறவு உண்டாக்குவன;
பழைய புத்தகங்கள்!
இன்றைய தலைமுறையோடு உறவு உண்டாக்குவன
புதிய புத்தகங்கள்!
புத்தகங்கள் பழையவை – புதியவை
எப்படியிருந்தால் என்ன?
எல்லாப் புத்தகங்களும் மனிதனை மாற்றுகின்றன!
வளர்க்கின்றன!
அறிவு கோலோச்சும் எல்லையில் தலைவனாக்குகின்றன!
அறிவு கோலோச்சும் இடத்தில் வறுமை வெற்றி
கொள்ளப் பெறும்!
கஞ்சி இல்லாமையின் காரணம் அறிந்தால் வறுமை
நீங்கும்!
கஞ்சி என்ன? சோறு கிடைக்கும்!
துக்கங்களுக்கு ஆறுதல் அளிக்கப்பெறும்
துயரங்கள் மாற்றப்படும்
நாளும் நல்ல புத்தகங்கள் படிப்போர்
நாளும் வளர்வர்; உயர்த்தப் படுவர்!
நல்ல புத்தகங்கள் படிப்பு நம்பிக்கை தரும்;
சிந்தனையைத் தூண்டும் புத்தகங்களைப் படி!
எப்போதும் புத்தகங்களுடன் இரு!
இரவில் படுக்கும்முன் புத்தகங்களைப்படி!
தூங்குமுன் அறிவில் வளர்வாய்! உணர்வில் வளர்வாய்!
எத்தனையோ மனிதர்கள் நல்ல நூல்களைப் படித்ததன்
பயனாகப்
புதுவாழ்வைத் தொடங்கினார்கள்!

## 162. சின்னமும் சின்னமே!

எப்போதும் சிறியது நல்லது!
சின்னச் சின்னவைகளைப் போற்றுவாயாக!
சின்னவை புனிதமானவை; நல்லவை
சின்னச் சின்ன வார்த்தைகள் செவிக்கினியன
கடவுள், திருக்கோயில், வேதம்,
நம்பிக்கை, நல்லெண்ணம், தாய், அன்பு, வீடு,
குழந்தைகள் – இந்தச் சொற்கள் சின்னவைதான்!
ஆனாலும் சிந்தைக்கினியன! செவிக்கினியன!
இந்தச் சின்ன வார்த்தைகளைச் சுற்றித்தானே
நமது வாழ்க்கை வட்டமிடுகிறது
சிறிய சொற்கள்! சின்னஞ்சிறு செயல்கள்!
ஆயினும்; அவை வாழ்க்கையின்
பரிணாம வளர்ச்சிக்குத் தேவையானவை!
தாகத்தால் தவிப்பனுக்கு ஒருகுவளை தண்ணீர்
இந்த அறத்திற்கு ஈடு விண்ணிலும் இல்லை; மண்ணிலும் இல்லை!

சின்னச் சின்னப் பாடல்களே
இதயத்தில் இன்பத்தை நிறைக்கும்!
சின்ன இதயமே பெரிய உலகத்தை ஈர்த்து அணைக்கிறது!
அற்ப மகிழ்ச்சிகள் நெடிய இன்பத்தை இகழ்கிறது!
பெரிய மனிதர்கள் பலஅரிய சிறிய பணிகளும் செய்கின்றனர்!

சின்னச் சின்னச் செயல்கள்
உலகை ஒளியுடன் வைத்துக் கொள்கின்றன!
சின்னச் சின்னவைகள் நாளுக்குநாள் பெரியவையாகும்!
மனிதனுக்குத் தேவை சிறியது;
அது நெடிய பயன் தருகிறது!

## 163. கடிகார முள்

நமது சொற்களைவிட நமது செயல்கள் அதிகம் கூறும்!
நாம் என்ன செய்கிறோமோ அதுவாகவே இருக்கிறோம்!
நம்மைப் பிறர் நினைத்துக் கொள்ளவே
நாம் பேசுகிறோம்!
மனிதனின் வரலாறு அவனுடைய செயல்களின் வரலாறே!
மனிதர்களைப் படைக்கிறார்கள்!
படைத்த மனிதர்களைக் காட்டுகிறார்கள்!
மனிதனின் போக்கில் தவறு காணலாம்!
செயலில் தவறுகாண இயலாது!
சுறுசுறுப்பான நாக்குக் கூடச் சரியாகப் பேசாது!
கடிகாரத்தின் ஓசையை எவரும் பாராட்டமாட்டார்கள்!
கடிகாரத்தின் முட்கள் நகரவேண்டும்
கடிகாரத்தின் முட்களைக் காப்பது முக்கியமல்ல.
கடிகார முட்கள் நகர்வதே முக்கியம்!
உன்பேச்சு போதும்! வாயை மூடு!
ஏதாவது நல்லது ஒன்றைச் செய்!
செயல் மூலம் மூச்சுவிடு! வாழு!

## 164. வேடம் வேண்டாம்!

முகத்தில் ஒரு செயற்கை முகம்!
குழந்தைகளுக்குப் பொருந்தும்!
ஆனால், அது பெரியவர்களுக்கு ஆகாது!
அதுவும் ஆண்டு முழுதும்
பெரியவர்கள் அணியும் செயற்கைமுகம் பயன்தராது!
உள்ளொன்று வைத்துப் புறமொன்று காட்டி
நாடகம் ஆடுபவர்களின் இரண்டு நடத்தைகள்
அந்த இரண்டு நடத்தைகளும் ஒத்திசையாதபோது
அவன் பேசுவதைக் கேட்க இயலாது!
அவன் எதற்காக வாழ்கிறான்? என்ன பேசுகிறான்?
அவன் குருடனாகலாம்; குருடாக்கிக் கொள்ளலாம்!
ஆனாலும், மற்றவர் அவன் மூலம் பார்ப்பர்.
ஒரு மனிதன் தானே தன்னை
இரட்டை மனிதனாக்கிக் கொள்வானேன்?
அந்த இரட்டைத் தன்மை வளரும்; நாளும் வளரும்!
அவன் ஒரு பரிதாபகரமான சூதாடி என்ற
எல்லை வரையில் செல்வான்!
அவன் எந்த ஒரு காரணத்தாலும்
அங்கீகரிக்கப்படத் தகுதியுடையவனாகான்
பெற்றோரைக் கொன்று விட்டு
நான் தாய் தந்தையற்ற அனாதை என்று கூறுபவனுக்கு
எப்படிக் கருணைகாட்ட முடியும்?
அவன் சில நாளைக்குச் சிலபேரை முட்டாளாக்கலாம்!
அந்த மக்களை முட்டாள்களாகவும் வைத்திருக்கலாம்!
ஆனால்,
எல்லா மக்களையும் எல்லா நேரங்களிலும்
முட்டாள்களாக வைத்திருப்பது சாத்தியமல்ல!
ஆதலால்,
இரட்டைவேடம் வேண்டாம்! சூதினைத் தவிர்த்திடுக!
எப்போதும் திறந்த புத்தகமாக வாழ்ந்திடுக!

## 165. வாழ்க்கைக் கப்பல்!

*நீ, ஒரு புது உலகத்தைக் காணலாம்:*
*உன்னால் முடியும்! நீ செய்தால் முடியும்!*
*நீ, இப்போது இருப்பதை விடச்*
*சிறந்த புது உலகத்தைப் படைக்க முடிவு செய்!*
*இருக்கும் உலகத்தை நம்பு!*
*இருக்கும் இந்த உலகம் விநோதமானதும் அல்ல!*
*துன்பமானதும் அல்ல!*
*இந்த உலகம் உண்மையானது!*
*இதை நீ விரும்பியவாறு ஆக்க முடியும்*
*நீ நம்பு! முடியும் என்று நம்பு!*
*வழியைக் காண்பாய்!*
*நீ முயன்றால் முடியும்!*
*உனது வாழ்க்கைப் படகை நகர்த்து!*
*இயக்கிச் செலுத்துக!*
*காற்றடிக்கும் திசையில் செலுத்தாதே!*
*மறித்து, நீ செல்லவேண்டிய திசையில்*
*உன் வாழ்க்கைக் கப்பலைச் செலுத்து!*
*இடையீடு இல்லாத முயற்சியுடன் செலுத்து!*
*இந்த உலகத்தில் யாண்டும் இன்பமில்லை!*
*நம்பிக்கையும் நல்லெண்ணமும் படைப்புக் குணங்கள்*
*இயல்பல்ல!*
*கொலம்பஸின் உணர்வினைப் பெறு!*
*கொலம்பஸைப் போல் மேலும் மேலும்*
*உன் வாழ்க்கைக் கப்பலை விடாமுயற்சியுடன் செலுத்து!*
*நம்பிக்கையை இழந்தபின் ஏதும் செய்ய இயலாது!*
*செலுத்து, நம்பிக்கையோடு வாழ்க்கைக் கப்பலை!*
*முயற்சியுடன் செலுத்து! புது உலகம் காண்பாய்!*

## 166. உயர்வும்! தாழ்வும்!

வேலையில் உயர்வும் இல்லை; தாழ்வும் இல்லை!
எந்த ஒரு பெரிய மனிதரும்
தமக்குக் கிடைத்த வேலையை அது எந்த வேலையாக
இருந்தாலும்
தாழ்வெனக் கருதார்.
நாட்டுத் தலைமையாக இருந்தால் என்ன?
வாழைத் தோட்டத்தின் பணியாக இருந்தால் என்ன?
கிராம நீதிச் சபையின் உறுப்பினராக இருந்தால் என்ன?
பதவிக்குப் பெருமை பதவியால் அல்ல
பதவியில் அமரும் மனிதனைப் பொருத்தே
பதவிக்குப் பெருமை!
வாழ்க்கை என்ற குன்றின் படிகளைக் கடந்து ஏறு!
கடின உழைப்பு, அடக்க முடைமை
வாழ்க்கையை உயர்த்தும் படிகள்!
மனிதனாக இருப்பது
அடக்கமுடையோனாக விளங்குவது
பயத்தால் அல்ல!
பண்பாட்டின் விளைவேயாம்!
மனிதம் மிளிர வாழ்தலே வாழ்தல்!
எப்பணியாயினும் ஏற்றுச் செய்து
உனக்கு வாய்த்த பணியைப் பாங்குடன் செய்க!
மேலே ஏறு! மேலே ஏறு!

## 167. சிந்தனை

*உலகம் விரைந்து நகர்கிறது!*
*விரைவு மிகுதியும் உள்ள இந்த உலகத்தில்*
*விரைவோடு விரைவாக ஓடாமல்*
*சில நிமிடங்கள் ஒதுங்கி நின்று*
*சிந்தனை செய்க!*
*அதன்பின் நீயும் நட!*
*நின்ற காலத்தையும் தூரத்தையும் கூட*
*நீ கடந்து செல்லலாம்!*
*உன்னை யாரும் முந்திவிட மாட்டார்கள்!*
*கவலற்க!*
*எங்கேயும் தொடர்ச்சியான பயணம் இல்லை!*
*தேக்கத்தையும் தோல்விகளையும் தவிர்க்கச்*
*சிந்தனை செய்!*
*நீ சிந்தனை செய்யும் முறையில் பயணம் செய்!*
*சிந்தனை குறுக்கு வழிகளைக் கடக்க உதவும்*
*சிந்திப்பவன் பின் தங்கி விடுவதில்லை*
*இன்று நீ இருக்கும் இடம்*
*நேற்றைய சிந்தனை எங்கிருந்ததோ அந்த இடம்*
*இன்று நீ என்ன எண்ணுகிறாயோ,*
*அந்த இடத்தில் நாளை இருப்பாய்!*
*சிந்திப்பதற்கு அதிக நேரம் ஒதுக்கு!*
*நீ, அவ்வழி அதிக நேரமும் பெறுவாய்*
*சிந்தனையின் சுவட்டிலேயே*
*வாழ்க்கைப் பயணச்சுவடுகள் அமைவதாகுக!*

# 168. பிறரைப் புகழ்

புகழ்ந்து பேசு! புகழ்ந்து பேசு!
எல்லா உயிரினங்களும் விரும்புவது புகழே!
புகழ்வது உதவியாக அமையும்!
புகழ்வது கவனத்தில் எடுத்துக்கொள்ளப் பெறும்!
புகழ்வது வேறு! முகத்துதிவேறு!
ஒவ்வொருவரிடமும் புகழ்தலுக்குரிய
தகுதிகள் சில இருக்கும்!
புகழ்தலுக்குரிய அத்தகுதியைக் கண்டுபிடி!
அதைப் புகழ்ந்து பேசு!
புகழ்ந்து பாராட்டும் சொற்கள் எல்லாம்
புதிய தீர்மானங்களைச் செய்யும்
சில மனிதரை நீ விரும்பும் சில காரணங்களால்
புகழ்கின்றாய்!
இழிந்தவைகளைப் பேசுவோராயினும் கவலைப்படாமல்
அவரிடம் உள்ள ஏதோ
தகுதி ஒன்றினைப் பாராட்டு! உற்சாக மூட்டு
பயன் கிடைக்கும்!
ஒரு மனிதன் ஏதாவது ஒன்றில்
சிறந்து விளங்குகின்றானா?
அதைப் பாராட்டு! புகழ்ந்து பேசு;
அவன் வளர்வான்; மீண்டும் புகழ்ந்து பேசு!
அவன் மிகவும் வளர்ந்து வருவான்!
மீண்டும் புகழ்ந்து பேசு!
அந்தப் புகழ்ச்சி அவனுக்கு உதவியாக இருக்கும்
உனக்கும் உதவியாக இருக்கும்
புகழ்ந்து வாழ்தல் நல்லவாழ்வு!
எதிர்மறை வேண்டாம்!
பாராட்டுக! புகழ்க!

## 169. இதயக் கதவைத் திற!

இதயக் கதவுகள் உனக்காகத் திறக்கப்பெறும்.
நீ, விலைமதிப்புள்ள மதிப்பீட்டை வழங்கினால்
நீ வழங்கும் மதிப்புடன் கலந்த மரியாதை
பலமுடைய பூட்டிய இதயத்தையும் திறக்கும்!
நேசத்திற்கு நேசம்!
அன்புடன் அணுகு! நீ அன்பைப் பெறுவாய்!
மரியாதையைத் தா!
மரியாதை கலந்த வரவேற்பைப் பெறுக!
ஒரு சிலர் தவறலாம்!
இவர்கள் மனிதக் கணக்கில் வரமாட்டார்கள்!
நீ, எவருடைய இதயத்தையும் நொறுக்காதே!
நீ, இதயக் கதவுகளைத் திறக்கும் முயற்சி செய்!
திறந்த இதயங்களை
அன்பாலும் பரிவாலும் தூய்மை செய்!
இயக்கு! இணைந்து கொள்க!
இச் செயல்முறை மனமுறிவுகளைத் தவிர்க்கும்!
எங்கும் காணப்படும்... வாழ்க்கையை
இது கொஞ்சம் இயக்கும்
கண்ணியத் தன்மை மனித உறவுகளுக்குத் தேவை!
அது, சமயத்தின் ஒரு பகுதியும் கூட!
கண்ணியப் படுத்துதலே சமயம்!
கடவுளின் பொன்னான ஆட்சியின் விளக்கம்
கண்ணியமே!

கண்ணியத்துடன் கலந்த நட்புப் பழக்கங்கள்
மக்களை இயக்கும்; உதவவும் தூண்டும்!
உன் வார்த்தைகளே உன்வாழ்வு!
உன் எதிர்காலம்!
ரு-XIV-௨3.

## 170. எது செய்தது?

எங்கும் நன்மை கூடுதலாகவே காணப்படுகிறது!
எல்லா உயிர்க்கும்
நல்ல தோற்றம் ஒரு சொத்து!
ஆனால், அதுவே உயர்மதிப்புடையதல்ல!
மனிதன் –
நல்ல தோற்றமுள்ள மனிதன்
கட்டான உடல் தோற்றமுள்ள மனிதன்
இவனுக்கு நல்வாய்ப்புண்டு!
ஆனால், வாழ்க்கையை வென்று விளங்க
மகிழ்ச்சி ததும்பும் பழக்கங்களும்
தங்கம் நிகர் ஒழுக்கங்களும்
கூர்த்தமதியும் தேவை!
நல்ல தோற்றம் பேசப்படும்!
ஆனால், வெற்றி கிடைக்காது!
நெடிய பயனுமிருக்காது!
அகத்தூய்மை ஆண்டுகள் பலவானாலும் வெற்றி பெறும்!
பிறப்பிலேயே அழகாகப் பிறந்தவர்கள் உண்டு!
ஆனால், பிறப்பிலேயே வென்றவர்கள் இல்லை.
சிலபல ஆசைகள் மனிதனை உருவாக்கா!
அவனைச்
சந்தைக்கு அனுப்பலாம்!

## 171. செல்வர்கள்

நீ, செல்வருள் செல்வனாக வேண்டுமா?
அமெரிக்க வளநாட்டில்
பட்ரிங் ஹென்றி
உடைமை உரிமை ஓலை ஒன்று எழுதினான்!
அதில்,
"நான் சம்பாதித்த எல்லாவற்றையும்
அன்பான குடும்பத்திற்குத் தருகிறேன்!"
அவர்களை மேலும் செல்வராக்க
கிறிஸ்த மதம் சிலதரும்.
மனிதனின் ஒப்பற்ற செல்வம்
பணப்பையில் இல்லை!
அவனுடைய இதயத்தில் இருக்கிறது
இதயம் விசுவாசத்தால் நிறையட்டும்;
இதயம் நம்பிக்கையால் நிறையட்டும்;
இதயம் சுயமரியாதையால் நிறையட்டும்.
இதயம் நல்லெண்ணங்களால் நிறையட்டும்.
எவரெவர் இதயங்கள் இவைகளால் நிரப்பப் படுகின்றனவோ
அவர்கள் எல்லாரும் செல்வர்கள்!
அவர்கள் செல்வர்களுள் செல்வர்கள்!
இதயம் நிரம்பிய இவர்கள்
பலவற்றை அடைவர்; தேவைகள் வழங்கப்பெறும்;
ஆதலால், நீ உடல் தேவைகளுக்குக் கொடுக்கும் பொழுதே
அவர்களின் இதயத்திலும் சிலவற்றை
வைக்கத் தவறி விடாதே!
இதயத்தில் வைக்கப் பெற்றவை
பயன்கள் பலதரும்;
பணம் இல்லாத பணப்பை எதற்கு?
இனிய பண்புகள் ஏதுமில்லாத
இதயம் இருந்து என்ன பயன்?

## 172. ஏன் எதிர்மறை எண்ணம்?

மனிதன் தனது கற்பனைகளைக் கண்காணிப்பானாயின்
அவன் பல துன்பங்களைத் தவிர்த்து விடுவான்!
மனிதனுக்கு மகிழ்ச்சி தருபவைகளைவிடத்
துன்பம்தரும் வாயில்கள் மிகுந்துள்ளன.
பயங்கரமான கற்பனைகள்
இருண்ட ஆபத்துக்களையும்
உண்மையே யல்லாத சுமைகளையும் தரும்.
அவை பயமூட்டும்; வெறுப்பூட்டும்!
நடப்பவைகளை - நடக்க இருப்பவைகளை
நல்லவையாகவும் பார்க்க வேண்டாம்;
தீயவையாகவும் பார்க்க வேண்டாம்.
சில மனிதர்களுக்குத் தொல்லைகள் உண்டு
துயரங்கள் உண்டு
ஆனாலும் அவற்றை அவர்கள் அறியார்
மற்றவர்களின் துன்பத்தை அறிந்து மாற்றுவர்!
ஆண்டுபல வாழ்ந்த நான்,
பல பெரியதுன்பங்களைக் கற்பனையில் கண்டதுண்டு!
ஆனால்,
அவற்றில் பல என்னை வந்தடையவில்லை!
வாழ்க்கை நீர்க்குமிழி போலத்தான்!
ஆனாலும் நனி நல்லது; நனிநல்லது.
கற்பனையில் துன்புறுவதைத் தவிர்த்திடு;
ஆனால், அவை என்றும் வரா!
ஏன் வாழ்க்கைக்கு எதிர்மறை எண்ணம்?

## 173. காலமும் களமும்

பகுத்தறியும் இயல்பே அறிவின் சிறப்பு!
பகுத்தறியும் துணிவே துணிவு!
அத் துணிவே அறிவு!
ஒரு முட்டாள் கூடப் பேசலாம்; செய்யலாம்
ஆனால்,
அவன் பேச்சும் செயலும் காலத்தொடு இசைந்தவையா?
நேரம் – சூழ்நிலை அறியாது பேசுபவன் முட்டாள்!
காலமும் களமும் அறிந்து கூறுதலே விவேகம்!
செயற்பாடுறுதலே பொருத்தமும் ஆகும்!
நரிக்குக் கூட முன்யோசனை உண்டு!
முன் ஜாக்கிரதை உண்டு
தலைவனின் செவ்வி பார்த்துப் பேசுதல்
வெற்றிக்குரிய பாங்கு!
காலமும் களமும் பொருந்தாத நிலையில்
திறமைகளும் கூடத் தோற்றுப் போகும்!
பருந்தாக வானில் பறக்கவும் சூழ்நிலை தேவை!
ஒரு நேரம் இருப்பதுபோல் ஒருநேரம் இருக்காது.
எப்போது பேச வேண்டும்?
எப்போது செய்ய வேண்டும்?
என்பதறிந்து செயற்படுவதே கல்வியின் பயன்!
அக்கல்வியின் பயன் பகுத்தறிவே!
எல்லாவற்றுக்கும் பருவ காலங்கள் உண்டு!
எல்லாவற்றுக்கும் காலமும் நியதியும் உண்டு
மௌனமாக இருக்க வேண்டிய நேரத்தில் பேசாதே!
பேச வேண்டிய நேரத்தில் மௌனமாக இருக்காதே!
இதுவே வாழ்க்கையின் முறை.

## 174. இரண்டுங் கெட்டான்!

*அரைக் கிணறு தாண்டியவன் கதி என்ன?*
*அதுபோல,*
*அரை குறைச் சமய வாழ்க்கையினால்*
*விளையும் பயன் யாது?*
*சமயப் பற்று,*
*சமயத்திற்கு எதிரிடையான சில சிந்தனைகள்*
*இவையிரண்டும்*
*சரி சமமாகிய நிலையில் யாதுமில்லை!*
*வெறும் சூனியமே!*
*கடவுளுக்காகவே சேவை செய்ய அழைத்தல்*
*மன்னிக்க முடியாத ஒன்று,*
*சூடும் குளிரும் ஒருங்கிணைதல் ஏது?*
*கொஞ்சம் சமயம்; கொஞ்சம் சமயத்திற்கு எதிர்நிலை!*
*இவ்விரண்டும் கெட்டான் நிலை வேண்டாம்*
*நல்லதைக் கூட*
*வேண்டா வெறுப்பாகச் செய்தல் நன்றன்று;*
*பயனுமில்லை!*
*இதயத் தோய்வில்லாமல்*
*கடவுள் முன்னே மண்டியிட்டு*
*மந்திரத்தைப் புரளும் நாவினால் சொல்லிச்*
*சப்தம் செய்யாதே!*
*அரை மனத்துடன் அரனை வணங்குவதென்?*
*கடவுளுடன் முரண்பட்டு நிற்காதே!*
*இதயம் முழுதும் இறைவனுக்கு ஆக்கு!*
*அதனால், உயர்ந்த அனுபவங்களைப் பெறு!*
*இதயத்தால் இறைவனைத் தொழுதல் இதயத்திற்கு*
*இதமாக இருக்கும்!*
*இதயத்தை விரிவு செய்யும்!*
*இதயம் இறைவனை நோக்கியும் மனிதனை நோக்கியும்*
*விரியும்!*
*நீ வலிமை பெறுவாய்!*
*எழுந்து நில்! எது வந்தால் என்ன?*

## 175. நன்றி!

நன்றி! – மூன்றெழுத்துச் சொல்!
நன்றி! – இம்மூன்றெழுத்துச் சொல்லுக்கு இணை ஏது?
நன்றி சொல்லிப்பழகுக!
நன்றி இயல்பாகக் கூறு! உண்மையாகக் கூறு!
நன்றி கூறுதல், பெற்ற உதவியின் தரத்தன்று!
நன்றி கூறுவது பெரிய மனதின் விளைவு.
நன்றி சொல்லும் பண்பு, வாழ்க்கையைத்
துன்பத்திலிருந்து மீட்டுத்தரும்
நன்றியறிதல் – கூறல் பெருந்தன்மையின் பாங்கு!
நன்றி மகிழ்வளிக்கும்! எல்லையற்ற மகிழ்வளிக்கும்.
நன்றியைப் போல வேறு எது இன்பம் தரும்.
நன்றியே திருப்பியளிக்கும் வாயில்!
நன்றி கைம்மாறு ஆதல் உண்டு!
நன்றி அறிக! நன்றி கூறுக!
இதுவே கடப்பாடு!

# 176. நேருக்கு நேர்

*சுற்றி வளைக்காதே!*
*வளைந்து வளைந்து வம்பு செய்யாதே!*
*நேருக்கு நேர் கண்டு பேசுவதில் நன்மைகள் உண்டு.*
*உன்னைப் பிரிந்தவனையும் கூட*
*நீ நேரில் காண்க! பேசத் தலைப்படுக!*
*அங்ஙனம் பேசுதல் இதமாக இருக்கும்!*
*பிரிவின் இடைவெளி குறையும்!*
*கண்டபொழுது புன்முறுவல் அரும்பும்!*
*கருத்து ஏதும் இல்லையெனினும்*
*ஆழமான பேச்சு தோன்றும்*
*நேரிடையான அணுகுமுறை சோதனை செய்யப் பெற்றது.*
*இம்முறை சகிப்புத் தன்மையை வளர்க்கும்*
*நேரிடையான உறவுமுறைப் பயிற்சி*
*மேலும் மேலும்*
*பொறுத்தாற்றும் பண்பையே வழங்கும்*
*ஒருவர் மற்றவரைப் புரிந்து கொண்டால் மட்டும் போதாது!*
*தன்னைப் புரிந்து கொள்ளவும் வேண்டும்*
*ஒருவரையொருவர் அறிந்து பழகும் பண்பால்*
*வேற்றுமைகள் சுருங்கும்!*
*ஏன்? உன் உணர்வால் மதிக்கப்படும்*
*பெரியோர் முன் சிறுமை ஏது?*
*மற்றவரை மதித்தல் மனிதனுக்குரிய சிறப்பு!*
*இதனால்,*
*ஒருவரையொருவர் தழுவி வாழலாம்!*
*ஒருவரில் ஒருவர் கண்ணோட்டம் – பரிமாற்றம் பெறும்!*
*இவர்கள் பயணத் தடத்தில் முட்புதர்கள் இல்லை!*
*எடுத்தெறியும் கொம்புகள் இல்லை*
*உன்னுடைய குறை உன்னைச்சார்ந்தோர் முகத்தில்*
*தெரியும்!*
*அப்போது உனக்கு வாய்ப்புக்கள் அதிகம்!*
*உன் செயல்கள் ஊக்குவிக்கப்படாது போனாலும்*
*உன் குறிக்கோள் ஊக்குவிக்கப்படும்!*

## 177. அணுகு முறை

கற்றுக்கொள்! காதைகளிலிருந்து கற்றுக் கொள்!
எள்ளி நகையாடப்படும் மூடனின்
வாழ்க்கையிலிருந்து படிப்பினை பெறுக!
ஒரு மனிதன் சாலை ஓரத்தில்
ஒரு வித்தியாசமான ஒரு மிருகத்தைச் சந்திக்கிறான்!
அவன், மிருகத்தைத் தாண்டிச் செல்லமுடியாமல்
அந்த மிருகத்தை இணைத்துக் கொண்டு
பயணத்தைத் தொடர்ந்தான்!
சற்று தூரம் போகவும் அந்த மிருகம்
அவனை மிஞ்சிப் பயணத்தை மேற்கொண்டது!
மிஞ்சி முன் சென்றதுடன்
மும்முறை உறுமவும் செய்தது!
எவரும் அந்த மிருகத்தை மிஞ்ச இயலவில்லை!
மேலும் மேலும் மிருகத்துடன் மனிதனின் பிணைப்பு
நெருக்கமாகியது.
மேலும் மேலும் நிலைமை மோசமாயிற்று!
தலைமை தாங்கியது சண்டையேயாம்!
வெறி பிடித்த இந்தச் சண்டை வளரும்:
நாம் பக்குவப் பட்டவர்கள்
என்று கூறிக் கொள்ளலாம்
ஆனால்,
எல்லாம் நமது அணுகுமுறையைப் பொறுத்ததேயாம்!

## 178. இனிப்பும் கசப்பும்

இந்த உலகம்!
இனிப்பும் கசப்பும் கலந்த கலவையேயாம்!
இனிப்பை மட்டும் விழுங்குக!
இனிப்பையும் கசப்பையும் கலந்து விழுங்குக!
கசப்பையும் பட்டினியையும் ஏற்றிடுக!
இந்த உலகம் முழுமையான இன்பத்தினை உடையதல்ல!
இந்த உலகம் நம்மிடம் எதிர்பார்ப்பது என்ன?
நன்மையைப் போலவே தீமையையும் ஏற்றிடுக!
இது உண்மையான நட்பின் அளவுகோல்!
நம்மில் தவறு செய்யாதவர்கள் யார்? யார்?
உண்மையான தோழனாக விளங்குக!
சுய நலத்தையே நாடி நட்புச் செய்வது வாணிகம்!
நண்பனின் தீமையையும் ஏற்றுக்கொள்வது
நட்பின் பாங்கு!
இந்த உலகில் எந்த இருவரும்!
முற்றாக ஒத்த கருத்துடையவர்கள் இல்லை!
உன் பணிக்கு உண்மையாக இரு!
எதுவும் சொர்க்கமல்ல!
உண்மையின் பள்ளி எது?
எங்கே இருக்கிறது?
வாழ்க்கையின் பாடமே உண்மை!

## 179. எது தகுதி?

"நல்லவன்" என்று நாலுபேர் சொன்னால் போதுமா?
நல்லவனுக்குரிய தகுதி வேண்டும்!
மக்கள் நீ எப்படி இருக்கிறாய்
அல்லது நீ எப்படி இல்லை என்று மதிப்பது போதாது!
உன் ஒழுக்கம் உன் நிலையை உணர்த்த வேண்டும்
பலர், பொதுவாழ்வில் குற்றம் இழைக்காமல் இருக்கலாம்?
ஆனால், தனிப்பட்ட வாழ்க்கையில்
அதே குற்றங்களைச் செய்யலாம்!
அறையில் திருடுவது; அம்பலத்தில் அள்ளிக் கொடுப்பது;
இதை மக்கள் போற்றலாம்!
ஆனால், அறையின் கதவுகளுக்கு உண்மை தெரியுமே!
உன் பெயர் எப்படி இருக்கிறது?
நாடு நினைக்கிற அளவுக்கு இல்லை!
ஆனாலும், பாதிக்குப்பாதி நான் நல்லவனே!
அவன் காணப்படுவதை விட
வாழ்தலுக்கு ஆர்வம் காட்டுகிறான்;
அயலார் புகழைக் கெடுத்துத்
தம்புகழ் தேடுவோர் வெறுக்க வேண்டியவர்கள்!
புகழும் பொருளல்ல!
நல்லவனாக வாழ்தலே புகழ்!

## 180. பணம்

பணம் உள்ளம் கவர்வதன்று!
ஆனாலும், பணத்திற்கு வரவேற்பு இருக்கிறது!
பணத்தின் மீது ஆசை
பணக்காரனையும் நேசிக்கத் தூண்டும்!
பணம் உயர்ந்தது
உடல்நலம் உயர்வற உயர்ந்தது!
பணக்கார நோய்களுக்கு ஏகபோக உபசாரம்!
அழைப்புக்களும் பல உண்டு!
எதற்காக?
மனிதனுக்காக அல்ல! அவனுடைய பணத்திற்காக?
பணம், எளிதில் கதவுகளைத் திறக்கும்
கும்பிடுகளும் பெற்றுத் தரும்!
பணப்பை காலி; மக்களும் போயினர்!
உனது காசுகள் பத்திரம்!
விழுங்கும் மனிதனிட மிருந்து காத்திடுக!
பணம் நண்பர்களைக் கூட்டவும் செய்யும்!
பணம் நண்பர்களைப் பிரிக்கவும் செய்யும்!
பணம் கவனத்திற்குரியது! கவனம்! கவனம்!

## 181. காலம் – காலன்!

*என் செல்லமுள்ள ஆன்மாவே!*
*சற்றே கேள் செவி சாய்த்து!*
*இன்று எனக்குரிய உரிமைநாள்!*
*நாளை என்னாகும்? யாரறிவார்?*
*நாளை நாள் களவு போகாதென்பதற்கு உறுதி என்ன?*
*காலம் என்னை எடுக்கும் முன்னே*
*நான் காலத்தை எடுத்து வாழ விரும்புகிறேன்!*
*இன்றைய நாளையும் நாளைய நாளையும்*
*இணைக்கும் வெள்ளிஇழை நுண்மையானது; மெல்லியது!*
*யாரறிவார்?*
*வாழ்நாளில் பயனற்றுக் கழிந்துபோன*
*பகுதியே அதிகம்!*
*ஆனாலும் ஓர் உண்மை புலனாகிறது!*
*நாள்தோறும் சிலபொழுது வீணாகிறது*
*லாங்பெல்லோ என்ற சிந்தனையாளன்*
*கூறுவது போல்*
*இளைஞனும் சாவான்!*
*முதியவன் சாவது உறுதி.*

## 182. வேண்டாம் ஐயம்!

நம்புக! யார் மாட்டும் நம்பிக்கை கொள்க!
நம்பினவர் சிலர் மோசம் செய்யலாம்!
இழப்புகள் பல நேரிடலாம்!
ஆயினும், பலரை நம்புவதற்குப் பதிலாகச்
சிலரை மட்டும் நம்பினால் இழப்புகள் கூடும்!
சமூகத்தை இயக்க நம்பிக்கைத் தவிர
வேறு பொருத்தமான பண்பு இல்லை!
சிலர் மோசக்காரர்களாகப் போனால்
அதனால் வரும் இழப்பைப் பலர் ஈடு செய்வர்
இந்த உலகில் கெட்டவர்களே இல்லையென்று எண்ணி
நம்பி வாழ்தல் நல்லவர்கள் இயல்பு!
இந்த உலகில் நல்லவர்களே இல்லையென்று
ஐயப்பட்டே வாழ்தல் தீயவர்கள் இயல்பு!
நல்லவர்கள் தராதரப்படி நம்புவர்!
எவரையும் ஐயப்படார்!
ஐயப்படுபவரின் கண்களும் காதுகளும்
சந்தேகத்துடனேயே காணும்; கேட்கும்!
நண்பர்களை ஐயப்படுதல்
மோசம் போதலைவிடக் கொடுமையானது
வேண்டாம்! வேண்டாம்!
ஐயப்பட வேண்டாம்!
எல்லாரையும் நம்பி இந்தப் புவியை நடத்துவோம்!

## 183. விழிப்புணர்வு

*விழிப்புணர்வு தேவை! பேரங்கள் பேசாதீர்கள்!*
*நியாயமில்லாத பேரங்களில் ஜாக்கிரதை உணர்வு தேவை!*
*தோற்றம் நன்று; உள்ளே புழுக்கள்!*
*பழங்கள் குறைந்த விலையில் கிடைக்கலாம்*
*எதையும் தராமல் சிலபல பெறலாம்*
*என்ற நம்பிக்கை நன்றன்று!*
*கல்வி, அரசியல், மதம் – இலவசம்! இலவசம்!*
*காற்றும் இலவசம்!*
*ஆனால் தூய்மைக் கேடுற்ற காற்று!*
*எதற்கு விலை கொடுத்தாயோ அதைப் பெறுவாய்!*
*விலையோ அல்லது குறைந்த விலையோ கொடுத்தால்*
*பெறுவது எதுவாக இருக்க முடியும்!*

## 184. நேர்மை

நேர்மை மதிப்பைத் தருகிறது!
பழங்காலத்தில் உழுவலன்பு இருந்தது!
மரணப் படுக்கையில் தம் மக்களுக்கு உயில் எழுதினர்;
அவர்தம் உடைமைகளில் ஒரு காசு கூட
நேர்மை தவறிய வழியில் வந்ததில்லை;
எல்லாமே நீதியொடு பொருந்திய
நேர் வழியில் வந்தவை!
அகத்திலும் புறத்திலும் மதிப்புயர் மனிதன்!
அவன் மகிழ்ந்து வாழ்தலுக்குச்
செல்வத்திலும் அவன் பண்பாடே துணை செய்தது!
சுயமரியாதையையும் மதிப்பையும் விட
எது மகிழ்வைத் தரமுடியும்?
நேர்மையுடன் கூடி வாழ்க!
நேர்மையுடன் நட!
நேர்மையுடன் பணிகளைச் செய்க!
நேர்மையுடன் உண்ணுக!
நேர்மையுடன் கூட்டாளியாகுக!
நேர்மையுடன் வாழ்க!

## 185. வரவும் செலவும்

வரவைச் செலவு மேவி விடாமல்
காப்பது நலம்!
பொருள், சுதந்திரம் தரும்!
பொருள், வேறு எந்த நன்மையை வழங்காது போனாலும்
உறுதியாகச் சுதந்திரம் தரும்!
சிக்கனம் நாணயத் தயாரிப்புச் சாலை நிகர்த்தது;
அளவிலா ஆக்கம் தரும்!
ஒரு காசு சேமித்தால் ஒருகாசு செய்தது போல!
காசு சம்பாதிக்காமல் செலவழிப்பது கேடு!
செலவழிக்காமல் இருப்பதே கடினம் போலத் தோன்றும்!
நல்வாழ்க்கையின் குறிக்கோள் வரவுக்குள் செலவழிப்பது!
அதனினும் நல்லது சில காசுகள் சேமித்தல்!
இன்று சேமிக்கும் சில காசுகள்
நாளை மழைபோலப் பயன்தரும்.
உண்மை!
உன்னிடம் மறைக்கக் கூடிய பையும் இல்லை!
உடைய காசும் இல்லை!
ஆயினும் சில காசுகள் வந்தன!
அவை உன்னுடையவை அல்ல; பிறருடையவை!
நீ விலைபோக இதுவே வழி!
வாங்கும்முன் பணப்பையைக் காத்துக் கொள்க!
கட்டத் தொடங்குகிறாயா? முடிக்கமுடியுமா? என்று
எண்ணிக் கட்டத் தொடங்கு!
கு. XIV. 24.

# 186. மெழுகுவர்த்தி

ஒரு சிறிய மெழுகுவர்த்தியைப் போல் விளங்கு!
பலரின் கவனத்தில் படுவாய்!
கண்ணியப்படுத்தப் படுவாய்!
மனித இயல்கள் நெடுந்தூரம் ஒளிவிடும்!
அந்த மனிதர்கள் ஒளிமிக்கவர்களாக இருந்தால்
நெடுந்தொலைவிலும் ஒளிவீசுவர்.
அண்மையிலும் ஒளிவீசுவர்!
இரவு இருளைக் கொணர்கிறது!
இருளை நீக்கி ஒளிதருவது மனிதனின் வாழ்வு!
மனிதன் முயன்றால் இருளை நீக்கி ஒளிதரலாம்!
மௌனத்தின் ஒளியைத் தவறாக எண்ணாதே!
மௌனம் சப்தமின்றியே சாதிக்கும்.
ஒளிக்கதிர்கள் ஹாரன் ஊதிக்கொண்டு வருவதில்லை!
ஒளிவிடும் அவ்வளவுதான்!
நீயும் அதையே செய்!
இந்த உலகம் உன் சொல் கேட்கும்!
உன் ஊதுகுழலாய் விளங்கும்!
ஒளிக்கதிர் எங்கு போகிறது?
எப்போது போகிறது?
எங்கு எந்த நல்ல காரியம் நடக்கிறது என்று
எவருக்குத் தெரியும்?
அந்த நல்ல காரியம் நல்ல வண்ணம்
முடிந்த பிறகே தெரியும்!
நீ அழியாமல் இருக்க வேண்டும் என்று எண்ணுவது
ஒருவழிப் பாதை!
அது வேண்டாம்!
ஒரு சிறிய எரியும் மெழுகுவர்த்தியைப்போல் வாழ்க!
ஒரு சிறிய மெழுகுவர்த்தி எவ்வளவு ஒளியைத் தருகிறது!
ஆதலால்,
நற்செயல்கள் மூலம் ஒளிவிடு!

## 187. உடலும் ஆன்மாவும்

நன்றி பாராட்டு!
நன்றி உணர்வினைப் போற்று!
கிணற்றுக்குள் வாளியை இறக்குவது ஏன்?
தண்ணீர் எடுப்பதற்கு
ஆனால், வருவதோ வெறும் வாளி!
அதுபோல வாழ்வு ஏன்?
உடல் ஏன்? உயிர் ஏன்?
உபயோக மற்ற நிலையில் சுமப்பது ஏன்?
எல்லாம் அமைந்த நிலையிலும் வெறுமை ஏன்?
நன்றியுணர்வுடனும் மகிழ்ச்சியுடனும்
பலரிடம் பழகினால் உறவு வளரும்!
ஆன்மா வெறுமையுறாது; அன்பு நிறையும்!
வெறுமையுடன் போகவேண்டிய அவசியமில்லை.
இணைந்த இருவர் ஒரு மாதிரி எண்ணுங்கள்!
இருவரும் மாறிமாறி அன்பினை நிரப்பிக் கொள்ளுங்கள்!
இப்போது உங்களிடையே வேற்றுமை இல்லை!
வாளிகள் மாறுபடலாம்!
நிரப்பப்பட்டது ஒரே பொருள்! – தண்ணீர்!
அது போல உடல்கள் வேறுபடலாம்
ஆனால் ஆன்மாவால்,
ஆன்மாவில் நிரப்பப்பட்டுள்ள அன்பால்
இருவரும் ஒருவரே!
இந்நிலை மாந்தர்க்கு வானகம் வையகத்ததே!

## 188. நலமும் நலமின்மையும்

*மானுடம் பெற்றுள்ள பேறுகள் பலப்பல!*
*நன்மைகளும் சில உண்டு!*
*நலமும் நலமின்மையும் மாந்தருக்கு*
*வலிமை தருகிறது; தளர்வு தருகிறது!*
*ஏன்?*
*நன்றும் தீதும் இயல்பென எண்ணும் சால்பின்மையே!*
*வாழ்தலுக்குரிய அடிப்படைத் தேவைகள்*
*கதிரொளி; கதிரொளியின் துணையால் கிடைக்கும்*
*வையத்தை வாழ்விக்கும் வான்மழை*
*உயிர்ப்புக் காற்று! புவிக்கோளம்*
*உடலினை, உயிரினை வளர்க்கும் தாவரங்கள்!*
*காலமெலாம் காத்துநிற்கும் கால்நடைகள்!*
*இப்படி இப்படி எண்ணற்றவை!*
*இவை மட்டுமா?*
*ஆயிரம் ஆயிரம் இயற்கை நிகழ்வுகள்!*
*இவையெல்லாம் பெற்ற மதிப்பே*
*மாந்தர்தம் மதிப்பையும் உயர்த்துகிறது!*
*ஆயினும் என்?*
*மாந்தர் இன்று வாழ்வதில்லை!*
*மாந்தரில் பலர் நேற்றைய வாழ்க்கையையே*
*இன்றும் வாழ்கின்றனர்!*
*இன்னும் சிலர் இன்றும் வாழ்வதில்லை!*
*இன்றே நாளைய வாழ்க்கையை வாழத் துடிக்கின்றனர்!*
*இவர்கள் காண்பதெல்லாம் கெட்ட கனா!*
*இப்புவிக்கோளம் குகையாகிவிட்டால் எங்கு நிற்பது?*
*உயிர்ப்புக்காற்று ஓடிவிட்டால் எதைச் சுவாசிப்பது?*

*தண்ணீர் வறண்டு போனால் எதைக் குடிப்பது?*
*என்றெல்லாம் எண்ணி எண்ணி*
*நாளைவரும் மரணத் துன்பத்தை இன்றே அனுபவிக்காதே!*
*வேண்டாம்! வேண்டாம்!*
*இன்று வாழ்க! இன்றுள்ள வாய்ப்புக்களை எண்ணி*
*மகிழ்க!*
*இன்றே வாழ்க! இனிது வாழ்க!*

## 189. வாழ்க்கையின் தரம்

நம்பிக்கை வாழ்க்கையின் தரமாகும்.
நம்பிக்கையே இன்றையநாளை உரிமை ஆக்குகிறது!
நம்பிக்கையை இழப்பின் இன்றைய நாளையும்
இழக்கின்றோம்!
நம்பிக்கையின்மையைவிட வெறுஞ்சோறு இனிது!
நம்பிக்கையின்மை ஏமாற்றங்களைத் தரும்.
சிலர் வேலை செய்வர்; பிரார்த்திப்பர்
ஆனால், எதையும் எதிர்பாரார்!
நம்பிக்கை கடவுளின்பால் வைத்தால்
இன்று உண்ட உணவு செரிக்கும்!
வெள்ளங்கள், வறட்சிகள், பூச்சிகள்
இவைகளால் இழப்புக்களும் இடர்களும் ஏற்படலாம்!
மனிதன் வாழ்கிறான்!
ஆதலால், நம்பிக்கை கொள்வது இயலாதது அல்ல!
வாழ்க்கையைக் கடினமுயற்சியுடைய தாக்குக!
இதுவே வாழும் முறைமை; நல்லதூஉங்கூட!
உன்னுடைய உணவு, ஓய்வுடன்
நம்பிக்கையையும் காட்டிடின்
எது செய்தாலும் கை கூடும்!
நம்பிக்கை கொள்க! நன்றாக வாழ்க!

## 190. பிரார்த்தனை செய்

உன் கால்களில் நிற்கும் துணிவு உண்டா?
கடவுளைப் பிரார்த்தனை செய்!
இறை நலம் அடைவாய்!
ஆன்மாவிற்குள்ளிருந்து பல ஆக்கங்களும் பெறுவாய்!
அந்த ஆக்கங்கள் பலம் தரும்!
முட்டாளாகவும் இருக்காதே!
கடவுளாகவும் முயற்சி செய்யாதே!
கடவுளிடம் விண்ணப்பத்தைக் கொடு!
நிதானமாக நினை! விவாதம் செய்!
தெளிந்த முடிவுகளை விண்ணப்பம் ஆக்குக!
பிழையெலாம் தவிரப் பணிக்கும்படி வேண்டுக!
சோதனைகளிலிருந்தும் இடர்களிலிருந்தும்
எடுத்துக் காப்பாற்றும்படி பிரார்த்தனை செய்க!
இலக்குகள், ஆர்வங்கள்
இவற்றை வாழ்த்தும்படி பிரார்த்தனை செய்க!
திருவருளுடன் தொடர்பு கொள்க!
திருவருளுடன் ஒன்றுக!
இதுதான் பிரார்த்தனை!

## 191. தர்மத்தின் பக்கம் இரு

உனக்கு வேண்டியவர்கள் பட்டியலைத் தயார் செய்வதில்
அவசரப் படாதே!
மெதுவாகச் செய்!
உன் இதயத்தில் உள்ள கருணையால்
நீ உன் பட்டியலில் சேர்ப்பவர்கள்
உன் இதயத்தில் படும் புண்களைக் கூடப்
பெரிது படுத்த மாட்டார்கள்!
தீமையின் நடுவில் நல்லதாயிருத்தல்
நல்லதில் மோசமாக இருத்தல்
இவை, மன்னிக்க முடியாத இயல்புகள்!
நீ நன்றாக நடத்தப்படவில்லையா?
எழுந்து நில்!
மற்றவர்கள் உன்னைக் கண்டனம் செய்தால்
பெருந்தன்மையுடன் விளங்குக!
கயிறு இழுவையில் போராட்டம் நிகழ்வுறின்
நீ நிற்கும் முனை தர்மமாக இருக்கட்டும்
நினைவிற் கொள்க!
வளர்த்த பூனையும் காட்டிய அன்பும்
உன்னிடம் திரும்பவந்து சேரும்!
சின்ன மனிதர்களிடம் பெருந்தன்மையுடையவனாக
நடந்து வெற்றி பெறுக!

## 192. சான்றோர் வழி!

*நன்னடத்தையும் நல்ல அறிவும் இணைந்தவை!*
*மரியாதையற்ற நடைமுறைகள்*
*நினைப்புகளை வெளிப்படுத்தும்*
*மரியாதை அறிவின் விளைவு!*
*புத்தியில்லா மனிதன்*
*தனது காட்டுத் தனத்தை*
*வாய்ப்புகள் வந்துழியெல்லாம் காட்டுவான்*
*நல்ல நடத்தைகள் வரவேற்கப் பெறும்*
*நல்ல நடத்தையுடையவர்களை*
*மக்கள் தொழுது வரவேற்பர்!*
*நல்லெண்ணமும் நன்னடத்தையும்*
*இரட்டைப் பிறவிகள்*
*இந்த வழியே சான்றோர் வழி!*
*குரங்குகள் போலத் தாவமாட்டார்கள்!*
*துள்ளிக் குதிக்கமாட்டார்கள்!*
*நாய்களைப் போலக் குரைக்கமாட்டார்கள்*
*மனித உறவுகளை நாகரிகமாகப் பேணு வார்கள்*
*எப்போதும் எவருடனும் உராயமாட்டார்கள்*
*நீ ஒன்று செய்!*
*நீ, நிலை குலைந்து விட்டாயா?*
*நீ, ஒரு மனிதனாக நடந்து கொள்*
*இதற்கென்ன விலையா தரவேண்டும்?*
*இந்தப் பழக்கம் நண்பர்களைக் காத்துத் தரும்!*
*வேண்டியபோது உணவும் கிடைக்கும்*
*விலை மதிப்புடைய நாகரிகம் பேணுக!*

## 193. மற்றவர் மகிழப் பேசு!

பேச எடுத்த பொருளைக் கடக்க முடியாமல் திணறல்!
ஐயோ, பாவம்!
ஒன்றையே பன்னிப் பன்னிப் பேசி
மற்றவர் காலத்தையும் கெடுப்பது நியாயமா?
சொன்னதையே சொல்லி
கேட்டதையே கேட்க வைத்தால்
வெறுப்படைய மாட்டார்களா?
பொறுமைசாலிக்கும் பொறுமை போய்விடும்
வேறு வழியில்லை!
சொல்வதைச் சுருக்குக!
கதவுகளின் 'கிரீச' சப்தத்தைப்போல
உன் பேச்சு ஆகிவிடக் கூடாது
சுருக்குக! சுருக்கமாக உன் பேச்சு இருக்கட்டும்!
சுவையான பேச்சேயானாலும்
நீண்டால் வெறுப்புத் தட்டி விடும்!
போதும்! போதும்! என்று முணுமுணுக்க விடாதே!
மற்றவர்கள் மகிழப் பேசு.

## 194. இந்த நாளும் எந்த நாளும்!

*இந்தப் புத்தாண்டில் 1993–ல் என்னுடைய பிரார்த்தனை!*
*ஒவ்வொரு நாளையும் என்னுடைய நாளாக்குவேன்!*
*ஒருநாளும் பழுதாக விடேன்!*
*முன்னே பார்ப்பேன்! பின்னே பார்த்தல் இல்லை!*
*இறைவனே, சமாதானத்தை அருளிச் செய்க!*
*இறைவனே, மன அமைதியைக் கொடு*
*இறைவா சண்டைகளிலிருந்து காப்பாற்று!*
*இறைவா, வேண்டாம் மனக் கசப்புகளும் ஆத்திரமும்*
*இறைவா, எல்லாரும் நன்றாக இருக்க அருள் செய்வாய்!*
*இறைவா, என்னை விரும்பாதவனிடத்திலும் நான்*
*அன்பாக இருக்கும்*
*இதயத்தினைத் தந்தருள் செய்க!*
*இறைவா என் தவறுகளைச் சடுதியில் அறிந்துணர*
*அருள்செய்க!*
*இறைவா, விரைந்து திருத்தமுற அருள்செய்க!*
*இறைவா, என்னைப் பெருந்தன்மைப் பண்புகளால்*
*விளங்கச் செய்க.*
*இறைவா, அன்பு செய்தலும் உதவி செய்தலும்*
*என்றன் இயல்பாக அமைய அருள் செய்க*
*இறைவா, தீமை வெறுத்திடும் பண்பினை வழங்குக!*
*இறைவா மனிதனாக வாழ்ந்திட வலிமையைத் தா!*
*இறைவா, வாழ்க்கையின் விலையை மதிப்புடையதாகக்*
*கற்றுத்தா!*
*இறைவா, வாழ்க்கையின் வாடகையைக் குடிக் கூலியாக*
*வழங்க அருள்செய்க!*
*இறைவா, உன்னுடன் சேர்ந்து சிந்திக்கிறேன்*
*இறைவா, உன்னுடன் நடக்கிறேன்*
*இறைவா, கடைசிவரையில் உன்னுடன் நடப்பேன்!*

## 195. உறுதி மொழி!

பிழைகளைத் தவிர்ப்பேன்!
உரிய சாதனைகளுக்கு அழுத்தமான முயற்சிகளை
எடுப்பேன்!
முதன்மையானவற்றை முன்னுரிமை வரிசையில் செய்வேன்.
பணிகளை மகிழ்வுடன் செய்வேன்!
எந்த ஒன்றும் மன அமைதியைக் கெடுக்க அனுமதியேன்!
நான் என் கட்டுப்பாட்டை இழக்கமாட்டேன்!
எந்தச் சூழ்நிலையிலும் இழக்கமாட்டேன்
என்னை வளர்த்துக் கொள்வேன்!
என்னையே நோக்கி உருவாக்கிக் கொள்வதில்
காலம் மிகுதியும் செலவழிப்பேன்
ஆதலால்,
மற்றவர்களை விமர்சனம் செய்யப் பொழுது இல்லை!
நல்லதைச் சிந்திப்பேன்! நல்லதுக்காகச் செய்வேன்!
நன்மையை எதிர்பார்ப்பேன்!
மனிதர்களுக்கு நண்பனாக இருப்பேன்!
நல்லதுக்கும் நியாயத்துக்கும் துணை நிற்பேன்!
வழக்காடுவேன்!
உண்மையாக இருப்பேன்! அன்பாக இருப்பேன்!
ஏமாற்றங்களை உணர்வுக் கிளர்ச்சிகளாக ஏற்பேன்
ஒளியின் நிழலில் வாழ்வேன்!
புயல்கள் சூழவரினும் கதிரொளியின் சாயலிலேயே
நிற்பேன்!
சிரித்து மகிழ்வேன்! புன்முறுவல் பூத்த முகம் பேணுவேன்!
எப்போதும் முன்னேற்றத்தையே விரும்புவேன்!
இயக்க நிலையை எப்போதும் பேணுவேன்
நான் இருக்க விரும்பும் நிலைக்குரிய முயற்சி செய்வேன்;
உழைப்பே
எடுத்த முடிவுகளுக்குச் செயலுருவம் கொடுப்பேன்!
தவறாது முடிவுகளுக்கு முயற்சியின் முழு வடிவம்
தருவேன்!

## 196. தேவையைத் தேடு!

நீ பிறப்பில் வென்றவனும் அல்ல, இழந்தவனும் அல்ல,
நீ, எப்படி வாழ்கிறாய்?
நீ எப்படி வாழ்க்கையின் விளையாட்டை
விளையாடுகின்றாய்?
என்பதைச் சார்ந்ததே வெற்றியும் தோல்வியும்!
உன்னுடைய பொதுவான பழக்கங்களே
தலைமுறைகளைவிட அதிகப் பங்கு பெறுகிறது
உன்வெற்றி தோல்வியை நிர்ணயிப்பதில்
நாள்தோறும் வெற்றிப் புள்ளிகளைக் கூட்டுக!
உன் மூதாதையர் வாழ் நிலைக்கும் உன் வாழ் நிலைக்கும்
வித்தியாசம் காட்டுக! அதுவே வளர்ச்சி!
உன் மூதாதையர்
உனக்குச் சட்டை தைத்து வைத்தல் இயலாது;
பொருந்தாது.
அப்படி அவர்கள் தருவதும் இல்லை!
நீ, தேடு! உன் தேவையை நீ தேடு!
உன் மூதாதையர் உன்னைக் கேட்பர்;
நீ, என்ன செய்தாய்?
என்ன செய்து கொண்டிருக்கிறாய்? என்று!
இதுவே உன்னை நிர்ணயிப்பது; நிறுத்துவது!
உன் மூதாதையர் நிலையை
உன் கணக்கில் யாரும் எடுத்துக் கொள்ளமாட்டார்கள்!
நீ, வாழ்! செயல்களால் வாழ்க!
வரலாற்றில் உன் பெயரில் எஞ்சி நிற்பது
செயல் ஒன்றேயாம்!

## 197. கடிகார மூச்சு

*பழைய கடிகாரம் ஓடுவதை நிறுத்திக் கொண்டது!*
*ஏன்? எதனால்?*
*கடிகாரம் ஆண்டு முழுதும் "டிக்" ஒலி செய்து*
*முடிக்க வேண்டிய "டிக்" 31,536,000 தடவைகள்*
*இங்ஙனம் அடிக்கவேண்டிய எண்ணிக்கை*
*கூடுதலாகவும் குறைவாகவும் வந்தது!*
*'டிக்'கில் வித்தியாசம்! மணியில் வித்தியாசம்!*
*காலத்தில் வித்தியாசம் ஆயிற்று!*
*உடன் கடிகாரம் மனச் சான்றுடன் நின்று கொண்டது!*
*கடிகாரத்திற்கு விளக்கம் தரப்பெற்றது!*
*ஒரு "டிக்" அதைத் தொடர்ந்து*
*ஒன்றுக்குப்பின் ஒன்றாக "டிக்"*
*ஒரே நேரத்தில் என்று கடிகாரமும் இசைந்தது!*
*"டிக்" அடித்துக் கொண்டே ஓடத் தொடங்கியது*
*அப்படியானால், மனிதன் உடம்பில் புண்ணைக் கண்ட*
*பய உணர்வினைப் போல*
*தன் கடமையைப் படிப்படியாக, இயக்கமாகக்*
*காலந்தோறும் தவறாமல் செய்த*
*காலங்காட்டுங் கருவி – கடிகாரம்*
*முப்பத்து ஓராயிரத்து ஐந்நூற்று முப்பத்து ஆறாயிரம்*
*சுற்றியது என்று கணக்குக் காட்டுகிறது!*
*நீயும் உன்வாழ்க்கையில் கணக்குக் காட்ட இயலுமா?*
*இயன்றால் வாழ்ந்தாய்!*
*இல்லையெனில் கடிகாரம் நின்றதுபோல்*
*மூச்சு நின்று கொள்ளட்டுமே!*

## 198. அகநிலைச் சிக்கல்

*மானுடமே! உனக்கு இலக்கு எது?*
*"நான் நல்லவனாதல்"*
*"நான் திறமையில் மேம்பாடுறுதல்"*
*"நான் மகிழ்ச்சியுடையவனாதல்"*
*ஆகிய இம்மூன்றும் உன்றன் இலக்குகளாக அமையட்டும்!*
*இவையே, மானுடத்தின் ஆதாரநிலைகள்*
*மற்றவையெல்லாம் புறத்த; புகழுமில!*
*நீ, செல்வம், கல்வி, தகுதி இவை யெல்லாம்*
*அடைந்து அனுபவித்து வருகிறாயா?*
*உன்னை நீயே நோக்கு; வினாக்களைத் தொடு!*
*விடை என்ன?*
*நான் நல்லவனா?*
*நான் திறமைசாலியா?*
*நான் மகிழ்ச்சியுடன் இருக்கிறேனா?*
*என்ன விடை?*
*இவையெல்லாம் உன்னிடத்தில் இல்லையா?*
*மீண்டும் உன்னையே நோக்கு!*
*உன் இதயத்தைப்பார்! இதயம் விடை தருகிறது!*
*உணர்ச்சி வசப்படாதே! உன்னைக் கட்டுப்படுத்து!*
*பரபரப்பை விடு! விவாதம் பண்ணாதே!*
*அதிகமாக விரும்பு; சற்றே ஐயப்படு!*
*உன் முன் மனதுக்குத் தடை! உன் அகநிலைச் சிக்கல்*
*களையும்?*
*மனிதனை நிர்ணயிப்பது அவற்றின் செயல்களே!*
*மனிதனின் பெருமையும் மகிழ்ச்சியும்*
*அவனுடைய படைப்புக்களேயாம்!*

## 199. சின்னத் தொடக்கம்

வென்று விளங்குவன எல்லாம்
சின்னஞ் சிறியனவாகத் தொடங்கப் பெற்றனவேயாம்!
கேழ்வரகின் பரிணாம வளர்ச்சியே ஓக்!
வானவில் எளிய ஒளியின் படைப்பே!
ஒளிரும் ஒளியில் ஒருதுளி தண்ணீரே,
வானவில்லின் தோற்றம்!
பல துளிகள் சேர்ந்ததே ஆழ்கடல்!
அரிச்சுவடி படிச்சவனே பின் பட்டதாரியாகிறான்!
ஒரு சிறு எண்ணெய் ஊற்றே
எண்ணெய்த் தொழிலாக வளர்ந்தது!
இன்று பிரம்மாண்டமாக வளர்ந்து நிற்பனவெல்லாம்
ஆரம்ப காலத்தில் சின்னஞ்சிறிய தொடக்கங்களேயாம்!
ஓர் எளிமையான தொடக்கம் பெரிதும் விளங்கும்!
நாளும் வழிபாடு செய்!
நல்லன எல்லாம் அடைவாய்!

## 200. நல்லபணியைச் செய்க

பூவிரி உலகில் கலைஞன் ஒன்றைப் படைக்க
நிறைய நேரம் கேட்கிறான்!
ஆயினும் அவன்வேலை மதிப்புடையது!
நாம் எவ்வளவு செய்தோம்?
நாம் அதனை எப்படிச் செய்தோம்?
இவையே பணியின் தரத்தைக் காட்டுவன.
பணி செய்வதின் அளவு தரத்தில் இருக்கிறது!
செய்யும் திறன்—சக்தி!
சக்தி திறமைகளைச் சார்ந்தது
உளப்பாங்கான ஈடுபாடும் பொறுத்தாற்றும் பண்பும்
வாழ்க்கையின் தரத்தை உயர்த்தும்!
நினைவுச் சின்னங்கள் கலைஞர்களுக்கு உண்டு!
தூங்கு மூஞ்சிகளுக்கு எதுவும் இல்லை!
நமது பணியிலிருந்து நாம் நழுவாமல் இருக்க,
தடைகள் ஏதும் வராமல் இருக்க —
தடைகள் நிறைந்த வாழ்க்கையில் வெற்றிபெற
ஓயாது உன்பணியைச் செய்திடு!
உன்னைவிட உன்பணி உயர்ந்து விளங்க வேண்டும்!
அவசரம் இழப்புக்களைத் தரும்!
பொருளுக்கு மட்டுமல்ல வாழ்க்கைக்கும் கூட!
வாழ்க்கை, வலம் வந்து கொண்டிருக்கும்!

௫·XIV·25.

## 201. சுவை தெரிந்து தேர்க!

காதுகள் கேட்க; கண்கள் பார்க்க!
வளமான சொத்துக்களை,
பொதுவான அதிசயப் படைப்புக்களை
ஒருவர் கவனத்துடன் பார்க்கவும் தெரிந்து கொள்ளவும்
முடியும்! முடிவுகளும் எடுக்க இயலும்!
வானம் கடவுளின் புகழ்பாடும்!
மரங்கள் பேசும்; "எங்கள் பழங்களைக் கொண்டு தேர்க!"
எங்களை என்று!
சுவை தெரிந்து தேர்க!
பொறுமையுடன் படிக்கும் புத்தகங்கள் போதிக்கின்றன!
இயற்கை தனது எல்லைகளை நாடுகின்றது!
கல்லில் பொறிக்கப் பெற்றுள்ள நீதி போதனைகள்
செயலாக்க வேண்டித் தவம் கிடக்கின்றன!
அவன் எதிலும் நல்லதைப்பார்ப்பான்!
விளம்பரத்திலும் கூட அவன் போக்கு தனிப்போக்கு!
மனித நேயப்போக்கு விரும்பி வரவேற்கப் படுகிறது!
தன்னைத் தானே தேர்வு செய்து கொள்ளல்
எந்தச் சூழ்நிலையிலும் சரிக்கட்டிக் கொண்டுபோதல்
எப்பணியையும் தொடங்கும் ஆர்வத்தில் முனைதல்
கடினங்களாயினும் அவன் வழி தவறுதல் இல்லை!
அவனை அவன் முட்டாளாக்கிக் கொள்ளமாட்டான்!

## 202. மனச்சாட்சி

"தன்னெஞ் சறிவது பொய்யற்க!" – என்பது திருக்குறள்:
மனிதனின் மனச்சாட்சியே அவனைப்பற்றித் தீர்ப்புக்
கூறுகிறது!
மனிதனின் நடத்தையைச் சாட்சியாகக் கொண்டு
ஆன்மாவின் மனச்சாட்சியே தீர்ப்புக் கூறுகிறது.
இந்த உலக நடைகளை, நியதிகளை நிர்ணயிப்பது
கடவுளின் திருச்சட்டங்களே!
ஆயினும்,
தீர்ப்பை எழுதுவது மனிதமனச் சாட்சியேயாம்
மனிதன் கடவுளின் சட்டஆட்சிக்கு – தீர்ப்புக்கு
முனைந்து முயன்று நின்றதில்
குற்றமற்றவன் என்று தீர்ப்பு!
ஆயினும் என்?
மனச்சாட்சி குற்றமற்றவன் என்று அறிய வேண்டும்!
மனச்சாட்சியின் தீர்ப்புக்குப் பின்தான்
மனிதன் விடுதலை பெறுகிறான்!
உயர்நீதி மன்றம் முதல் கடவுள் திருச்சபை ஈறாக
எதைத் தீர்ப்பாக எழுதினால் என்ன?
மனச்சாட்சி எழுதும் தீர்ப்பே தீர்ப்பு!
மனச்சாட்சியே மனிதனுக்கு விடுதலை அளிக்க இயலும்!
மனச்சாட்சியே! என்னை விடுதலை செய்!
இந்த நாளை உன்னுடைய நாளாகப்
பயன்படுத்துகிறாயா?
ஆன்மாவின் மனச்சாட்சியைக் கூர்ந்து நோக்கு!
விடுதலை பெறுக!

## 203. செயலே பெரிது!

உபதேசமும் வாழ்வியலும் ஈருருளைகள்!
சொல்வதைப் போலச் செய்தல் விழுப்பம்!
நீ, எதை நம்புகிறாய்! அதையே செய்து பழகு!
நீ, ஒரு மதபோதகரா?
மருத்துவம் செய்பவரா?
எத்தொழிலாகவேனும் இருக்கட்டும்!
நீ, எதைப் போதிக்கிறாயோ
அதற்காக நீ வாழ்ந்தால்
அதுவே உயர் போதனையாக அமையும்!
இதுவே சரியான நியதி!
உபதேசியா? உபதேசித்தலிலேயே வாழ்கின்றான்
மருத்துவன், மருத்துவம் செய்தலிலேயே வாழ்கின்றான்!
நாம் கவனிப்போம்!
போதனைகளில் சிறந்தது செயல்களே!
செயல்களிலேயே மானுடம் வெற்றி காண்பது!

## 204. முறைமையும் முறைகேடும்

முறையாகச் செய்வதே
சமுதாய முன்னேற்றத்தின் அளவுகோல்!
முன்னேற்றத் திசையின் ஒவ்வோர் அடியும்
முறைமையிலிருந்து முறைமைக்கேயாம்
முறைகேட்டிலிருந்து முறை கேட்டுக்குப் பயணம்
அழிவேயாம்!
சமூகச் சிக்கல்களுக்குத் தீர்வு, முறை யேயாம்!
முறைகேடு சிக்கல்களைத் தோற்றுவிக்கும்
முறைகேடுகளுக்குப் புதிய துணிகளை உடுத்தினாலும்
உள்ள தோற்றம் மறைவதில்லை!
முறை கேடுகளால் காயங்களைத்தான் மூடலாம்
ஆனாலும், நலம் இழக்கப்பட்டதேயாம்!
முறைமை, முறை கேட்டினை ஏற்காது!
முறை கேட்டை விருப்பம் போல எல்லாம் புனைவு
செய்தாலும்
முறைமை மேலோங்கியே நிற்கும்
முறைமைகள் தோற்றம் இல்லாமல் போகலாம்
ஆயினும் முறைமையே பரிசுகளைப் பெறும்
முறைகேடுகள் சபிக்கப்படுவன.

## 205. அன்பு வெற்றிபெறும்

ஞாலம் புகழ் வெற்றிக்குரிய குணம் அன்பே!
உலகமே தோற்றாலும் அன்பு தோல்வியுறாது!
நீ, பலரைத் தாக்குவதன்மூலம் வெற்றிபெற இயலாது!
நீ, பலருடன் சந்தடி செய்வதால் வெற்றிபெற இயலாது!
நீ, பலரைச் சங்கட நிலைகளுக்கு
ஆளாக்குவதன் மூலம் வெற்றிபெற இயலாது!
நீ, பலரைச் சுரண்டுவதன் மூலம் வெற்றிபெற இயலாது!
நீ, பலரை அச்சுறுத்தியும் வெற்றிபெற இயலாது.
நீ அவர்களை உன் அன்பினால் உலுக்கி
அவர்களை உன்பால் ஈர்க்கலாம்!
அன்பினால் இயலும்; சாலும்!
அரசியலும் காரணங்களும் பயமும் தோற்கும்
அன்பு வெற்றி பெறும்!
தகுதியின்மை, தகுதியைப் பெறப் போராடும்!
போராட்டத்துக்கு அரசியல் ஏன்?
காரணங்கள் அடிக்கடி சந்திக்கும்!
ஆனாலும்,
அன்பு, இக்காரணங்களைப் புறத்தே தள்ளும்!
அடிக்கு அடி என்பது நியதியாகாது!
அன்பு, அன்புள்ளங்களைக் காணும்!
அன்பு, காரணங்களைத் தேடாது!
அன்பு, வேற்றுமைகளைப் பாராட்டாது!
அன்பு, வேறுபாடுகளும் காட்டாது. உணர்க!
விவாதங்களுக்கு அவசியம் இல்லை! அறிவுக்கு
அவசியமில்லை!
காரணங்களும் அவசியமில்லை – பயப்படுவதற்கு!
பயம் ஏன்? அன்பு இல்லை! அதனால் பயம்!
அன்பைக் காட்டுக! வெற்றி பெறுக!

## 206. பணமும் மனமும்

பணம் என்ன செய்யும்?
பணம், நீ என்ன செய்ய நினைக்கிறாயோ
அதைச் செய்யும்!
இந்த உலகத்தில் செல்வாக்கு உள்ளவற்றில்
தலையாயது பணமே!
பணத்தாசை ஆற்றல் மிக்குடையதே!
ஆனால், இது நல்லதல்ல! என்ன செய்ய?
உலகத்து இயற்கை இது!
ஆனால், பணம் கெட்டதா? இல்லை, இல்லை!
பணம் நல்லதூஉம் அன்று; தீயதூஉம் அன்று.
பணம் படைத்தவன் செயல்கள்
பணத்தைப் பாதிக்கின்றன.
பணம்பற்றிய மனிதனின் சிந்தனையே
பணத்தையும் கெடுக்கிறது!
மனிதனையும் கெடுக்கிறது!
மனிதன் பணத்தினால் மகிழ்வும் துன்பமும் அடைகிறான்!
மனித வாழ்க்கையின் மையம் பணமே!
மனிதனின் மகிழ்வும் துக்கமும்
அவனுடைய பணத்தைச் சுற்றி வருகிறது!
பணம், மனிதனின் கொற்றாளா?
பணம், மனிதனின் எஜமானனா?
இவ்விரண்டின் அணுகுமுறையே
பணத்திலிருந்து பணமுடையோரின்
இயல்பை நிர்ணயிக்கிறது.

## 207. இதயத்தை ஆள்!

மனித உரிமைகளைக் கருவூலமாகக்
கொண்டிருக்கும் மனிதன்
அமெரிக்காவின் வாஷிங்டன் செய்தது போலச்
செய்து சிறப்புறுதல் வேண்டும்
வாஷிங்டன் வாழ்க்கையின் ஊதியம்
எதுவென எண்ணினானோ
அதையே, ஒவ்வொரு மனிதனும் முதன்மைப்படுத்த
வேண்டும்.
மனிதன் - மனிதன் உருவாக்கம் பெற்றுள்ள
படிவத்தை நோக்கின்
அவன் தனியே வாழ்வதற்குப் படைக்கப்பட்டவன் அல்ல-
என்ற உண்மை புலனாகும்!
இதுவே, வாஷிங்டன் உணர்ந்த உண்மை.
வாஷிங்டன் எதிர்ப்புகளை ஏற்று நின்றான்!
அதுபோல நிற்கவும்
வாஷிங்டன் கட்சிமனப் பான்மையையும்
வஞ்சனையையும் கடந்து உயர்ந்து நின்றான்!
வாஷிங்டன் உயர்ந்து நின்று விளங்கினான்!
ஆனாலும் அரசனாகி ஆள மறுத்தான்;
வாஷிங்டன் அனைவரையும் நம்பினான்
மனிதன் காரணங்களுடன் நிற்கின்றான்!
அது என்ன காரணம்? நல்ல அரசனா?
அவன் நாட்டை ஆளமாட்டான்;
மக்களின் இதயத்தை ஆள்வான்!

## 208. படிப்பினை பலன் தரும்

வாழ்க! கற்றுக் கொள்க!
ஆனால், கற்றுக் கொள்ளுதல் முதல்நிலை;
அடுத்தது வாழ்தல்!
வாழ்க்கையின் குறிக்கோளும் அதுவே!
நல்லவழியில் படிப்பினைகளை எடுத்துக்கொள்!
நம்மை நாம் அறிதல் முதற்படி!
நாம் என்ன செய்ய வேண்டும்?
நாம் செய்ய வேண்டியதைச் செய்ய
வேண்டுவதெல்லாம் என்ன?
இம்மூன்றினையும் அடையும் வாயில்கள் நம்முன் உள்ளன!
ஒவ்வொருவருக்கும் நாக்கு உண்டு!
வினா எழுப்பி விடை கேட்டறிந்து கற்றுக்கொள்!
நாக்கு படித்தவனுக்கும் உண்டு!
படியாதவனுக்கும் உண்டு!
நாக்கு, இளைஞனுக்கும் உண்டு; கிழவனுக்கும் உண்டு!
ஏன்?
நண்பனுக்கும் நாக்கு உண்டு; எதிரிக்கும் உண்டு!
நினைவிலும் படிப்பினை உண்டு;
மறத்தலிலும் படிப்பினை உண்டு!
மகிழ்தலிலும் படிப்பினை உண்டு;
துயரத்திலும் படிப்பினை உண்டு!
அமைதியிலும் படிப்பினை உண்டு;
வெகுளலிலும் படிப்பினை உண்டு!
சிக்கனத்திலும் படிப்பினை உண்டு;
செலவிலும் படிப்பினை உண்டு.
முயற்சியிலும் படிப்பினை உண்டு;
தவறுகளிலும் படிப்பினையும் உண்டு.
வெற்றியிலும் தோல்வியிலும் படிப்பினைகள் உண்டு.
எங்கும் எவையும் படிப்பினை வழங்கும் ஆசிரிய
அமைப்பே!
ஆசிரியர்களுக்குப் பஞ்சமில்லை!
மாணவர்கள் என்ன ஆனார்கள்?

# 209. தீர்ப்பு

தவறான தீர்ப்புகளே
வாழ்க்கையைத் தோல்வி முனைக்கு அழைத்துச் செல்லும்!
உதைபந்து விளையாட்டாளன்
பந்தொடு விபத்துக்களை எதிர்பார்த்து முன்னேறுவான்!
அதுபோலத் தான் வாழ்க்கை!
ஆயினும், அறியாமை கலந்த தீர்ப்பினையே
ஒவ்வொரு தடவையும் எடுக்கிறாய்! பயன்படுத்துகிறாய்!
இந்தமுறை மாறாவிடில் ஒருபோதும் இலக்கினை
அடையாய்
வெற்றியும் இல்லை!
தவறுதல் - பொதுவாக மனித இயற்கை!
நீயும் தவறுகளைச் செய்வாய்
எது எப்படியிருப்பினும்
உனது இதயம் உண்மையாகவும் மனிதம் மிக்கதாகவும்
இருப்பின்
உனது தீர்ப்பு குருட்டுத்தனமானது என்று உணர்த்தும்
ஆனால், ஒரே ஒரு பிழை
அதுதான் தீர்ப்பு தவறானது என்பது
உனது தவறான தீர்ப்புக்கு அடிப்படை இல்லை.
சகிப்புத் தன்மையை விடத் தீர்ப்பு மேலோங்கி நிற்கிறது!
உனது ஒவ்வொரு தவறான தீர்ப்பும்
தவறான முடிவுகளையே தருகின்றன!
நாம் உண்மையை விரும்புகின்றோம்!
யார் அழைத்துச் செல்வது?
குருட்டுத் தனத்தை மன்னிக்கலாம்!
ஆனால், அடிப்படை இல்லாததை என்ன செய்வது?

## 210. போராட்ட வெற்றி

வெற்றியோ, வெற்றி!
உண்மையில் முயல்வோனுக்குத் தோல்வி ஏது?
விடாமுயற்சியே வெற்றி!
முயற்சியுடையார் இலக்கை அடையாது போனாலும்
அவர் பல வெற்றிகளைப் பெறுவார்!
பரிசுகளையும் பெறுவார்!
முயன்ற அளவுக்குப் பெருமை உண்டு!
நிலத்திற்குள் தங்கச் சுரங்கம் என்று
எண்ணித் தோண்டலாம்!
தங்கம் கிடைக்கவில்லை யாயினும்
உடல் வலிமை உடையதாயிற்று!
பரிசுகளைவிடப் போராட்டம் பெரியது! உயர்ந்தது!
மனிதன் போராட்டப் பிராணி போராடட்டும்!
மனிதன் போராட்டத்தின்போது வாழ்க்கையை
விரும்புகிறான்!
கவனத்துடன் களத்தில் நின்று போராடுகின்றான்!
அவனே அவனுடைய இலட்சியமாகி நிற்கின்றான்!
ஒழுங்குமுறைகளைக் காண்கின்றான்!
எழுச்சியும் கிளர்ச்சியும் பெற்று நிற்கின்றான்!
மனநிறைவோடு வாழ்க்கையைச் செலுத்துகின்றான்!
நான் என்பயணத்தை முன்நோக்கிச் செலுத்தினால்
நான் பின்னடைவைத் தவிர்ப்பேன்
இலக்கை நோக்கியே பயணம் தொடரும்! நிற்காது!
பின்னடைவு இல்லை! இல்லை! உறுதி!
என்ன நடந்தால் என்ன? எது வந்தால் என்ன?
வெற்றி உறுதி! வெற்றி! வெற்றி!

## 211. நல்லதை நினை; செய்!

*மற! மறந்து விடு!*
*நன்றல்லது அன்றே மறந்து விடு!*
*மனத்தில் கவலையை நீக்குக!*
*மனத்திலிருந்து அவலம் நிறைந்த அமைதியின்மையை விலக்கு!*
*சிலரின் கொடிய செயல் உன்னைப் புண்படுத்தி இருக்கலாம்!*
*அதையும் மற!*
*அந்தக் கொடிய செயலை நினையாதே! நினையாதே!*
*கொடுமையைக் குளிர்மனத்தில் நினைத்தலும் வேண்டாம்!*
*சிலருடைய முறை கேடான மதிப்பீடு,*
*உனக்கு எரிச்சலை உண்டாக்கியிருக்கலாம்! அது கிடக்கட்டும்!*
*சில கொடியவர்கள் தம் எண்ணத்தை*
*வெளிப்படுத்தச் செய்திருக்கிறார்கள்!*
*ஆனாலும், அவற்றை மறப்பது இருபாலும் மகிழ்ச்சி!*
*சிலர் உன்னை, உன் நண்பனிடமிருந்து பிரிக்க, பழிதூற்றலாம்!*
*அதனையும் மறந்து விடு!*
*நல்லதை எண்ணுக! நல்லதைச் செய்க!*
*உன் அமைதி நிறைந்த மனத்தைப் பாதுகாத்துக் கொள்!*
*சந்தேகத்துடன் கூடிய பார்வை*
*உனது தூய அன்பைக் கெடுக்கும்; அதனையும் மற!*
*சந்தேகப் பார்வைக்கு ஈடாக*
*நம்பிக்கையுடன் கூடிய நல்லபார்வையைத் தருக!*
*மறந்து விடுக!*

*தீமைக்கு ஈடாக நன்மையைச் செய்க!*
*நம்பிக்கையோடு நோக்குக!*
*நம்பிக்கையைப் பெறுக!*
*தீமை தொடராது, நாம் நினைக்காவிடில்!*
*மற்றவர்களின் பாபச் சுமைகளைச் சுமந்து நட!*
*கேடொன்று மில்லை!*
*குப்பை மேட்டில் தீ பற்றும்; எரியும்!*
*வெறுந்தரையில் அணைந்து போகும்!*
*உன் மனத்தூய்மையில் மற்றவர் தீமை தாக்காது;*
*கவலற்க!*
*அமைதியின்வழி அனைத்தையும் ஏற்றிடுக!*

## 212. குறிக்கோள் வாழ்வு

மண்ணில் நடந்திடும் வாழ்க்கை மகிழ்ச்சியானது!
எப்போது?
உயரிய குறிக்கோளுக்காகவோ, பிறருக்காகவோ
உன்னையே அர்ப்பணித்துக் கொள்ளும்போது!
பிறருக்கென முயலும் நோன்பினைத் தொடர்ந்திடும்
போது!
அவன் மகிழ்வுறுகிறான்; அமைதி பெறுகிறான்;
மனநிறைவும் காண்கிறான்.
இத்தகு வாழ்வு, அவனுக்கு வாழ்க்கையில் பிடிப்பைத்
தருகிறது!
முனைப்புடன் வாழத் தலைப்படுகிறான்!
இவன் வாழ்க்கையில் மந்தம் இல்லை! தூக்கமும் இல்லை!
துக்கமும் இல்லை!
மிருகங்களுக்கு அன்றாட வாழ்வே காரியம்!
மாந்தரில் உயர்ந்தவனுக்கோ, வாழ்தலிலும் உயர்ந்தவை
உண்டு!
உறுதிமிக்கவையும் முதன்மையானவையும் உண்டு!
சிலர், மதிப்புயர் பண்பு நலன்களைத் தேர்வர்!
சிலர் சமய நெறி சார்வர்!
மற்றும் சிலர், பிறருக்கு அன்பு காட்டுவர்!
நாட்டுநலம் பேணுவர் சிலர்!
சிலர், புகழ்வேட்டு நிற்பர்!
குறிக்கோளுடைய மனிதர்
அக்குறிக்கோளினை அடையச் சாவையும் ஏற்பர்!
அவர்கள் வாழ்தலுக்கும், சாவாமல் வாழ்தலுக்குமிடையே
உடன்பாடு காணார்!
குறிக்கோளுடைய வாழ்வே, வாழ்வு!
அழகை அடகு வைத்து
அரை வயிற்றுக் கஞ்சியா குடிக்க வேண்டும்?

## 213. இதய சுதந்திரம்!

*சுதந்திரம்! இன்று நம்முடைய நாள்! நமக்கே உரிமையுடையது!*
*இன்றைய நாள் நமக்குச் சுதந்திர நாள்!*
*ஆனால், உண்மையில் சுதந்திரமா?*
*சட்டம் கூறும் சுதந்திரம் என்று!*
*சட்டப்புத்தகத்தில் 'சுதந்திரம்' என்று எழுதியிருக்கலாம்!*
*உண்மை என்ன?*
*சுதந்திரத்தைச் சட்டம் வழங்க இயலாது!*
*எந்த மனிதனின் இதயம் சுதந்திரமாக இயங்குகிறதோ*
*அவனே சுதந்திரத்துக்கு உரியவன்!*
*சுதந்திர மனிதனுக்கு வெறுப்பு இல்லை!*
*பயத்தின் பதற்றம் இல்லை! மனச்சாட்சியின் அமுக்கம் இல்லை!*
*அவன் சந்தேகப் பிராணியல்ல!*
*இவனுக்கே இந்த நாள் சொந்தம்!*
*ஏன்? அவன் அவனாகவே இருக்கிறான்!*
*அவன் சுதந்திரனாக இருப்பதால் விரைந்துவரும் காலத்தை ஏற்பான்!*
*எதிர்வரும் காலம் அவனுடையது!*
*அவன், சுதந்திரத்தால் பெற்ற பயன் இது!*
*கடிகாரத்தின் 'டிக்' 'டிக்' ஓசை இவனுக்கு நாளை வழங்குவதில்லை!*
*அவனுடைய இதயத் துடிப்பே*
*அவனுடைய நாளை வழங்குகிறது!*

## 214. தடைகளே படிகள்!

*ஓ! நெஞ்சமே! நன் நெஞ்சமே! கேள்!*
*விவரிக்க இயலாத பாதுகாப்புக்கு வழி இதோ!*
*இதை நான் செய்தேன்! இது நான் செய்த முயற்சி!*
*இதை நானே செய்து முடித்தேன்*
*என்ற பெருமை பெற வேண்டுமா?*
*எடுத்த முயற்சிகளில் தடைகளைக் கடந்து*
*வெற்றிபெற வேண்டுமா?*
*தன் ஆற்றலை விஞ்சிய தடையா?*
*தயங்கற்க! தொடர்ந்து செய்தால் வெற்றியைப்*
*பெறுவாய்!*

*கீழே வீழ்த்தப்பட்டாயா? கீழே வீழ்ந்தாயா?*
*விட்டுக் கொடுக்காதே! எழுந்து நில்!*
*மெதுவாகவும் நடைபோட முடியவில்லையா?*
*நின்று கொள்! பெருமூச்சுவிடு! சீர் செய்து கொள்!*
*ஆனால், ஒரு போதும் சரணடைந்து விடாதே*
*வெற்றி, கடைசியாகப் போய்த் தட்டினாலும் கிடைக்கும்!*
*ஆனால், களத்திலிருந்து வெளியேறி விடாதே!*
*வெற்றி வாகை சூடியவர்கள்*
*ஒரு நாளில் அல்ல!*
*மற்றவர்கள் தூங்கும் பொழுதும்*
*ஓயாது உழைத்தவர்களே வெற்றி பெற்றனர்!*
*எடுத்தபணி முடியும்வரை தொடர்ந்து செய்*
*தடைகளைப் படிகளாக்கி*
*முன்னேறு! முன்னேறு!*

## 215. காலகாலனே காத்திரு

உலகு புகழ் வள்ளுவம் உணர்த்தியது
நேற்றிருந்தவன் இன்றில்லை என்று!
ஏ! உலகமே! காலமே!
காலகாலன் எம்தலைவன்!
உனக்கு ஒரு வேண்டுகோள்!
சாவதற்கு அஞ்சவில்லை!
"இறப்பதற்கு என் கடவேன்?" – இஃது எம் எண்ணம்!
ஆயினும்,
தொடங்கிய பணி முடியும்வரை காத்திரு!
அருமை இளவரசின் பயிற்சிக் காலம் வரை காத்திரு!
வேண்டுவது பல ஆண்டுகளல்ல!
சில ஆண்டுகளேயாம்!
கடமைகளை முடித்து நாமே நின்னை அழைப்போம்!
நின்னைத் தொடர்வோம்!
கடவூர் மயானம் தந்த பெருமானே
பூரணமாக முடிக்கத் துணை செய்!

கு. XIV. ௨௬.

## 216. புதுமைக் கோலங்கள்

காலம் கறங்கெனச் சுற்றி வருகிறது.
கால தேவதையின் பயணத்தில்
இந்தப் புவிக்கோளம் அடைந்து வந்துள்ள
மாற்றங்கள் பலப்பல!
இன்று அடைந்து வரும் மாற்றங்கள் பலப்பல!
ஆயினும், மாற்றங்கள் செய்த
புதுமைக் கோலங்கள் புறத்தேயே நிகழ்ந்துள்ளன.
அகத்தே, மனிதன் பின்னோக்கிச் சென்றுள்ளான்!
அவன் வளராமல்
வையகத்துக்கு வாழ்வேது? வரலாறு ஏது?
சாவாப் பிண்டங்கள் புவியை நடத்துமோ?
பொதுமையில் நடத்துமோ?
உண்டுடுத்தி வாழும் மாந்தர்கள்
எரி கொட்டகை சாம்பலாய்ப் போயினர்!
சாகாதீர்கள்! வாழுங்கள்!

## 217. இனி என்னென்ன மாறுமோ?

*"பொய்யுடை ஒருவன் சொல்வன்மையினால்*
*பொய்யும் மெய்யாமே!"*
*என்றதன் பொருள் விளங்க*
*மேகக் கூட்டம் பெருகி வளர்கிறது!*
*நல்லதன் நன்மையும் தீயதன் தீமையும்*
*உள என்பார்க்கு இன்னாகவிர்!*
*இன்று, பகுத்தறிவு என்பது*
*குற்றந்தேடித் தொகுத்தலேயாயிற்று!*
*'சமூக நீதி' என்பது சாதிமுறை நீதியாயிற்று!*
*தமிழ் உணர்ச்சி என்பது – பேச்சாயிற்று!*
*அறிவு என்பது பட்டங்களாயிற்று!*
*சுயநலமே பொது நலமாயிற்று!*
*ஆட்சிக் கட்டில் வாணிகமாயிற்று!*
*பாராளுமன்றம் சந்தைக் கூடமாயிற்று!*
*இனி என்னென்ன மாறுமோ?*
*கடவுளே! என் நாட்டை*
*நன்னெறியில் செலுத்து!*

## 218. பணம் படுத்தும் பாடு!

பணம் அவசியமானதேயாம்!
பணம் படுத்தும் பாடு! ஐயோ, கொடுமை!
பணம் விரும்பாத மனிதனே இல்லை!
நாளும் நயா பைசாவுக்குக் கூட
உருப்படியாக உழைக்காதவர்கள் கூடப்
பணம் கேட்கின்றனர்.
பணம் மனிதனை மிருகமாக்குகிறது!
பணம் போலியை உண்மையென்று விலையாக்குகிறது!
பணம் உறவைக் கெடுக்கிறது!
பணம் நட்பைச் சீர் குலைக்கிறது!
பணம் நம்பிக்கை நல்லெண்ணத்தை நாசமாக்குகிறது!
பணம் உலுத்தரை உயர்த்துகிறது!
பணம் உயர்ந்தோரைத் தாழ்த்துகிறது!
ஐயகோ! மாந்தரைப் பிணமாக்கும்
உனக்குப் பணம் என்று பெயர் வைத்தது யார்?

## 219. கிராமத்தைக் காப்பாற்றுங்கள்!

'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' என்றான் வள்ளுவன்
'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்'
என்றான் பாரதி!
இன்று உழவன் நிலை என்ன?
நாளும் கிராமப்புற வறுமை வளர்கிறது!
உலகுக்கு உணவளிக்கும்
கிராமப்புற உழவன்
நியாயவிலைக் கடையில் நிற்கிறான்,
அன்றைய தேவைக்கு அரிசி வாங்க!
கிராமங்கள் களஞ்சியங்களாக இருந்தன
ஒரு காலத்தில்!
இன்றோ, கிராமங்களில் வறுமை.
கிராமப்புறச் செல்வம் நகர்ந்து நகர்ந்து சென்று
நகரங்கள் உருவாகின்றன!
அன்று கிராமத்தை நோக்கி மக்கள்!
இன்று கிராமமக்கள் நகரத்தை நோக்கிப் படையெடுப்பு!
சோம்பலும் சூதும் நெடுநகையும்
பாலியல் குறும்புகளும்! நகரத்து நடப்புகள்
கிராமத்துக்குள் நாளும் படையெடுக்கின்றன!
ஐயோ, பாவம்!
செழித்த கிராமப்புற நாகரிகத்தைத் துறந்து
நகர்ப்புறக் கவர்ச்சி நாகரிகத்துக்குப்
பலியாகின்றனர் இளைஞர்கள்
ஓ! ஓ! கிராம மக்களே!
கிராமத்தைக் காப்பாற்றுங்கள்!
சுதந்திரமாக வாழுங்கள்! வளருங்கள்!

## 220. குன்றக்குடியே!

குன்றக்குடியே!
நீ, குன்றாக்குடியாவது எப்போது?
அறுமுகச் செவ்வேளைப் பாடவந்த அருணகிரி,
உன்னை, உன்மக்களைப் பழித்துப் பேசி விட்டான்!
சூடும், சுரணையும் இருந்தால்
அருணகிரியாரின் பாட்டைப் பொய்யாக்கிப்
பூவுலகில் புகழ்பெற்று விளங்க வேண்டும்!
இன்று,
குன்றக்குடியைச் சார்ந்தார் சிலருக்குப் புகழ் உண்டு!
ஆயினும் அது போதாது!
குன்றக்குடி ஊர் – ஊர்மக்கள் செழித்து வளர வேண்டும்
புதியதோர் ஊராக உருப்பெற வேண்டும்!
இது கனவு!
இல்லை, இல்லை – நினைவு!
முயற்சிகள் நடந்ததுண்டு! ஆனால், முனைப்பில்லை!
தொடக்கங்கள் நடந்ததுண்டு! ஆனால் தொடர்ச்சி
இல்லை!

ஏன்? எதனால்?
பணிகள் மிகுதி காரணம்!
தோளொடு தோள் கொடுத்தோர்
தொடர்ந்து பங்கேற்க வில்லை!
அகல்விளக்குகள் ஆயிரம்,
ஒரு தூண்டாமணி விளக்குக்கு ஈடாமோ?
நமது தோளில் சுமை கூடுகிறது!
நம்முடன் இருப்பவர்களுக்கு ஒரு வேண்டுகோள்!
பிறப்பது ஒரு தடவைதான்!
அந்தப் பிறப்பிலேயே சாதனை செய்ய வேண்டும்!
சாதனைகள் செய்யும் திறம் உடையவர்கள்

ஆயினும், உறையுள் போட்ட வாளென வாழ்வது ஏன்?
குடத்தில் எரியும் விளக்கென வாழ்வது ஏன்?
நாம் தங்களுடன் இருந்து
உழைக்குமாறு உள்ள நாள்கள் சிலவே உள்ளன!
இனி எஞ்சிய நாள்களில் உங்கள் ஒத்துழைப்பைத்
தொய்வில்லாமல் நல்கினால்
குன்றக்குடி புதிய ஊராகும்!
நாம் அனைவரும் கூடி உழைத்தால் ஆகாதது இல்லை!
நீங்கள் அனைவரும் இந்த மண்ணின் மைந்தர்கள்!
வந்த நம்மை வரவேற்றீர்கள்!
மேலும் ஒத்துழைப்பு நல்கி
தயவும் தாட்சண்யமும் இன்றி!
வேலைவாங்கிச் சாதனைகளைச் செய்ய
உடனிருந்து உதவி
கடைசிப் பயணத்தின்போது
நீங்கள் அனைவரும் அருகில் இருக்க,
சிரித்த முகத்துடன் அமைதியாகப்
பயணத்தைத் தொடங்கி வைக்க வேண்டும்!
இது நமது வேணவா!
இனி நாம் வாழும் ஒவ்வொரு நாளும் ஓராண்டே!
கவனத்தில் கொள்க! கவலையை மாற்றுக!

## 221. திருவுள்ளச் சம்மதமா?

*சக்தியே!*
*தீமையை எதிர்த்துப் போராடி*
*வீரமாகாளியெனப் பேர் கொண்டெழுந்தருளிய தாயே!*
*இன்று நின் பெயரால் தீமையே வளர்கிறது!*
*இதுவும் நினக்குத் திருவுள்ளச் சம்மதமா?*
*நின் வழிபாட்டு நிகழ்ச்சியில்*
*திரைப்படங்களின் ஆதிக்கம் ஏன்?*
*கற்க, கேட்க வாய்ப்பின்றி*
*ஒலி பெருக்கியின் இரைச்சல்!*
*சுற்றுப்புறச் சூழ்நிலையைப் பாதிக்கிறது!*
*தாயே! தெருவுதோறும்*
*நீ எழுந்தருளி வாழ்விக்க வா!*
*வாழ்விழக்கச் செய்யாதே!*
*நிழலுக்கு ஒதுங்க ஒருமரம் கூட நடாதார்*
*வேப்பமரமே நீயென விளங்குவது அறியாமல்*
*ஆரவார வழிபாடு செய்கின்றனர்!*
*இதில் போட்டிகள் வேறு!*
*தாயே! காளியம்மா! காப்பாற்று!*

## 222. உடன்பாடிலாதவர் உறவு

உடன்பாடில்லாதவர் உறவுடன் கூடிய வாழ்வு
குடங்கருள் நச்சுப்பாம்பொடு உறைந்தது போலாம்.
உடன்பாடிலாதவர்கள் உறவு
விலைமகள் உறவு!
இம்மண்ணில் பிறந்ததும் வாழ்வதும்
அனுபவித்து வாழத்தான்!
அனுபவத்திற்கெல்லாம் தாய் அன்புதான்!
அன்பு, உறவினை நல்கும்!
அன்பு, ஊக்கமது தரும்!
அன்பு, முயற்சியில் செலுத்தும்!
செல்வம் படைக்கலாம்; சேர்ந்து வாழலாம்!
மாறாக,
உடன்பாடிலாதவர் தொடர்பு – உறவு,
நாளும் நம்பிக்கையின்மையை வளர்த்து
நரகத்தில் செலுத்தும்!
இஞ்சி தின்ற குரங்கென ஆகும்!
ஊக்கம் கெடும். ஆள்வினை அழியும்
வீடு தேடி வரும் ஆக்கம் கை நழுவும்.
அல்லது தட்டிப்பறிப்பர் தகவிலாதவர்கள்!
துணிவு கெடும்; பயம் உண்டாகும்.
துணிவு இல்லாத வாழ்க்கை தோற்பாவைக் கூத்தாகும்!
கூத்தாட்டும் தோற்பாவை என்செய்யும்?
பாவைக் கூத்தை ரசிக்கலாம்!
ஆனால், வாழ்வாகாது! பிழைப்பு ஆகலாம்!
சீ,சீ! நாயும் இந்தப் பிழைப்புப் பிழைக்கும்!
சென்றது, சென்றதாகட்டும்!
உடன்பாடு இலாதவர் உறவினைப் பற்றிக் கவலற்க!
விழிப்புடன்
உனது பணியை உயிர்ப்பித்திடுக!

## 223. இதயக் கதவு திறந்திருக்கிறது!

“வேறுபாடுகள் இயற்கை”. வேறுபாடுகளே வாழ்வியலை அமைக்கின்றன.
நெருப்பும் நீரும் தம்முள் முரண்பட்டவை!
ஆயினும், மனிதகுல நலம் நாடி உறவு கொள்கின்றன
நெருப்புக்கும் நீருக்கும் உறவில்லையானால்
சமையல் ஏது? சாப்பாடு ஏது?
உடலை இயக்கும் ஐம்பொறிகள் ஐந்து நிலையின.
ஆயினும் உடலைக் காப்பதில் ஒருமை காட்டுவன;
ஒன்றுக்கொன்று ஒத்துழைப்பன!
இப்பண்புகள் மனிதருள்ளும் வளர்ந்தால்
வம்புகள் வாரா! கலகங்கள் குறையும்!
நாட்டு நலனே நமது நலனும் என்று
நாட்டம் கொண்டால் ஒருமை உருவாகும்!
வாழும் சில நாளில் யார் பெரியர்? யார் சிறியர்?
ஏன் இந்தப் போராட்டம்?
தகுதியுடையது முடிசூட்டிக் கொள்கிறது,
இராமனைப் போல!
ஆனால், இராமன் தலையில் முடி அடையலாம்
ஆயினும், மகிழ்ச்சி எல்லாருக்கும்!
வெற்றி – தோல்வி என்ற சொற்கள் பயிலும் வரை
ஆன்மா வளராது; ஒருமைப்பாடு உருவாகாது
ஒப்புரவு நெறி, வாழ்க்கை நெறி ஆகாது.
அமரம், அமரத் தன்மையுடையது.
நம் முன்னோரின் விழுப்பம் கண்டே
தொண்டைமான் இங்கு நமது மடத்திற்கும்
திருக்கோயிலுக்கும் பணிபுரிக என அனுப்பி வைத்தார்.

இன்றும் நீங்கள் அமரராக வேண்டும்.
நியாயங்கள் மறுக்கப்பட மாட்டாது.
நியாயங்களும் உரிமைகளும் மறுக்கப்படமாட்டா!
நியாயங்களும் உரிமைகளும் முரண்படக் கூடாது!
இதுவே வேண்டற்பாலதாய உணர்வு!
வாயிற் கதவு திறந்திருக்கிறது!
இதயக் கதவும் திறந்திருக்கிறது!
இன்று பல்குழு நிலை!
வழக்குகளை மறந்து நீவிர் அனைவரும்
அன்னை பராசக்தி முன்னால் வரவேற்றது
நெஞ்சில் நெகிழ்வைத் தந்தது!
உரிமைகளை உறவுக்குமுன் பலியிடாதீர்கள்!
உறவுகளே உரிமைகளின் தாய்!
இன்றே போல் என்றும் வளர்க! வாழ்க!

## 224. ஊழே! ஊழே!

ஊழே! ஊழே! உன் முகவரி என்ன?
பகுத்தறிவு படைத்த மனிதன்
நின்னைக்கண்டு அஞ்சுகிறானே!
அப்படி என்ன நீ ஓர் அரக்கனா?
இல்லை, இல்லவே இல்லை!
'ஆகூழும் உண்டு' என்ற வள்ளுவம் உணராதார்
நின்னைக் கண்டு அஞ்சுகின்றனர்!
ஊழே! உன்னோடு பலகாலும் அர்த்தமுள்ளதாக
வாழ்ந்த எனக்கு உன்னைப் புரிகிறது!
ஊழே! நீயே என்னுடைய படைப்புத்தானே!
என் கை பிள்ளையார் பிடிக்க நினைத்தது!
ஆனால், மனமோ குரங்கைப் பற்றி எண்ணியது
எது பிடிக்கப் பெறும்?
பிள்ளையாரா? இல்லை, இல்லை! குரங்குதான்!
ஏன்? நினைப்பே வெற்றி பெறும்!
ஊழே, நீ எனக்கு உற்ற தோழன்!
அதுவும், திருவருட் சிந்தனையுடன்
கைவருந்தி உழைக்கும் இயல்பு பெற்றிடின்
ஊழே நீ ஒதுங்கிக் கொள்வாய்!
அல்லது ஆகூழாக மாறி உற்ற துணையாக இருந்து
வாழ்க்கையைச் செலுத்துவாய்!
ஊழே, நின்பால் தீதில்லை!
வாழத் தெரியாதவர்கள் – மடிபோற்றும்
மதியில்லாதவர்கள்
நின்மீது பழிபோட்டுவிட்டு ஊர்சுற்றுகிறார்கள்!
ஊழே வாழி! நல்லூழே வாழி!
ஊழே உனக்குரிய காணிக்கை உழைப்பே!
அயர்விலாத ஆள்வினையை – வளரும் உழைப்பினை
உழைப்பைச் சுற்றியே அமையும்
எம் வாழ்க்கை நினக்கு அர்ப்பணம்!

## 225. இறைவா, உதவியாளராக வா!

*எமையாளும் ஈசனே! எந்தையே!*
*தாயிற் சிறந்த தயாவுடன்*
*நீ வழங்கிய இனிய கொடைகள் பலப்பல!*
*நீ வழங்கியருளிய அனைத்தையும்*
*ஆற்றும் திறனும் பேணும் திறனும் துய்க்கும் திறனும்*
*இன்றி அவலப்படும் அடியேனைக் கண்டிடவில்லை.*
*"ஒன்றே குறிக்கோள்! ஒரே குறிக்கோள்!"*
*என்றனர் அறிஞர்.*
*அறிந்தோ அறியாமலோ எண்ணில் பல*
*குறிக்கோள் கொண்டனம்!*
*ஆயினும் என்?*
*எந்த ஒன்றிலும் வெற்றியில்லை!*
*ஏன்? குறிக்கோள் பலவாயின;*
*செயற்பாடு குறைகிறது.*
*ஆக்குவதும், சுவைபார்ப்பதும், விருந்தயர்தலும்*
*ஒரு நேரத்தில் செய்ய இயலாது*
*ஆக்கும் பணி, அலுவலகப் பணி*
*சுவை பார்த்தல் உயர் அலுவலர் பணி*
*விருந்தயர்தல் அனைவர்க்குமுரியது!*
*இந்தப் பணிப் பகிர்வு பயனுடைய வகையில்*
*நடக்கவில்லையே!*
*உற்ற தோழர் தோளோடு தோள் கொடுப்பார்*
*இல்லையே!*
*பழகுவோர் பலருண்டு; பணியாளர் பலருண்டு!*
*பார்வையாளர்போல் வருவோர் பலருண்டு!*
*காரியமே கண்ணாக நிற்போரும் உண்டு. என்ன பயன்?*

*தோள் கொடுப்போரில்லை.*

*அன்று, நம்பியாரூரருக்கு நெல் அட்டித் தரவில்லையா?*

*மாணிக்கவாசகருக்காகக் கொற்றாளாக வந்ததில்லையா?*

*இன்று ஏன் நமது உதவியாளராக வருதல் கூடாது?*

## 226. உலகம் உன்னைத் தேட வாழ்!

பூவுலகில் பலப்பல உண்டு!
மண்ணின் மேலும் உண்டு; மண்ணுக்குள்ளும் உண்டு!
மண்ணின்மேல் காணப்படுவனவற்றுள்ளும்
மண்ணுக்குள் மறைந்து கிடப்பனவற்றுக்கே
விலை மதிப்புக் கூட என்பதை அறிக; உணர்க!
உலகெலாம் ஆட்டிப்படைக்கும் தங்கம்
மண்ணில் புதைந்து கிடக்கிறது!
தேடிக் கொணர்கின்றனர்;
நாட்டோர் போற்றும் நவரத்தினங்களை
மண்ணுக்குள்ளிருந்தே தேடி எடுத்து
அணிந்து மகிழ்கின்றனர்!
பூத்துக் குலுங்கும் மரங்களின் வேர்கள்
மண்ணிற்குள்ளே யாம்;
விண்ணளந்து காட்டி வினைமறைக்கும்
திருக்கோயில்களைத் தாங்கிநிற்கும் அடிக்கற்கள்
மண்ணிற்குள்ளேயாம்!
ஆதலால்,
அம்பலம் ஏறக் கருதாதே!
உலகம் உன்னைக் காண நடக்காதே!
இந்த உலகம் உன்னைத் தேடும் நிலையில்
வெளிச்சம் போடாமல் அடக்கமாக வாழ்க!
முகமன், புகழ்ச் சொற்களைக்
கசப்பெனக் கடிந்து ஒதுக்குக!
விளம்பரம் வேண்டவே வேண்டாம்!
ஓடி ஒளிந்து கொள்!
உயர்தனிக் கடமைகளைக் கவனமுடன் செய்க!
புவிக்கு அணியாகிடுக!
உலகம் உன்னைத் தேடும்!
தேடச் செய்வதற்காகவே வாழ்க!

## 227. ஓசோன் மருந்து

பாரினைத் தழுவிப் பாதுகாக்கும் சோலைகளே!
வாழிய, வாழிய சோலைகளே!
மண்ணும் மண்ணில் வாழும் மானுடமும்
வாழவகை செய்யும் சோலைகளே வாழ்க!
எங்கும் பசுமையைக் காட்டி வாழ்க!
கண்களுக்குக் குளிர்ச்சியைத் தந்து மகிழ்விக்கிறாய்
சிந்தைக்கினிய செவிக்கினிய குயிலிசை
கேட்க வைத்து மகிழ்வூட்டும் சோலையே வாழ்க!
உடலில் உயிர்தங்கும் உயிர்ப்புக்குரிய
உயரிய ஆக்சிஜனை அள்ளித்தரும் சோலையே வாழ்க!
தின்னக் காய்களும் கனிகளும் தரும்
பழமரச் சோலைகளே வாழ்க; வாழ்க!
அசுத்தக் காற்றினைக் குடித்துப்
பூ மண்டலத்தைத் தூய்மையாக்கிக் காக்கும் சோலைகளே
வாழ்க!

ஓ, ஓ! பசிய சோலைகளே!
உனக்கொரு வேண்டுகோள்!
இப்புவியினைக் காக்கும் ஓசோனில் ஓட்டை
விழுந்துள்ளது.

அந்த ஓட்டையைக் காக்கும் ஆற்றல்
நீ, நிகழ்த்தும் விந்தைமிகு ஒளிச் சேர்க்கைக்கு உண்டு
ஓ, ஓ! சோலைகளே!
ஒளிச்சேர்க்கையை விரைந்து செய்!
பன்முறை செய்க! பாரினைக் காத்திடு!

## 228. விதியே! விதியே! போ, போ!

*விதியே, விதியே! உனக்கு உவமை இல்லை!*
*ஆயினும் உன்னுடைய விளம்பர முகவர்கள்*
*உன்னை 'ஆகா, ஊ' என்று*
*உன் வலிமையைப் பெரிதுபடுத்துகின்றனர்!*
*ஆயினும் நின்வலி*
*அயர்விலா உழைப்புடையாரிடம் செல்லுமா?*
*நாளும் தாழ்விலா முயற்சியுடையார் மாட்டு*
*நின்வலி செல்லுபடி யாகாது!*
*அயர்வும் சோர்வும் சோம்பலும் உன்முன்*
*தாளிட்டுப் பணியும்!*
*விதியே! விதியே!*
*நீ, இந்த நாட்டுமக்களைக் கெடுத்தது போதாதா?*
*இன்னமும் ஏன் திருவிளையாடல்?*
*வளம் கொழிக்கும் நாட்டில் வறுமை...?*
*உனக்குப் பயந்தோர் சிலர்*
*உழைப்புத் தேவியைச் சரணடையாமல்*
*கண்டகண்ட தெய்வங்களிடம் சரணடைகின்றனர்*
*விதியே! விதியே! போ, போ!*
*வந்தால் ஆகூழாக வா!*
*இல்லையெனில் வேண்டாம்!*
*துன்பங்களும் துயரங்களும்*
*சாதனைக்குரிய படிக்கற்கள் எனக் கொண்டேன்!*
*சுகம் காணும் விழைவு இல்லை!*
*அறிவறிந்த ஆளுமையே என்செல்வம்!*
*நாட்டிற்குழைத்தலே என்தவம்?*

கு. XIV. 27.

## 229. நன் நெஞ்சே நயந்தருள் செய்!

*நெஞ்சே! நின்னை இரந்து வேண்டுவன்*
*மண்அரிப் பிற்கொடும் மனஅரிப் பாகிய*
*கவலையைத் துரத்துக! அவலச் சோர்வினை*
*நீக்குக! ஊற்று நீரெனப் பொங்கும்*
*உள்ளக் கிளர்ச்சியை வழங்கி உயர்ந்த*
*தொழில்திற முடனே அசைவிலா முயற்சியைக்*
*கைக்கொண் டுலகம் உவப்ப உதவிடும்*
*உழைப்பினைத் தந்து, இவ் வுலகில் தகவுடன்*
*வாழ்ந்திடச் செய்க! மழைநீர்த் திவலை*
*சிப்பியில் சேர்ந்து முத்தென முகிழ்ப்பது*
*போல, என் வாழ்வில்நின் மேலாம் உதவி*
*முத்தினும் உயர்ந்த முழுப்பயன் தந்திடும்!*
*நன்னெஞ் சே, நீ நயந்தருள் செய்கவே!*

## 230. எல்லாரும் சூழ்ந்து வாழ்ந்திட அருள்க!

*நெஞ்சே! நன்னெஞ் சே!நெல் அவிந்து*
*அரிசியா னதுபோல் அரிசி பலபடி*
*பக்குவ மாகிஇட் டளியா னதுபோல்*
*மண்ணில் விளைந்த கிழங்குதின் பதற்கு*
*உரியதாய் அவிந்துநல் உணவா னதுபோல்*
*நீயும் நயந்தினி தே, பதப் படுக!*
*நலந்தரு சுற்றம் நானிலம் நல்கிடும்*
*நண்பர்கள் கூட்டம் பயனுற வாழ்ந்திட*
*நயந்தருள் செய்க!ஐம் பொறிகளும் நறுந்தேன்*
*சிந்து புதுமலர் போலஎல் லாரும்*
*சூழ்ந்து வாழ்ந்திட அருள்க!*
*இன்றே இனிதுநீ செய்க, செய்கவே!*

# 4

# சிறுகதைகள்

## 1. மௌனப் புரட்சி

புதூர் ஒரு சிற்றூர். வளம் கொழிக்கும் சிற்றூர். பிச்சாண்டியா பிள்ளையின் குடும்பம் அந்த ஊரில் பெரிய குடும்பம். காணி, பூமி நிறைய உண்டு. பிச்சாண்டியா பிள்ளை நல்ல மனிதர். உதார குணமுள்ள மனிதர். ஆயினும் பரம் பரைப் பழக்கங்களில் ஊறிப்போனவர். பண்ணையாள் மொட்டையனிடத்தில் தனி அன்புடையவர். மொட்டையன் தாழ்த்தப்பட்ட வகுப்பினன் என்பதால் தீண்டாமை மட்டுமே அனுஷ்டிப்பார். ஆனால் பண்ணையாருக்கு மொட்டையன், கிராம விவகாரங்களில் ஒரு வலக்கை. பண்ணை விவகாரங்களில் ஆலோசகன்.

பண்ணையாரின் ஒரே மகன் சிவநேசன். சிவநேசனுக்கு மொட்டையன் வளர்ப்புத் தந்தைபோல. அவ்வளவு பாசம். பண்ணையாரின் கண்டிப்புகள் பலன் தரவில்லை. சிவநேசன்-மொட்டையன் உறவு வளர்ந்தது.

மொட்டையனுக்கு ஒரே மகள் பூங்கொடி. பூங்கொடியைவிடச் சிவநேசன் ஒரு வயது மூத்தவன். பால பருவத்துச் சிவநேசனும் பூங்கொடியும் நெருங்கி விளையாடினர். பண்ணையாருக்கு இது பிடிக்கவில்லை! சத்தம் போடாமல் சிவநேசனைப் பட்டணத்திற்குப் படிக்க

அனுப்பி வைத்தார். சிவநேசன் வேண்டா வெறுப்போடு பட்டணம் சென்றான். படிப்பைத் தொடங்கினான். படிப்பில் மிகவும் கவனமாக இருந்தான். ஆண்டு தவறாமல் வகுப்புக்களில் தேர்ச்சி பெற்று வந்தான். விடுமுறைக் காலங்களில்கூடச் சிவநேசனைப் புதூருக்கு வராமலே தடுத்துவிட்டார் பண்ணையார். தமது மனைவியுடன் விடுமுறைக் காலங்களில் பட்டணத்துக்குச் சென்று அங்கிருந்தபடி சிவநேசனைச் சுற்றுலாக்களுக்கு அழைத்துச் சென்று, புதூரையும், மொட்டையனையும், பூங்கொடியையும் சிவநேசன் மறக்கும்படி செய்யும் முயற்சியில் ஈடுபட்டு வந்தார். ஆனால், சிவநேசனுக்குப் பூங்கொடி நினைவு அகலவில்லை; தந்தையிடம் சொல்லவும் துணிவில்லை.

**கா**லம் உருண்டோடியது. மொட்டையன் ஒரு விபத்தில் காலமாகிவிட்டான். பூங்கொடி பூப்பெய்தினாள். மொட்டையன் மனைவி-பூங்கொடியின் தாய்-உழைத்துக் குடும்பத்தை நடத்தி வந்தாள். பூங்கொடிக்கு இரண்டொரு வரன் வந்தனர். ஆனால், சாக்குப் போக்குச் சொல்லித் தட்டிவிட்டாள் பூங்கொடி.

சிவநேசன் டாக்டருக்குப் படித்து முதல் வகுப்பில் தேறினான். புதூரின் முதல் பட்டதாரி சிவநேசன்! மருத்துவப் பட்டதாரி சிவநேசன்!

சிவநேசன் மருத்துவக் கல்லூரியில் இறுதியாண்டு படிக்கும்பொழுது பிச்சாண்டியா பிள்ளையை வாத நோய் பீடித்தது. படுத்த படுக்கையானார். அதனால் மருத்துவப் படிப்பு முடிந்தவுடன் புதூருக்கு வர அவன் ஆயத்தமானான்.

அன்று புதன் கிழமை. புதூர் கிராமச் சந்தை நாள். அதனால் புதூர் சுறுசுறுப்பாக இருந்தது. அதுமட்டுமல்ல, பண்ணையாரின் பிள்ளை டாக்டராகி வருகிறார் என்பதற் காகவும் அவரை வரவேற்க கிராமம் களை கட்டி இருந்தது.

புதன்கிழமை காலை பத்து மணியளவில் பண்ணையார் தெரு முகப்பில் உள்ள பிள்ளையார்க் கோயிலில் ஆண்களும் பெண்களும் கூடியிருந்தனர். சிவநேசன் வண்டியிலிருந்து இறங்கி முறைப்படி பிள்ளையாரைக் கும்பிட்டுவிட்டு, ஊரார், உற்றார் அனைவருக்கும் தரையில் வீழ்ந்து வணக்கம் செய்தான். கூடியிருந்தவர்கள் உருகிப் போயினர். "பாருங்கள்! பண்ணையார் பிள்ளை, என்றால் பண்ணையார் பிள்ளைதான்! என்ன அடக்கம்!" என்று பெண்கள் பேசிக் கொண்டனர்.

சிவநேசன் நான்குபுறமும் பார்த்துக் கொண்டே தன்னுடைய இளம் வயதுத் தோழர்களுக்குப் புன்முறுவலை உதிர்த்துக் கொண்டும் தோளில் கை போட்டுக் கொண்டும் வீட்டை நோக்கி நடந்தான்.

தன் வீட்டுக்கு அருகாமையில் உள்ள மாட்டுக் கொட்டகை வாசலுக்குப் பக்கத்திலுள்ள ஜன்னலுக்குள்ளி ருந்து இரண்டு கண்கள் வைத்த விழி வாங்காமல் தன்னைப் பார்ப்பதைச் சிவநேசன் பார்த்துவிட்டான்! அந்தக் கண்களுக்குரிய உருவம் சுவர் பாதியும் மூதாட்டி பாதியுமாக மறைந்திருந்த கொடுமையை நினைத்துப் பெருமூச்சு விட்டான்.

சாளரத்தில் தென்பட்ட கண்களும் சிவநேசன் கண்களும் சந்தித்துக் கொண்டன; பேசிக் கொண்டன.

சிவநேசன் நேரே தந்தையிடம் சென்று வணங்கினான். பண்ணையாரால் பேசமுடியவில்லை. மகனை அணைத்துக் கொண்டு அழுதார். அழுகை, அவல அழுகையல்ல, இன்ப அழுகை!

மதியம் ஊர் விருந்து முடிந்தது.

மாலை நேரம் வந்தது. சிவநேசன் தந்தையின் அருகில் அமர்ந்தான். தாயும் பக்கத்தில் நின்றாள். பண்ணையார்

சிவநேசனிடம் தாளும் பென்சிலும் கேட்டார். தாளில் எழுதிக் காட்டினார். முதல் வார்த்தை 'திருமணம்' என்பது பண்ணையார், "இன்றோ நாளையோ எனக்குச்–சாவு வரப்போகிறது. அதற்குள் திருமணம் செய்து பார்க்கவேண்டும் என்பது என் ஆசை," என்று சைகை மூலம் பேசினார்.

சிவநேசன் மௌனம் சாதித்தான்.

தாய், தன் தம்பி மகளைப் பற்றி எடுத்துக் கூறினாள். பண்ணையார் கையசைத்து மறுத்து விட்டு, 'பெண் பற்றிய முடிவைச் சிவநேசனிடமே விட்டுவிடு,' என்று சைகை காட்டினார். சிவநேசனுக்கு மகிழ்ச்சி ஒருபுறம்; தயக்கம் ஒருபுறம். வெட்கம் ஒருபுறம். மௌனமானான்.

பண்ணையார் சிவநேசன் முகத்தைப் பார்த்தார். சிவநேசன் தலை குனிந்தான்.

பண்ணையார், "சிவநேசா! எனக்குப் புரிகிறது, உன் மௌனத்தின் அர்த்தம். நீ, யாரை நினைத்துக் கொண்டிருக் கிறாய் என்பதும் தெரியும். இப்போது நானும் பழைய பண்ணையார் இல்லை. பூங்கொடியின் அப்பா மொட்டையன் தன் உயிரையே பணயமாக வைத்து ஒரு விபத்திலிருந்து என்னைக் காப்பாற்றினான். அதனால்தான் அவன் இறந்தான். இந்தப் பண்ணையார் இப்போது இருப்பது மொட்டையன் தந்த பிறவி போலத்தான்! மொட்டையனின் ஆவி சாந்தியடைய நீ பூங்கொடியைத் திருமணம் செய்து கொள்வதில் எனக்கு மிகவும் சம்மதம். இரட்டிப்பு மகிழ்ச்சியும்கூட!" என்று எழுதிக் காட்டினார்.

சிவநேசன் தந்தையின் முகத்தைப் பார்த்தான். தந்தை அழ, மகன் அழ, ஆலிங்கனம் செய்து கொண்டனர்.

பூங்கொடிக்கும் பண்ணையார் மகன் சிவநேசனுக்கும் ஆரவாரமின்றித் திருமணம் நடந்தது.

இதுதான் மௌனப் புரட்சி!

## 2. வாழத் தெரியுமா?

**சீ**ராப்பூர் ஒரு சிற்றூர் - கிராமம். இந்தக் கிராமத்தில் இராமன் - இலக்குமணன் என்ற இரு சகோதரர்கள் வாழ்ந்தனர். இராமன் அண்ணன். இலக்குமணன் தம்பி. பிறப்பிலும் பெயரிலும் தான் இராமன், இலக்குமணன். ஒருவருக்கொருவர் நல்ல உறவு இல்லை.

இலக்குமணன் ஜோசியம், குறி, பார்ப்பதிலும் அவற்றை அப்படியே நம்பும் பழக்கமும் உடையவன். எதற் கெடுத்தாலும் நாள் பார்ப்பான். இலக்குமணனுக்கு நாள் பார்ப்பதற்குத்தான் நேரம் இருந்தது. வேலை செய்ய நேரம் இல்லை. பணம் சம்பாதிக்க நேரம் இல்லை. "பல நாள்கள் நல்ல நாள்கள் இல்லை. எது செய்தாலும் கை கூடி வராது" என்ற நம்பிக்கையில் வேலை செய்யாமலே கழிந்தன. பணம் சம்பாதிக்கவில்லை. விளைவு சோம்பல்! இடையில் வந்த ஒன்றிரண்டு நாள்களும் கூடப் பழக்க வாசனையில் சோம்பலில் கழிந்தன. வந்தது வறுமை!

அண்ணன் இராமன் கூப்பிட்டு ஆள் அனுப்பினார்- அறவுரை கூற! வேலையில் ஈடுபடுத்த; உதவி செய்ய! இலக்குமணனோ தற்பெருமை கருதி அண்ணன் அழைத்தும் போகவில்லை. அண்ணன் நேரில் வந்தான். அப்போதும் அண்ணனை, போலியான தன் மதிப்பின் காரணமாக மதிக்கவில்லை. அண்ணன் சொல்லைக் கேட்க விரும்பவில்லை. என்னாயிற்று? இலக்குமணன் வாழ்க்கை கெட்டது.

நாள் பார்த்தே வாழ்க்கையின் பெரும் பொழுதைக் கழித்ததன் பயன் பொருளாக வேண்டிய பொழுதெல்லாம் பதராகப் போயின. சுறுசுறுப்பாக இருக்க வேண்டிய வாழ்க்கை சோம்பலுக்கு இரையாயிற்று! உடன் பிறந்தோனிடம் தேவையில்லாத போலி மான

உணர்ச்சியைக் கைக் கொண்டதால் அண்ணன் உறவு கெட்டது. தங்கத்திலும் மேலாய அறிவுரை செவிடன் காதில் ஊதிய சங்காயிற்று. உதவியையும் இழக்க நேர்ந்தது. இலக்குமணன் குடும்பம் நலிந்தது! துன்பத்தில் ஆழ்ந்தது!

இலக்குமணனுக்கு ஏற்பட்டது போல நமக்கு வரக் கூடாது. அப்படியானால் நல்ல நாள், கெட்ட நாளாயிற்று! பொழுதை வீணாக்கக் கூடாது! வாழ்வோருக்கு எல்லா நாள்களும் நல்ல நாள்களே! ஒரு நொடிப் பொழுதும் சோம்பல் கூடாது! வேலை! வேலை! என்று ஏதாவது செய்து கொண்டே இருக்க வேண்டும். உற்றார் - உறவினரிடத்தில், அயலாரிடத்தில் தற்பெருமை பாராட்டக் கூடாது. மானம் - அவமானம் பார்க்காமல் பழக வேண்டும். இங்ஙனம் வாழக் கற்றுக் கொண்டால் வாழலாம்! வளமுடன் வாழலாம்!

*"குடிசெய்வார்க் கில்லை பருவம் மடிசெய்து*
*மானம் கருதக் கெடும்"* குறள் - 1028

## 3. திருமகள் தேடிச் செல்வாள்!

இராமபுரத்தில் ஒரு செய்தி காட்டுத் தீயெனப் பரவியது. அது என்ன செய்தி? கடவுள், இலக்குமியை - செல்வத்திற்குரிய திருமகளை இராமபுரத்திற்கு அனுப்பப் போகிறார் என்பதே செய்தி; இராமபுரத்தில் உள்ள ஒரு வீட்டிற்கு அளப்பரிய செல்வத்தை அள்ளித்தந்துவிட்டு வரவேண்டும் என்பது கடவுளின் உத்தரவு.

இராமபுரம் விழித்து எழுந்தது. ஒவ்வொருவரும் வீட்டின் கதவைத் திறந்து வைத்து விட்டுக் காத்திருந்தனர் - திருமகள் வருகைக்காக! திருமகளும் வந்தாள்! வீதி வழியே நடந்தாள்! வீதியின் இரண்டுமருங்கிலும் வாயிற் கதவைத் திறந்து வைத்துக் கொண்டு தன்னை ஆவலுடன் எதிர் பார்த்துக் காத்திருக்கும் மக்களைத் திருமகள் பார்த்தாள்! ஆனால், திருமகள் எந்த வீட்டிற்குள்ளும் நுழையவில்லை. வலியவந்து அழைத்துப் போகவில்லை.

வந்த திருமகள் “கருப்பண்ணன் வீடு எது?” என்று கேட்டாள். “கருப்பண்ணன் வீட்டுக்குச் செல்லும் வழி எது?” என்று கேட்டாள். கருப்பண்ணன் வீடு வீதியின் கடைசியில் உள்ளது. குடிசை வீடு, கருப்பண்ணன் வீட்டை விசாரித் தறிந்து கொண்டு இலக்குமி - திருமகள் சென்றாள். வீட்டுக் கதவு சாத்தியிருந்தது. யாரும் திருமகளை எதிர் பார்த்துக் கொண்டு காத்திருக்கவில்லை. மாறாகக் கருப்பண்ணன் குடும்பத்தினர் வீட்டுத் தோட்டத்தில் வேலை செய்து கொண்டிருந்தனர்.

திருமகள் பார்த்தாள்: கருப்பண்ணனுக்கே செல்வத்தை, காய்கறித் தோட்டம் மூலம் அள்ளிக் கொடுத்தாள்! ஊக்கமும் உழைப்பும் உடையவர்களை விசாரித்துக் கொண்டு செல்வம் வந்தடையும். ஆதலால், ஊக்கத்துடன் உழைப்போம்! வீட்டுத் தோட்டம் அமைப்போம்! ஆடுமாடுகளை வளர்ப்போம்! செல்வம் குவிப்போம்!

“ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையா னுழை” (குறள் - 594)

## 4. யானையும் புலியும்

யானை உருவத்தில் பெரியது. யானை, கூர்மையான தந்தங்களைப் பெற்றிருக்கிறது. ஆயினும், யானைக்கு ஊக்கம் குறைவு. காட்டில் யானை ஒரு புலிக்குட்டியைக் காண நேரிட்டது. ஐயோ, பாவம்! யானை, பெரிய யானை! புலி, குட்டி! ஆனால், புலிக்குட்டியைக் கண்டவுடன் யானை பயந்தது! ஏன்? புலிக்குட்டிக்கு ஊக்கம் உண்டு! மேவிச் செல்லும்! மேற்செல்லும்! அஞ்சாது சென்று தாக்கும்! யானைக்கோ ஊக்கமில்லை! சுறுசுறுப்பு இல்லை! எளிதில் காரியங்களைச் செய்ய இயலாத பருத்த உடம்பு! அதனால் புலிக்குட்டியைப் பார்த்து யானை பயப்படுகிறது - விநோத மாக இல்லை?

மனிதர்களிலும் அப்படித்தான் பலர்! வாட்ட சாட்ட மான உடம்பு இருக்கும். முறுக்கின மீசை கூட இருக்கலாம்! கொழுத்த சொத்துக் கூட இருக்கலாம். இந்தச் சொத்து, ஊக்கத்துடன் சம்பாதித்த சொத்து அல்ல! பரம்பரையாக வந்தது! சராசரி மனிதன்! எளியவன்! ஆனாலும் ஊக்கமுடையவன்! உழைப்பாளி! உலகம் யாரைப் போற்றும்? உழைப்பாளியைப் போற்றும்! பயமற்றவனைப் போற்றும்! ஆதலால், வளமான கொழுத்த உடலைவிட, வலிமையான உடலே தேவை! ஓய்ந்து உட்கார்ந்திருத்த லாகாது. ஊக்கம் கொள்ள வேண்டும்! சுறுசுறுப்பாக ஊக்கத்துடன் உழைத்திடுதல் வேண்டும். அப்போதுதான் பயமின்றி வாழலாம்! ஊராண்மை மேற்கொள்ள இயலும்!

“பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்”

(குறள் - 599)

# 5. அறிவொளி இயக்கக் கதைகள்

## 1

ஒரு கிராமத்தில் சுப்பிரமணியன் என்று ஒருவன் இருந்தான். அவன் படித்தது ஆறாம் வகுப்பு வரையில்தான். ஆனால் இயற்கையாக நல்ல மூளையுடையவன். அவன் கையெழுத்து குண்டு குண்டாக நன்றாக இருக்கும். ஆனாலும் மூளைக்குத் தகுந்த செயல் இல்லாமல் சோம்பேறியாய் வாழ்ந்தான்!

சோம்பேறிக்கு வரக் கூடிய குடி முதலிய கெட்ட பழக்கங்களும் வந்துவிட்டன! ஆதலால் எந்த வேலையையும் சரியாகச் செய்வதில்லை. வருவாய் வருவதில்லை. வாழ்க்கையை நடத்த வருவாய் வராது போனால் என்ன செய்வது? பொய்யான வழிகளிலும் ஏமாற்று வழிகளிலும் பொருள் தேட முயன்றான்!

இது அவனுடைய தலை விதியா? இல்லை! தலைவிதி நன்றாக இருக்கிறது! ஆனால் செயற்பாடு சரியாக இல்லை! ஆதலால் எல்லாம் சரியாக அமையாது போனாலும் சரியான அணுகுமுறையும் விழிப்பும் இருந்தால் வாழ்க்கை சீராக அமையும். எல்லாம் சரியாக அமைந்து இருந்தாலும் சரியான செயற்பாடு இல்லையானால் ஒன்றும் பயன் இல்லை.

கடைசியாக சுப்பிரமணியன் கடை வீதியில் அடிபட்டான்! வெட்கப்படத்தக்க ஒன்று!

ஆதலால், வாழ்க்கை அமைவதில் இல்லை. வாழ்க்கை வாழ்வதிலேயேதான் இருக்கிறது.

## 2

அய்யாக்கண்ணு ஒரு அரசு அலுவர்; உயர் அலுவலர். அரசு அலுவலர் என்ற எண்ணத்தில் முனைப்புடையவர்; அதிகாரப் பசியுடையவர். மக்களைவிட அரசு அதிகாரம் பெரிது என்று கருதியவர்; சமூக உணர்ச்சி இல்லாதவர்; மக்களாட்சியில் அரசு அலுவலர்கள் மக்களின் சேவகர்கள் என்ற கொள்கையினைக் கருதிப் பார்க்காதவர்.

மயில்வாகனம் ஒரு சாதாரண மனிதர்; ஒரு தொண்டர்; சமுதாயச் சிந்தனையுடையவர். மயில்வாகனம் வாழ்க்கைப் போக்கில் அரசின் அதிகாரங்கள்கூட அவர் வசத்திற்கு வந்தன. வராது போனாலும் மயில்வாகனம் எப்படியும் எடுத்துக் கொண்டு விடுவார்.

இது அய்யாக்கண்ணுக்குப் பிடிக்கவில்லை. கடிதங்கள் மூலம் அதிகார வரம்புகள் பரிமாறிக் கொள்ளப் பெற்றன. ஆயினும் அய்யாக்கண்ணுவிடம் மனமாற்றம் இல்லை. மயில்வாகனம் மக்களின் தேவையை உணர்ந்தார். தக்கவாறு அய்யாக்கண்ணுவிற்கும் மேலாய அரசு அலுவலர்களை அணுகினார். தமது கருத்தை எடுத்துரைத்தார். உயர் அரசு அலுவலர்கள் மயில்வாகனம் கருத்தை ஏற்றுக் கொண்டனர். உடன் அரசு அலுவலர்கள் - மக்கள் கூட்டுக் கூட்டம் கூட்டப் பெற்றது. அதில் அய்யாக்கண்ணு மயில்வாகனத்தைப் பாராட்டினார். இங்கு மக்கள் செயற்பட முடியும் என்றார். எளிதாக மயில்வாகனம் வென்றார்; மக்கள் வென்றனர்.

**அரசு அதிகாரம் நிலையானதல்ல**
**மக்களின் அதிகாரம் நிலையானது.**

## 3

**கோ**விந்தபுரத்தில் அடிக்கடி மழை பெய்வதில்லை. அதனால் ஆண்டில் பலமாதங்களில் கொடிய வறட்சியால் அவ்வூர் அல்லற்படும். குடிக்கத் தண்ணீர்கூடக் கிடைக்காது. இந்த ஊரில் வசித்த சுந்தரமூர்த்தி என்பவர் கற்ற அறிஞர்; உடல்நல விதியின்படி வாழ்பவர். இவர் மழை பெய்யும் பொழுது ஒரு பாத்திரத்தில் மழைத் தண்ணீரைப் பிடித்துக் கொள்வது வழக்கம். இந்தப் பழக்கத்தை அவர் தமது பிள்ளைகளிடம் கற்றுத் தந்ததில்லை; அவர்களும் பார்த்ததில்லை. சுந்தரமூர்த்தி இறந்து போனார்.

பின் சிலநாளில் மழைபெய்தது. சுந்தரமூர்த்தியின் மகன் இராமாமிர்தம் ஓடிப் போய் ஒரு பாத்திரத்தை வைத்தார், தண்ணீர் பிடிக்கும் நோக்கத்துடன்! மழை நின்ற பிறகு போய்ப் பார்த்தார்! பாத்திரத்தில் ஒரு சொட்டுத் தண்ணீர் கூட இல்லை; என்ன காரணம்? மழை பெய்தது உண்மை! நீர்த்திவலைகள் வீழ்ந்தது உண்மை! பாத்திரத்தை வைத்தது உண்மை! தண்ணீர் வேண்டும் ஆசை இருப்பது உண்மை! பின் என்ன நடந்தது? இராமாமிர்தம் பாத்திரத்தைத் திறந்து வானோக்கியதாக வைக்காமல் கவிழ்த்து வைத்து விட்டார். அதனால் தண்ணீர் கொள்ளவில்லை!

அதுபோல இதயத்தில் இறையருளைத் தாங்குதல் வேண்டும். இதயத்தினை மூடி வைத்து விட்டு ஆயிரம் ஆயிரம் சடங்குகள் செய்தும் இதயந் திறக்காது போனால் இறையருளை வாங்க இயலாது; பயனற்ற வாழ்க்கையாகப் போகும்.

**இதயத்தைத் திறவுங்கள்!**
**இறையருளைத் தேக்குங்கள்!**

## 4

அன்னகாமுப் பிள்ளைக்கு நாய் வளர்ப்பில் விருப்பம் அதிகம். நல்ல நாய் ஒன்றை வளர்த்து வந்தார். வேளா வேளைக்குச் சோறு, மற்ற வசதிகளுடன் கட்டிப் போட்டு வளர்த்து வந்தார். தெருவில் ஓடியாடித் திரியும் நாய்களைக் கண்டால் அன்னகாமுவின் வளர்ப்பு நாய்க்கு அழுக்காறு தோன்றும். அந்த ஊர் நாய்களைப் போல் சுதந்தரமாகத் திரிய முடியவில்லையே என்ற கவலை!

ஒருநாள் - அன்னகாமுப் பிள்ளை இல்லாத நேரத்தில் நாய், தன் தலைவழியாகக் கழற்றிக் கொண்டு ஓடிவிட்டது. எங்கு ஓடியது? ஊர் நாயுடன் கூடித் திரிய! ஊர் நாய்களின் கூட்டத்தில் சேர்ந்து கொண்டது! ஆனால் ஊர் நாய்கள் இதன் புதிய வரவை ஏற்க மனமல்லாமல் உறுமின! இந்த நாய்க்கோ அச்சம்! குப்பை ஓரத்தில் படுத்துப் புரண்டு "சுக"த்தை அனுபவித்தது.

அன்னகாமுப் பிள்ளை வந்தார். தனது வளர்ப்பு நாயைக் காணாமல் தேடினார். கடைசியாகக் கொல்லைப் புறத்தில் குப்பை மேட்டில் புரண்டு கொண்டிருப்பதைக் கண்டார். நாய்க்கு, குப்பை மேட்டை விட விருப்பம் இல்லை. ஊர் நாய்க் கூட்டத்தைப் பிரியவும் மனம் இல்லை. அன்னகாமுவிடம் வளர்ந்த பாசம்! அதே போழ்து அச்சம்! இப்படி ஒரு ஊசலாட்டம்! அன்னகாமுப் பிள்ளை பரிதாபத்துடன் தனது வளர்ப்பு நாயைக் கட்டித் தூக்கி வந்து குளிப்பாட்டிப் பாற்சோறூட்டினார்.

ஆன்மாவாகிய நாய், இறைவனாகிய வளர்ப்புத் தந்தையால் பொன், பொருள், போகம் முதலியன புணர்த்தி வளர்க்கப் பெறுகிறது. ஆயினும் ஆன்மா, உலகியல் என்ற ஊர் நாய் சேர்க்கையில் சேருகிறது. இறைவன் திருத்தி ஆட்கொள்கிறான்!

**ஊர் நா யென வாழ்தலினும்**
**வளர்ப்பு நாயென வாழ்தல் நன்று.**

## 5

கருமாத்தூர் கண்ணாயிரம் பிள்ளை ஒரு நிலக்கிழார். நன்செய், புன்செய் நிலங்கள் நிறைய உடையவர். ஏழைகளுக்கு வயிறார உணவு கொடுப்பார். தீபாவளி, பொங்கலுக்குச் சேலை, வேட்டிகள் இனாமாக வழங்குவார்; திருவிழாக்கள் கொண்டாடுவார்; கேளிக்கைகள் ஏற்பாடு செய்வார். ஏழைமக்கள் இவருடைய தாராளத்தில் வாழ்ந்து கொண்டிருந்தனர். அவர்களும் ஏதோ ஒருவகையில் திருப்தி அடைந்து வாழ்ந்து வந்தனர். ஆனாலும் ஒரு குழிநிலம் கூட அவர்கள் உழுவதற்கு விட்டுக் கொடுத்தார் இல்லை! குடியிருக்க சொந்தத்தில் மனை கொடுக்கக் கூட அவர் முன் வரவில்லை! அது மட்டுமா? அந்த ஏழைகளின் பிள்ளைகள் யாரும் பள்ளிக் கூடத்திற்குப் போவதும் இல்லை! போக ஆசைப்பட்டாலும் கண்ணாயிரம் அனுமதிக்க மாட்டார்!

"ஏம்பா நம்ப பிள்ளைக்கு என்னடா படிப்பு வேண்டியிருக்கு! நாலு மாடு ஆடு மேய்ச்சா பத்துக் காசு கையில் கிடைக்கும்" என்று இதோபதேசம் செய்வார். அவர்களும் உபதேசத்திற்குக் கட்டுப்பட்டும், காசுக்கு ஆசைப்பட்டும் கோவணம் கட்டத் தெரிந்த பிள்ளைகளைக் கூட ஆடு மாடு மேய்க்கவே பழக்கினார். சாவு, வாழ்வுக்குத் தாராளமாகப் பணம் கொடுப்பார்! இனாம் அல்ல - கடன்! புரோ நோட்டுகள்! கொடுத்த கடனைத் திருப்பிக் கேட்க மாட்டார்! கொண்டுவந்து கொடுத்தாலும் "இப்ப என்னடா அவசரம்! எங்கு போகிறது!" என்பார்!

இந்தக் கிராமத்தில் ஒரு புது மனிதர் வந்தார்! குடியேறினார்! அறிவும் தெளிவும் ஏழைகளுக்கு உண்டாக்க முயன்றார்! கண்ணாயிரம் பிள்ளைக்குக் கடுங்கோபம்! சுய சொரூபத்தைக் காட்டினார்! மக்களும் புரிந்து கொண்டனர்!

**வானோக்கிப் பயிர் வாழலாம்!**
**வள்ளலை நோக்கி வாழ்தல் ஆகாது!**

## 6

பாலசுப்பிரமணியம் ஒரு இளைஞர். வீட்டுக்கு ஒரே மகனாகப் பிறந்தவர். அதனால் செல்லமாக வளர்க்கப் பெற்றவர். வீட்டில் அவர் நினைத்ததுதான் சட்டம்! நடத்தியதுதான் வாழ்க்கை! கடுங்கோபம் வரும்! முரட்டுத் தனமே உருவென வளர்ந்தார். இவ்வளவுக்கும் அவனுடைய தாய் லட்சுமியே காரணம். தாய்க்கு முரட்டுக் குணம்! தாய் லட்சுமி குடிப்பாள்! வீட்டின் பணத்தை எடுத்து பைசாவுக்குப் பைசா வட்டிக்குப் பணம் கொடுப்பாள்!

பாலசுப்பிரமணியனுக்குத் திருமணம் நடந்தது. திருமகள் என்ற பெண் வாழ்க்கைத் துணையானாள்! மனையறம் தொடங்கியது! மாமியார் லட்சுமி மனைவியாக இருந்த பொழுதே கணவனை ஆட்டிப் படைத்தவள்! மாமியார் பதவி கிடைத்து சும்மா இருப்பாளா? மாமியார் பதவி அதிகாரமுடைய பதவி! மாமியார் அதிகாரத்தை முழுமையாகச் செலுத்தினார். செல்லப்பிள்ளை பாலசுப்பிர மணியன் "தாய் சொல்லைத் தட்டாதே" என்ற வாசகத்தை நினைத்துக் கொண்டு மனைவியை வாழ்க்கையின் கூட்டாளி யாக நினைக்காமல் இரண்டாந்தரமாக நடத்தினான்! வீட்டு வேலைக்காரியாக நினைத்து நடத்தினான்! இவ்வளவையும் அந்தப் பெண் பொறுத்து நடந்து கொண்டாள்!

திருமகளின் பொறுமை, பாலசுப்பிரமணியத்தின் மனத்தையும் மாமியாரின் மனத்தையும் மாற்றவில்லை. மாறாகப் "பயந்தாங் கொள்ளி," "அடிமை" என்றே நினைத்தார்கள்! ஆனால் பாலசுப்பிரமணியம் அவளை மனைவியாகப் பயன்படுத்தத் தவறவில்லை! இரண்டு குழந்தைகளுக்குத் தாயாக்கினான்! அப்போதும் - குழந்தைகள் பிறந்த பிறகும் பால சுப்பிரமணியத்தின் குணம் மாறவில்லை. நிலைமை முற்றியது.

மாமியார் முழு அதிகாரம்! அவசரகால அதி காரத்தைப் பெற்றவள் போல நடக்கிறாள்! கணவனுக்குச் சோறு போட மனைவிக்கு உரிமை இல்லை! கணவனும் மனைவியும் கூடி மகிழ தாயின் அனுமதி தேவை! இந்த நிலையில் ஒருநாள் எதிர்பாராத சூழ்நிலையில் திருமகளுக்கு அறிவு பிறந்தது! தெளிவு வந்தது! ஆற்றல் பெற்றாள்! திறமையும் வந்தது!

ஒருநாள் இரவு கணவன் படுத்த பிறகு இரவில் மாமியாரைப் போய் அழைத்தாள்! மாமியும் வந்தாள்! கணவன் படுக்கைக்குப் பக்கத்தில் நிற்க வைத்து மாமியைப் பார்த்து இவருக்குத் தாயாக இருந்தீர்கள்; மனைவியாகவும் நீங்களே இருங்கள் என்று சொல்லிவிட்டுக் கதவைச் சாத்திக்கொண்டு வெளியே வந்து விட்டாள்! மகனும் தாயும் திருதிருவென்று விழித்தார்கள்!

பொறுத்திருப்பவர் – புலியும் ஆவர்
பொங்கி யெழுபவர் பூனையும் ஆவர்.

தாயே யானாலும் எல்லையுண்டு!
தாய் மனைவியாதல் இல்லை!

## 7

திருச்சிற்றம்பலம் என்ற சிற்றூரில் திருவள்ளுவர் தாசன் வாழ்ந்து வருகிறார். 1330 குறளும் இவருக்குப் பாடம். திருக்குறள் பதின்கவனகக் கலை செய்வார். திருக்குறளைப் பற்றிப் பேசுவதிலேயே இவருடைய வாழ்க்கை நடந்தது. திருக்குறளைப் பற்றி மணிக்கணக்காகப் பேசுவார். நகைச்சுவை ததும்பப் பேசுவார்.

இவர் ஒரு நாள் மயிலாடுதுறைக்குப் பேச்சுக்காக வந்தார். அங்கு ஒரு கடையில் தின்பண்டம் வாங்கினார்.

வாங்கிய தின் பண்டத்தைத் தின்று கொண்டே நடந்து பேச்சு மேடை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார். இடையில் ஒரு பெரியவர் திருவள்ளுவர்தாசனைச் சந்தித்தார். நலம் - நன்மை பற்றிக் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டனர். ஆனால் தீனி தின்றது திருவள்ளுவர்தாசன் மட்டும்தான்! எதிரில் நின்று பேசிக் கொண்டிருந்தவருக்குக் கூடக் கொடுக்கவில்லை. இந்த நிலையில் ஒரு ஏழை - இரந்து வாழும் நிலைக்குச் சமூகத்தால் தள்ளப்பெற்றவர் - வந்து பசிக் கொடுமையால் அலறினார். திருவள்ளுவர்தாசன் தின்று கொண்டே இருந்தாரே தவிர, ஏழைக்குத் தினையளவும் பகிர்ந்து கொடுத்தாரில்லை.

காலம் நெருங்கியது. திருவள்ளுவர்தாசன் மேடைக்குச் சென்றார். சற்று நேரத்தில் பெரியவரும் மேடைக்கு வந்தார். மேடையில் இருந்தவர்கள் அனைவரும் எழுந்து பெரியவருக்கு மரியாதை செய்து வரவேற்றனர். பெரியவர் தலைமையில் திருவள்ளுவர்தாசன் அறிவுடைமை, அன்புடைமை என்ற அதிகாரங்கள் பற்றி நன்றாகப் பேசினார். மக்கள் ஆரவாரமாகக் கேட்டனர். திருவள்ளுவர் தாசனின் பேச்சு முடிந்த பிறகு கூட்டத் தலைவர் பெரியவர் எழுந்து,

"அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை"
(குறள்–315)

என்ற திருக்குறளுக்கு உரை விளக்கமாகவும்,

என்புதோல் போர்த்த உடம்பாகவும் விளங்கும் திருவள்ளுவர்தாசன் பேச்சைக் கேட்பீர்கள் என்று கூறினார். திருவள்ளுவர்தாசன் வெட்கிப் போனார்.

"சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்.
(குறள்–664)

## 8

உத்தமன் மிகவும் நல்லவர். உத்தமனின் மனைவி பாஞ்சாலியும் நல்லவள். உத்தமனை விடத் திறமைசாலி; நல்ல நிர்வாகி, ஆனாலும் இவ்விருவரும் வாழ்க்கையில் இளமையின் காரணமாக மிகமிக எளியராக வாழ்ந்தார்கள். அது காதல் மீதூர்ந்த வாழ்க்கையாக அமையாது, கழிகாமம் மிகுந்த வாழ்க்கையாக உருப்பெற்றுவிட்டது. கழி பெருங் காமத்தின் பரிவாரங்களாகிய தீய வழியில் பொருளீட்டல் முதலியனவும் வாழ்க்கையில் வந்தமைந்தன.

பாஞ்சாலி திருந்தியபாடில்லை. உத்தமன் அப்பாவி. ஆனாலும் பலசாலி. பல இழப்புக்கள், தீமைகள் வந்தாலும் எப்படியோ சமாளித்துக் கொண்டே வந்தான். அவளிடம் பணப்பஞ்சம் வந்ததில்லை. இவர்களுக்கு ஒரு மகன் பிறந்தான்! வளர்ந்தான்! பாஞ்சாலி ஒரே பிள்ளை என்பதால் அதிகமாகக் கண்டிக்கவில்லை. திருமண வயது வந்தது. திருமணமும் செய்தாயிற்று! வாய்த்த மனைவி மங்கம்மாளோ அடங்காப்பிடாரி, ஆசைகளே ஒருருவம் கொண்டவள்! இரண்டு பேருமாக பாஞ்சாலியை நெருக்கித் துன்புறுத்தி ஒரு லட்ச ரூபாய்க்கு மேல் கறந்து விட்டார்கள். திருமணத்தின் போது கொடுத்த நகைகள் வேறு இருந்தன. எல்லாவற்றையும் அழித்தார்கள்.

மீண்டும் பணத்திற்குப் பாஞ்சாலியிடம் வந்தார்கள். பணம் கேட்டுத் துன்பம் செய்தார்கள்! அடாவடித்தனம் செய்தார்கள்! இப்பொழுதுதான் பாஞ்சாலி உணர்ந்தாள்! வாழ்வதெல்லாம் காதல் வாழ்க்கையல்ல! பிறப்பதெல்லாம் மகவு அல்ல! மகவுருவத்தில் இயமன் கூட வருகின்றான் என்று உணர்ந்தாள்! நோக்கமே விதை! செயலே செடி! பயனே செடியின் மகசூல்! விதை ஆசைகளாக இருந்தால் ஆசைதான் முளைக்கும்! செயல் தீவினையாக இருப்பின்

*விளைவதும் தீவினையே! பயனும் துன்பமே! ஆசைகளை வெல்க!*

## விதை ஒன்று போடச் சுரை யொன்று முளைக்குமா?

## 9

பாலையூர், ஒரு சிற்றூர்! தாழ்த்தப்பட்ட ஆதி திராவிடர்கள் மட்டுமே வாழும் ஊர்! குடியிருப்பு இடம் நெருக்கடிக்கு ஆளாகியிருந்தது! ஊருக்கு ஒருபுறம் தண்ணீர் வரும் கால்வாய்! இந்தக் கால்வாய் மட்டுமே குடியிருப்புக்கு வரும் பாதை! மற்ற இருபுறமும் வல்லாங்கு வாழ்வோர்க் குரிய உடைமையான புஞ்சை நிலம். குடியிருப்பிலுள்ளோர் அடியெடுத்து வைக்க இயலாது. பள்ளமான பகுதியில் குடியிருப்பு இருப்பதால் நீர்ப்பிடி! நீரூற்று! இவ்வளவுக்கும் இடையில் ஒரு வீட்டில் பல குடும்பங்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். அவர்கள் வாழ்க்கை ஒரு நரகம்!

இந்த இடத்திலிருந்து அவர்தம் குடியிருப்பை மாற்ற தொண்டர் மயில்வாகனம் முயற்சி செய்தார். சென்று பார்த்தார். அந்தப் பகுதியிலேயே வேறு இடம் இல்லை. பொதுச்சாலை ஓரத்தில் தரிசாகக் கிடந்த ஒரு பகுதி தேர்ந்தெடுக்கப் பெற்றது. இந்த இடம் பார்வையிட்டுத் தேர்ந் தெடுக்கப் பெற்றபோது இடம் தரிசு! வேலி இல்லை! செடி இல்லை! புல் இல்லை! சுற்றிலுமுள்ள இடங்கள் கூட மண்ணரிப்பு நோயினால் தொழு நோய் பிடித்த மனிதன் போலக் காட்சியளித்தது! நில அரிப்பைத் தடுத்துக் காப்பாற்றும் முயற்சியில் கூட யாரும் ஈடுபடவில்லை! புலம் ஆய்வு முடிந்து தெரிவு செய்த பிறகு வட்டாட்சியர் அலு வலகத்துக்கு விண்ணப்பிக்கப் பெற்றது. வட்டாட்சியர் விடை அதிர்ச்சியளித்தது! அதாவது அந்தப் பகுதியைச் சேர்ந்த

மேட்டுக்குடியினர் இரண்டு பேருக்குச் சில மாதங்களுக்கு முன் பட்டா வழங்கப்பட்டதாகக் கூறினார்!

எந்த அடிப்படையில் பட்டா? ஏன் பட்டா? என்ற வினாக்கள் அலைமோதின! கோட்டாட்சி அலுவலகத்திற்கு விண்ணப்பத்தைத் தூக்கிக் கொண்டு செல்லப் பெற்றது! இதற்கிடையில் மயில்வாகனத்திடம் முயற்சியைக் கைவிடும்படி வற்புறுத்தல்! அதே போழ்து அவசர அவசரமாக நிலம் உழப்பெறுகிறது! கோட்டாட்சித் தலைவர் நிலப்பட்டா வழங்கியது முறை கேடான செயல் என்று பட்டாவை ரத்து செய்கிறார்! இப்படியும் சில அதிகாரிகள் இருக்கிறார்கள் என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி! பட்டா ரத்து செய்தது மனம் பொறாமல் நிலச் சுவான்தார்கள் மாவட்ட வருவாய் அதிகாரிக்கு மேல் முறையீடு செய்கிறார்கள். மயில்வாகனமும் கூடவே போகிறார்.

இந்த நிலையில் பணம் பரிமாறப் படுகிறது. சாராயம் தாராளமாக வழங்கப் பெறுகிறது. கூடவே பயமுறுத்தலும் சேர்கிறது! ஆதி திராவிடர்கள் சாராய மயக்கத்தில் கையில் கிடைத்த காசுகளுக்காகவும் மிரட்டலுக்குப் பயந்தும் “சாலை ஓரத்தில் தேர்வு செய்யப்பட்ட இடம் வேண்டாம்; பழைய இடமே போதும்; வசதியாக இருக்கிறது” என்று எழுதி வாங்கி விட்டார்கள்! வல்லாங்கு வாழ்வோர் வெற்றி பெற்றனர்! வாயில் வாயில்லாப் பூச்சிகள் வாழ்விழந்தனர்!

## 10

**மா**ங்கொம்பைச் சேர்ந்த மாறன், ஒரு நல்ல இளைஞன்! அவனுடைய பெற்றோர்கள் ஏழை விவசாயக் கூலிகள். மாறனை, பல்வேறு தொல்லைகளுக்கிடையில் பத்தாவது வகுப்புவரையில் படிக்க வைத்தனர். மாறன் நன்றாகப் படித்திருந்தால் மேலும் படிக்க வைத்திருப்பர்.

மாறனுக்குப் படிப்பில் ஆர்வம் இல்லை. பத்தாம் வகுப்பு வரையில் கூட ஆசிரியர்களுடைய பணிப் பாதுகாப்பின் அடிப்படையில்தான் வந்தான்! பத்தாம் வகுப்பில் தோற்றுப் போனான்!

வீட்டில் வறுமை; தந்தைக்கு முன்போல் உழைக்க உடல்நலமில்லை. தாய்க்கும் கூலி வேலைதான்! வாழ்க்கை நெருக்கடிக் காளாயிற்று! மாறனுக்கோ வீட்டின் நெருக்கடி புரியவில்லை; புரிந்து கொள்ளவும் முயற்சி இல்லை! காலையில் சுயமாக முகத்தை மழித்துக் கொள்ளல், இரவு நீலச் சலவைகட்டிப் போட்டு உலர்த்திய உடுப்புக்களை உடுத்துக் கொள்ளல், ஊர் சுற்றுதல், வேளைக்கு வேளை. தவறாமல் வந்து உண்ணுதல் என்ற பழக்கத்தினை உடையவனாக மாறன் வாழ்ந்தான். தாய் பலமாதங்கள் பொறுத்துப் பார்த்தாள்! தாயின் மனம் அல்லவா? ஆயினும், அவள் என்ன செய்வாள்? வீட்டின் நிலை அவளைத் தூண்டிற்று! நெருக்கடி வயப்பட்டாள்! மாறனைப் பார்த்து "ஏதாவது சம்பாதிக்க வேண்டாமா? உங்க அப்பாவும் முடியலேன்னு மூலையிலே படுத்திட்டாரு! என் ஒருத்தி பாடு எதற்கு ஆகும், அரிசி கிலோ அஞ்சு ரூபாய்னு விற்கிற போது?" என்று கேட்டாள். மாறன் சில நாள்கள் மௌனம் சாதித்த பின் "நான் வேலை பார்க்க மாட்டேங்கறே! வேலை கிடைத்தால்தானே!" என்று அம்மாவை எதிர்த்துப் பேசத் தலைப்பட்டான்! வேலையும் தேடினான்!

அவன் விரும்பிய வேலை, கை நகத்தில் அழுக்குப் படியாத வேலை – அரசாங்க வேலை! அது கிடைக்க வில்லை. அரசாங்க வேலை கிடைப்பது அவ்வளவு எளிதா? அதற்குரிய விலையை மாறன் எப்படி கொடுப்பான்? பல மாதங்கள் உருண்டோடி விட்டன! வேலை கிடைத்த பாடில்லை! மாறனின் தாய் தையலைக்கும் தள்ளாமை வந்து விட்டது! அவளால் முடியவில்லை! ஒருநாள் அவள் சமைக்க வில்லை! மாறன் வந்தான்! சோறு கிடைக்கவில்லை! தாயார்

*சொன்னாள்: "என்னால் வேலை செய்ய முடியல என்னால் இனி உழைக்க முடியாது. கொண்டு வந்தா ஆக்கிப் போடறேன்" என்று, மாறனுக்குக் கோபம் வந்து விட்டது! அதே போழ்து வாழ்க்கையிலும் ஒருவகையான விரக்தி வந்து விட்டது! எங்காவது போய்த் தற்கொலை செய்து சாகலாம் என நினைத்துக் கொண்டு பைத்தியம் பிடித்தவனைப் போல் நடந்து சென்றான். நண்பகல் வந்தது! மாறன் களைத்துப் போனான்! சாலை ஓரத்தில் நின்ற ஒருமரத்தின் நிழலில் படுத்துறங்கினான். பசியின் கெடுபிடியில் உறக்கம் வரவில்லை!*

*அப்பொழுது கால்நடையாக வந்த ஒரு பெரியவர் அந்த மரத்து நிழலில் உட்கார்ந்து தாம் கொண்டுவந்த கட்டமுதை உண்ண முயன்றார். அப்போது அவர் மாறனைப் பார்த்து "உண்ண, வா" என்று அழைத்தார். மாறனுக்குப் பசிக்குச் சோறு கிடைத்தது. உண்டு முடித்த பிறகு, பெரியவரும் மாறனும் பேசத் தொடங்கினார்கள்.*

*"இளைஞனே, உன் பெயர் என்ன?"*

*"என் பெயர் மாறன்!"*

*"ஏன், சோர்ந்து இருக்கிறாய்?"*

*"ஐயா, வீட்டில் வறுமை! தந்தைக்கு முடியவில்லை! தாய்க்குத் தள்ளாமை! எனக்கோ வேலை கிடைக்கவில்லை. என் தாய் என்னைத் திட்டிவிட்டாள்! சோறு இல்லை யென்று கூறிவிட்டாள்! உண்மையாகவே சோறு இல்லை!"*

*"அதற்காகக் கவலைப்படுகிறாயா?"*

*"ஆம் ஐயா!"*

*"உங்களுக்கு நிலம் உண்டா?"*

*"இல்லை!"*

*"மாடுகள் உண்டா?"*

*"இல்லை!"*

*"நீ, படித்திருக்கிறாயா?"*

*"ஆம், ஐயா! பத்தாவது வரை படித்திருக்கிறேன்! பத்தாவதில் தோல்வி!"*

*"ஏதாவது தொழில் செய்யும் முயற்சி!"*

*"ஒன்றும் தெரியாது ஐயா!"*

*"அதுசரி!...! உனக்குக் கைகள் உள்ளனவா?*

*"ஐயம் என்ன ஐயா!"*

*"உழைக்கும் கைகள் தானே...!"*

*மாறன், வெட்கத்தால் தலையை மெள்ளச் சாய்த்தான்!*

*"உனக்கு உள்ளம் இருக்கிறதா" என்று கேட்டார் பெரியவர்.*

*"ஐயா, அப்படியென்றால்?" என்றான் மாறன்.*

*"உன்னுடைய சங்கடத்திலிருந்து நீங்க வேண்டும் என்று ஆசைப்படுகிறாயா?*

*"ஆம், ஐயா!"*

*"அதற்குரிய முயற்சியில் ஈடுபடத் தூண்டும் உள்ளத்தினை - மனத்தினைப் பெற்றிருக்கிறாயா?*

*"இருக்கு ஐயா! ஆனால் இல்லையென்று சொல்லக் கூடிய அளவுக்குத்தான் இருக்கிறது!"*

*"மாறா! எதைப்பற்றியும் கவலைப்படாதே! அழாதே! அயர்ந்து உட்காராதே! உள்ளக் கிளர்ச்சியைத் தூண்டிக் கொள்க! உள்ளத்தைப் பெறுக! கிடைத்த பணி எதுவானாலும் செய்க! அதனைக் கொண்டு மற்றப் படிகளைக் கடந்து மேலே ஏறுக! ஏறுக! நினைத்தவையெல்லாம் நடக்கும்! வறுமை உன் வீட்டிலிருந்து வெளியேறும்!..ம்.. எழுந்திரு! உள்ளத்தினைப் பெறுக!*

**"உள்ளம் உடைமை, உடைமை!"**

## 11

புண்ணியகோடி மிகவும் நல்லவர். பள்ளியிறுதி வரை படித்தவர்; நடுத்தரக் குடும்பத்தினர்; உழுவித்து உண்பவர். வளமும் இல்லை - வறுமையும் இல்லை! நிறைய நேரம் உண்டு! இந்த நேரங்களில் தமிழறிஞர்களுடன் கலந்துரையாடி மகிழ்வார்; திருக்குறள் படிப்பார். ஒருநாள் ஒரு தலைமுறைப் பாவலரிடம் திருக்குறளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்" (குறள்–61)

என்ற திருக்குறள் பற்றிக் கலந்துரையாடல் நிகழ்ந்தது.

பாவலர் திருக்குறளுக்கு வெள்ளைப் பொருளாக, "ஐந்து பொறிகளை அவித்தவன், இறைவன் நெறி நின்று ஒழுகுபவன்" என்று பொருள் கூறினார். "அவித்தல்" என்பதற்கு அடக்கல் என்று பொருள் கூறினார். மேலும் அடக்கல் என்பதற்குத் துய்க்காமை என்றும் அனுபவியாமை என்றும் கற்றுக் கொடுத்தார். அப்பாவி புண்ணியகோடி அன்று முதல் நற்காட்சிகளைக் காண்பதில்லை. இருட்டறையிலேயே காலத்தைக் கடத்தினார். காதுகளால் கேட்பதில்லை. சுவையுள்ள உணவு உண்பதில்லை. எதையும் முகர்வதில்லை. மனைவியுடன் பேசுவதில்லை என்று நோன்பு கொண்டார். வாழ்க்கை இருளைக் கவ்வியது! உடல் நோயுற்றது! கவலை ஆட் கொண்டது!

புண்ணியகோடிக்கு மருத்துவம் செய்ய ஒரு நாட்டு மருத்துவர் அழைக்கப் பெற்றார். அம்மருத்துவர் புண்ணிய கோடியின் உடலை ஆய்வு செய்து நோய் பற்றி அறிந்தார். நோயின் காரணம் கண்டறியப் முற்பட்டார். கண்டு கொண்டார். அழுவதா? சிரிப்பதா? என்ற நிலைக்கு ஆளானார்! அழுதால் புண்ணியகோடி இறந்து விடுவார்

என்று கருதி மற்றவர்களும் அழுவர்! சிரித்தால் எள்ளல், பரிகசித்தல் என்று மற்றவர் வெகுளுவர்! புண்ணிய கோடியுடன் பேசினார், நாட்டு மருத்துவர். "பசிக்கிறது!" என்றார் புண்ணியகோடி! மனைவியை அழைத்து இரண்டு இட்லி அவித்துக் கொண்டு வரும்படி கேட்டுக் கொண்டார். புண்ணியகோடியின் வாசகத்தை மருத்துவர் பிடித்துக் கொண்டார்.

"ஐயா, இட்லி அவித்தல் என்றால் என்ன?" என்றார் மருத்துவர்.

"மாவை இட்லியாக, பக்குவமாக அவித்தல்" என்றார் புண்ணியகோடி.

பேச்சு தொடர்ந்தது!

"தொட்டுக்க என்ன செய்யலாம்?"

"இரண்டு கிழங்கு...... அவிக்கலாம்!"

"அப்படியானால் என்ன? அவித்தல் என்றால் சமைத்தல் பக்குவப்படுத்தல், உண்ணத்தக்கதாகச் செய்தல் என்பது பொருள்!"

"அப்படியானால்" பொறி வாயில் ஐந்தவித்தல் என்றால்?"

"அதுவும் அப்படித்தான் ஐயா! நமது பொறிகளாகிய ஐம்பொறிகள் மெய், வாய், கண், மூக்கு, செவி முதலியன தன்னலத்தின் காரணமாகப் பக்குவம் இல்லாமல் இருக்கின்றன! பண்பட்ட பயிற்சி இன்மையின் காரணமாகத் தீமை செய்கின்றன. சுய நலத்தின் காரணமாகச் சமூகத் தன்மையை இழந்துள்ளன. இவற்றை நாம் மற்றவர்களுடன் கூடிப் பழகுதலுக்குத் தக்கவாறு பக்குவப்படுத்த வேண்டும். முரட்டுத் தனத்தை அடக்க வேண்டும். மற்றவர்கள் நம்முடன் கூடி வாழத்தக்க நிலையில் நம்முடைய பொறிகள் பக்குவத் தன்மை உடையனவாக, ஈர்த்து அணைக்கும் இயல்பினதாக

விளங்க வேண்டும். அப்படிப் பக்குவப் படுத்திக் கொண்டு வாழ்வோர் ஒழுக்கமுடையோர். இறை நெறி நிற்போர். இவர்கள் பல்லாண்டு வாழ்வர்!" என்று விளக்கினார் மருத்துவர்.

"ஐயா, மருத்துவர் அவர்களே! என் அறிவுக் கண்ணைத் திறந்தீர்கள்" என்றார் புண்ணியகோடி.

"நன்றாக வாழுங்கள்! துய்ப்பன துய்த்து மகிழ்ந்து வாழுங்கள்! இன்புறுத்துங்கள்! இன்புறுங்கள்! வையம் உண்ண உண்ணுக! வையம் உடுத்த உடுத்துக! வையம் மகிழ்ந்து வாழ வாழுங்கள்! இதுவே திருக்குறள் வழி!

## 12

**சா**த்தன் நல்ல புத்திசாலி. உழைப்பாளியும் கூட. எல்லோருடனும் பழகுவார்; எளிதில் நட்பு பிடிப்பார்; பணப் புழக்கம் நன்றாகச் செய்வார்; கூட்டு வியாபாரங்களையும் எளிதில் தொடங்குவார்; எடுத்தவுடன் எல்லோரையும் நம்பி விடுவார். ஆயினும் முன் கோபம் உடையவர். ஐயப்பட்டால் தெளிவிப்பது கடினம்; மூர்க்கத்தனமான பிடிவாதகுணம் உடையவர்; சொன்னதையே சொல்லிக் கொண்டிருப்பார். மற்றவர்கள் சொல்வது அவருடைய காதில் ஏறாது. கேட்டுக் கொள்ளவும் மாட்டார்; பல நாள் பழக்கத்தைக் கூட ஒரு அற்பமான செய்தியில் முறித்து விடுவார். மிகத் தீவிரமான குணங்களுடைய பாத்திரம் சாத்தன்.

இவருக்கு வாய்த்த ஒரு நண்பர் இராமன். இரண்டு பேரும் மிகவும் நெருங்கிப் பழகினார்கள். எங்கும் இருவரு மாகவே சென்றனர். இராமன், சாத்தனைப் புகழ்ந்து எல்லாம் பேசினான்! விழாக்கள் எடுத்தான்! சாத்தன் மிகவும் மயங்கி விட்டார்! தனது நிறுவனத்திலேயே மேலாளர் பதவியும் இராமனுக்குக் கொடுத்தார்! நிர்வாகம் கைக்கு வந்தவுடன்

இராமனின் குணம் மாறியது. சாத்தனைக் கலக்காமலே காரியங்களைச் செய்தான்! சாத்தன் ஆத்திரப்பட்டார்! பரபரப்பாகச் சிந்தித்தானே தவிர, ஆய்வு செய்தானில்லை! வரலாற்றுப் போக்கினை எண்ணினானில்லை! எரிச்சலுக்கு ஆளானார்! ஆத்திரம் அறிவை மறைத்தது. விவேகத்தை விலைக்குக் கொடுத்துவிட்டான்! அதனால் திடீரென்று இராமனை மேலாளர் பதவியிலிருந்து நீக்கி விட்டார். இராமன் அடிபட்ட பாம்பானான்! படமெடுத்து ஆடினான்! இரண்டு பேரிடமும் நீங்காத வன்மம் வளர்ந்தது! சாத்தனை இராமன் மிகவும் கேவலமாகப் பேசினான்! ஏசினான்! அவதூறு செய்தான்! சாத்தனை அழிப்பதே இராமனின் குறிக்கோளாயிற்று! இராமன், சாத்தனின் நிறுவனத்தை மூடக் கூடிய அளவுக்குத் தீவிரமானான்!

இந்த நிலையில் இவர்களிடையே கடும்பகை வளர்ந்தது! நிறுவனத்தில் பணி நடை பெறவில்லை. ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்கு நல்லது தானே! வன்மத்தின் உச்ச நிலையில் சாத்தன் நிற்கிறார். இந்த நிலையில் அருளடிகள் இவர்கள் விவகாரத்தில் தலையிட்டார். “பகைமையை மறந்திடுக! பழைமையைப் பாராட்டுக!” என்றருளிச் செய்தார். சாத்தன் சிந்தித்தார்! அருளடிகளின் உரை, உரையாக மட்டுமல்ல! அனுபவமுடைய ஆசிரியனாக வேலை செய்தது! இருவரும் நட்பு கொண்டார்கள்.

**வன்மம் வாழ்வைக் கெடுக்கும்!**
**வன்மம் விடுக! வாழ்வில் இணைந்திடுக!**
**இன்பம் சூழும்! எல்லாரும் வாழ்ந்திடலாம்!**

## 13

தஞ்சையைச் சேர்ந்த கருணானந்தம் நல்ல புத்திசாலி; உழைப்பாளி! காரியசாதனை உடையவர். அவர் அங்கத்தினராக உள்ள எந்த அமைப்பிலும் தாமே அந்த

அமைப்பாக ஆகிவிடும்படி நடந்து கொள்வார். மற்றவர்களும் வேறு வழியின்றி ஒத்துழைப்பர். எனவே அவர் வளர்ந்தார்; வளம்பல சேர்த்தார்! இவருக்கு மிகவும் வேண்டியவராக இருந்த திருச்சிராப்பள்ளி இராமு உள்ளூரப் பொருமிக் கொண்டிருந்தார், தனக்கு ஒன்றும் கிடைக்க வில்லையே என்று! தனிக் கடையும் வைத்துவிட்டார்.

முதலில் கருணானந்தம் போல் அல்லாமல் நல்லவராகவும் இருந்தார். கருணானந்தம் இராமு கடையை மூடும்படி செய்வதற்காகக் கடுமையான முயற்சிகளை மேற்கொண்டார். பெரிய சேட் ஒருவருடன் கூட்டுச் சேர்ந்து கொண்டு போட்டியாக இராமு கடைக்கு எதிராகக் கடை திறந்து பார்த்தார். கருணானந்தத்துக்குத் துணையாக வந்த சேட்டுக்கோ கருணானந்தத்தின்மீது பிரியமில்லை. இவர் திறமைசாலி, நம்மையே விழுங்கி ஏப்பமிட்டு விடுவார் என்று பயந்து இராமு பரவாயில்லை என்று கருதி இராமுவுடன் கூட்டுச் சேர்ந்து கொண்டார். கருணானந்தம் பாடு திண்டாட்டமாயிற்று! ஆத்திரம் பொங்கியது! திட்டினார்! கள்ள வாணிகம், கையூட்டு, கருப்புப்பணம், வரி ஏய்ப்பு, சேட்டுக்கு அடிமை என்றெல்லாம் வசைமாரி பொழிந்தார்! இராமு, புத்திசாலி! அவர் தம்மீது உள்ள குற்றங்கள் எல்லாம் கருணானந்தத்திடம் கற்றுக்கொண்டவையே என்றார்! மக்கள் இராமுவிடம் அனுதாபம் காட்டினர்! இராமு வெற்றி பெற்றார்.

**இருவருக்கும் தொடர்புள்ள இழிவுகள்**
**என்றென்றும் நீங்கா!**

## 14

முத்துசாமிக்கு, கடவுள் பக்தி அதிகம். எப்பொழுதும் கடவுளைக் கண்ணால் பார்க்க வேண்டும் என்ற ஆசை! நாள்தோறும் திருக்கோயில்களுக்குச் சென்றான். நாட்டில்

